# சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல்கள்

பெரியார் பல்கலைக் கழக முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**பு. பிரியங்கா**

**Ref : PU / COE / RD4 / 723 / 2012**

ஆய்வு நெறியாளர்

**முனைவர் கா. சந்திரசேகரன் எம்.ஏ.,எம்ஃபில்.,பி.எச்டி.,**
உதவிப் பேராசிரியர்,
அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி,
நாமக்கல்-637 002.



**தமிழ்த் துறை**
**அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி**
(பெரியார் பல்கலைக் கழக இணைவு பெற்றது)
நாமக்கல் – 637 002.

**நவம்பர் - 2015**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் கா. சந்திரசேகரன்,**
தமிழ் உதவிப் பேராசிரியர்,
தமிழ்த் துறை,
அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி,
நாமக்கல்-637 002.

அறிஞர் அண்ணா அரசுக் கலைக் கல்லூரி தமிழ்த் துறையில் முழுநேர முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காக **"சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல்கள்"** என்னும் தலைப்பில் **பு. பிரியங்கா** செய்துள்ள இந்த ஆய்வு என்னுடைய மேற்பார்வையின் கீழ் அவருடைய சொந்த முயற்சியால் உருவாக்கப்பெற்றது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம் : நாமக்கல் நெறியாளர்

நாள் :

(கா. சந்திரசேகரன்)

தமிழ் துறைத் தலைவர்

(சி. பானுமதி)

# ஆய்வாளர் உறுதிமொழி

பு. பிரியங்கா,
முழு நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த் துறை,
அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி,
நாமக்கல்-637 002.

**“சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல்கள்”** என்னும் தலைப்பில் முழு நேர முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக செய்யப் பெற்ற இந்த ஆய்வு என்னுடைய சொந்த முயற்சியால் உருவாக்கப் பெற்றது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

இடம் : நாமக்கல் ஆய்வாளர்

நாள் :

(பு. பிரியங்கா)

## நன்றியுரை

இப்பூலகில் என்னையும் அவதரிக்கச் செய்த இறைவனுக்கு என் முதற்கண் நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

என்னைப் பெற்றெடுத்த தாய் தந்தையரான **பு. ராஜலட்சுமி** அவர்களுக்கும் **பொ. புகழேந்தி** அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நிலவுலகில் என்னை சிறந்த முறையில் வழிநடத்திச் செல்லும் நன்செய் மாரியம்மனுக்கும் எனது நன்றியை காணிக்கையாக்குகின்றேன்.

**“சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல்கள்”** என்னும் தலைப்பில் நான் முனைவர் பட்ட ஆய்வு செய்ய அனுமதித்து உதவிய பெரியார் பல்கலைக் கழகத்திற்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரித் தமிழ்த் துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளராக நான் ஆய்வு மேற்கொள்ள உதவிய கல்லூரியின் முதல்வர் அவர்களுக்கும், தமிழ்த் துறை தலைவர் **சி.பானுமதி** அவர்களுக்கும், தமிழ்த்துறை பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

“சங்க இலக்கிய குறிஞ்சித் திணைப் பாடல்கள்” என்னும் ஆய்வு செய்தவதற்கு வழிகாட்டியாக அமைந்து என்னை நெறிப்படுத்திய இவ்வாய்வின் மேற்பார்வையாளர் முனைவர் **கா.சந்திரசேகரன்** அவர்களுக்கு என் நன்றியை காணிக்கையாக்குகின்றேன்.

இந்த ஆய்வேடு சிறப்பாகவும், செம்மையாகவும் அமைவதற்கு உதவிய எனது கணவரான **ச.சரவணன்** அவர்களுக்கும்

என் மகள் ச. தேவஸ்ரீ அவர்களுக்கும் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரியில் என்னுடன் பயின்ற முனைவர் பட்ட ஆய்வாளர்கள் அனைவருக்கும் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுத் தொடர்பான துணைமைத் தரவுகளைத் திரட்ட உதவிய பெரியார் பல்கலைக் கழக நூலகர், நூலக உதவியாளர்கள் மற்றும் அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி நூலகப் பொறுப்பாளர் அவர்களுக்கும் எனது நன்றியை தெரிவிக்கின்றேன்.

மேலும் இவ்வாய்வேட்டினைத் தெளிவான முறையிலும், சிறப்பாகவும் தட்டச்சு செய்து கொடுத்து உதவிய நன்செய் இடையாறு ரமேஷ் கணினி நிறுவனத்தாருக்கும் எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்றென்றும் நன்றியுடன்.....

பு. பிரியங்கா

## பொருளடக்கம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | அகம் | - | அகநானூறு |
| 2. | அகத் | - | அகத்திணையியல் |
| 3. | இளம் உரை | - | இளம்பூரணர் |
| 4. | இறை அகப் | - | இறையனார் அகப்பொருள் |
| 5. | ஐங் | - | ஐங்குறுநூறு |
| 6. | கம்ப | - | கம்பராமாயணம் |
| 7. | கலி | - | கலித்தொகை |
| 8. | கற்பு | - | கற்பியல் |
| 9. | குறள் | - | திருக்குறள் |
| 10. | குறுந் | - | குறுந்தொகை |
| 11. | நூற் | - | நூற்பா |
| 12. | சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| 13. | சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| 14. | தண்டி | - | தண்டியலங்காரம் |
| 15. | திருமுருகு | - | திருமுருகாற்றுப்படை |
| 16. | தொல் | - | தொல்காப்பியம் |
| 17. | தொல்.கள | - | தொல்காப்பியம் களவியல் |
| 18. | நச்.உரை | - | நச்சினார்க்கினியர் உரை |
| 19. | நற் | - | நற்றிணை |
| 20. | ப | - | பக்கம் |
| 21. | பா.எண். | - | பாடல் எண் |
| 22. | பக் | - | பக்கங்கள் |
| 23. | பரி | - | பரிபாடல் |
| 24. | பட்டினப் | - | பட்டினப்பாலை |

| | | | |
|---|---|---|---|
| 25. | புறம் | - | புறநானூறு |
| 26. | பொருந | - | பொருநராற்றுப்படை |
| 27. | பெரும் | - | பெரும்பாணாற்றுப்படை |
| 28. | பொருள் | - | பொருளதிகாரம் |
| 29. | பெரும்பாண் | - | பெரும்பாணாற்றுப்படை |
| 30. | ம. காஞ்சி | - | மதுரைக்காஞ்சி |
| 31. | மு.நூ. | - | முதற்நூல் |
| 32. | மேலது | - | மேற்கண்டவாறு |
| 33. | P | - | Page |
| 34. | Vol | - | Voluom |

# முன்னுரை

இலக்கியங்கள் தாம் தோன்றிய காலத்து மக்களின் வாழ்க்கை நிலையைச் செம்மையாக வெளிப்படுத்துகின்றன. இலக்கியம் வாழ்க்கையிலிருந்து பிறக்கிறது, வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறது. வாழ்க்கைக்கு வழிகாட்டுகிறது என்று கார்லைஸ் (Caryle) குறிப்பிடுகிறார். மொழியை ஊடகமாக கொண்டு வெளிவரும் வாழ்க்கை ஆய்வே இலக்கியம் என்று ஹட்சன் (Hedson) குறிப்பிடுகிறார். இவ்வறிஞர்களின் விளக்கங்கள் பொருந்தக்கூடிய செம்மையினைச் சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. இவ்விலக்கியங்கள் கற்பனைகளிலிருந்து உருவானவையல்ல, கண்முன்னர் காட்டப்பட்ட வாழ்க்கையை பிரதிபலிப்பவை.

மனித அறிவு இயற்கைப் பேராற்றலை எல்லாவகையிலும் எல்லா மக்களும் சமமாகப் பகிர்ந்து சமமாக அனுபவித்து வாழ்தல் என்பதன் இன்ப அனுபவத்தில் திளைக்கும் நோக்கில் சங்க இலக்கியங்கள் உலகளாவிய கருத்துக்களை உவந்தளிக்கின்றன. சக உயிர்கள் இன்புற்று வாழ்வதற்கான அறத்தை செம்மைப்படுத்தி, புதியதன சிந்திக்க வைத்து அதன் வழி புதியதன கண்டறிந்து புதிய நல்வாழ்வை அமைத்துக் கொண்டது. தமிழ் சமுதாயம் மானிட நல்லுறவுகளைக் குடும்பத்திலும், சமூகத்திலும் நாட்டிலும் உலகிலும் மிக இணைந்து அரவணைத்து ஏற்படுத்த இலக்கியம் வழிகாட்டியாக அமைந்திருக்கிறது.

சங்க இலக்கியங்கள் உலகத்தின் எந்த மூலைக்கும் எடுத்துச் சென்று கற்கவும் கற்பிக்கவும் சிந்திக்கவும் ஏற்ற வகையில் அமையப்பெற்றவை. சங்க இலக்கியங்கள் காலங்கடந்து நின்று சீர்மிகு சிறப்புகளைத் தரணியெங்கும் பரப்பித்து தனி முரசு கொட்டும் வாழ்வியல்

களஞ்சியங்கள் ஆகும். இவ்விலக்கியங்கள் மக்களின் குறிக்கோள்களையும், நோக்கங்களையும் வலியுறுத்தும் தன்மையுடையனவாக விளங்குகின்றன. நிகழ்காலத்திற்கும், எதிர்காலத்திற்கும் ஏற்றவாறு மக்களின் எண்ணங்களை மாற்றியமைக்கும் பெட்டமாகத் திகழ்கின்றன. இத்துணை சிறப்புகள் பொருந்திய சங்க இலக்கியங்கள் அகப்பொருள், புறப்பொருள் பற்றிய வாழ்வியல் உண்மைகளை எடுத்துரைக்கின்றன.

## ஆய்வின் இன்றியமையாமை

மக்களின் உண்மையான உணர்வுகளையும் கருத்தாக்கங்களையும், களவு, கற்பு வாழ்வின் விழுமியங்களையும், மன்னர்களின் அறம் வழுவாத ஆட்சி சிறப்புகளையும், அவர்களை அவ்வப்போது இடித்துரைத்து நல்வழிப்படுத்தும் புலவர்களின் புலமைத்திறனையும் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. மனித சமுதாயத்தின் கட்டுக்கோப்பான ஒழுக்கத்தையும், இயற்கை சார்ந்த வாழ்வியலையும், அறம் வழுவாத நெறியையும், சிறந்த பண்பாட்டையும் சங்க இலக்கியங்கள் முன்மொழிந்துள்ளன.

இந்நோக்கில் சங்க இலக்கியங்களில் காணக்கிடக்கும் மாந்தர்களின் உணர்வுகளையும் உணர்ச்சிகளையும் உளவியல் சார்ந்த நோக்கத்தில் ஆராயப்படுவதே இன்றைய மக்களின் எண்ணங்களுடன் இவை வேறுபடும் தன்மையை காண சிறந்த வழிமுறையாகும். இன்றைய காலகட்டத்தில் குறிப்பிட்ட நிலம் சார்ந்த மக்களின் வாழ்வியலை சங்க காலத்தோடு ஒப்பிடுகையில் சங்க கால மக்களின் மரபு மாறாத வாழ்க்கையையும், புலவர்களின் நுண்மான் புலத்தையும் அறிய இவ்வாய்வு இன்றியமையாததாகிறது.

## ஆய்வின் நோக்கம்

சங்க இலக்கியம் பழந்தமிழர் வாழ்க்கையின் புதையல். பழந்தமிழகத்தின் வாழ்வியல் கருவூலம். ஐவகை நிலமக்களின் பண்பாட்டுப் பெட்டகம். செவ்வியல் சார்ந்த இலக்கியங்கள் நாற்பதொன்றில் சங்க இலக்கியங்களும் உள்ளடங்கியவையாகும். இவ்வகையில் மலை சார்ந்த பகுதியான குறிஞ்சி நில மக்களின் அக வாழ்க்கை, பண்பாடு, கலாச்சாரம் பிற திணைகளோடு குறிஞ்சித் திணை பிறழ்ந்து வரும் தன்மை மற்றும் அகமாந்தர்களின் உளவியல் போக்குகள் பற்றி ஆராய்வதுடன் சங்கப் புலவர்களின் புலமைத் திறனையும் ஆராய்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுப் பொருள்

**“சங்க இலக்கியக் குறிஞ்சித்திணைப் பாடல்கள்” – ஓர் ஆய்வு** என்பது ஆய்வுப் பொருளாகும்.

## ஆய்வின் எல்லை

சங்க இலக்கிய எட்டுத்தொகைப் பாடல்களில் அகம் சார்ந்த குறிஞ்சித் திணைப் பாடல்கள் மட்டும் இவ்வாய்வின் எல்லையாகக் கொள்ளப்படுகிறது.

## ஆய்வின் கருதுகோள்

பிற திணைப் பாடல்களில் அந்நிலம் சார்ந்த மக்களின் வாழ்வியல் இயற்கை முப்பொருளுக்கேற்றவகையில் அமையப்பெற்றிருக்கும் தன்மையில் பாடப்பட்டுள்ளன. மேலும் நிலத்திற்கேற்ற முறையில் வாழ்வியல் கூறுகளும் வேறுபட்டுள்ளனவாக உள்ளன. அதில் குறிஞ்சி நிலத்தின் மரபு மாறாத வாழ்வினையும் இயற்கை சார்ந்த சூழலையும்

புலவர்களின் புலப்பாட்டுத் திறனையும் அறிவது தேவையாகிறது என்னும் கருதுகோளின் அடிப்படையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வுத் தரவுகள்

ஆய்வுக்குரிய தரவுகளை முதன்மைத் தரவுகள் என்றும், துணைமைத் தரவுகள் என்றும் வகைப்படுத்தப்படுகிறது.

## முதன்மைத் தரவுகள்

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட காலமான சங்க காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை நிலையை உணர மூலமாக இருக்கும் சங்க இலக்கியங்களான எட்டுத் தொகை நூல்கள் மட்டும் இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றுகளாக விளங்குகின்றன. மேற்கோளாகப் பத்துப்பாட்டு வரிகள் தேவையான இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

## துணைமைத் தரவுகள்

சங்க இலக்கிய நூல்கள், ஆய்வு நூல்கள், ஆய்வேடுகள், கலைக்களஞ்சியங்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆங்கில நூல்கள் ஆகியவை துணைமைத் தரவுகளாக எடுத்துக்கொள்ளப்பட்டன.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியங்களைப் பற்றி அறிஞர் பெருமக்கள் பலர் பல கோணங்களில் ஆராய்ச்சி செய்து வந்துள்ளனர். இன்றும் பல ஆய்வுப் பொருண்மைகளின் கீழ் ஆய்வு செய்து வருகின்றனர். இவை காலந்தோறும் புதிய சிந்தனையைத் தூண்டும் கருத்துக் கருவூலங்களாகத் திகழ்கின்றன. இவ்வகையில் சங்க இலக்கிய ஆய்வு நூல்களும் ஆய்வேடுகளும் இவ்வாய்வின் முன்னோடிகளாகும்.

1. பேராசிரியர் முனைவர். இலா. குளோறியா சுந்திரமதி அவர்களின் சங்க இலக்கியம் மருதம் என்னும் நூல் மருதத்திணைப் பாடல்களை தொகுத்து ஆராய்ந்துள்ளது.
2. முத்துக் கண்ணப்பர் என்பவர் நெய்தல் திணை பாடல்கள் பற்றி ஆய்வு செய்துள்ளார்.
3. ம.ரா.பொ. குருசாமி அவர்களின் ‘கபிலம்’ என்னும் நூலும் புலவர் ஒருவரால் எழுதப்பட்ட அனைத்து பாடல்களையும் ஒருங்கே வைத்து நோக்கும் ஆய்வுகளும் வெளிவந்துள்ளன.
4. முனைவர். விமலா அவர்களின் சங்க இலக்கியத்தில் கபிலர் பாடல்கள் என்னும் ஆய்வேடும் ஆராயப்பட்டுள்ளது.
5. முனைவர். இந்திரா மனுவேலின் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் ஆய்வேடும் (நூலாக வந்துள்ளது) இவ் ஆய்வுடன் தொடர்புடைய முன் ஆய்வுகளில் ஒன்றாகும்.

என்ற தலைப்புகளில் ஆய்வு செய்துள்ளனர். இத்தகைய ஆய்வுகளை முன்னிறுத்தியும் அவற்றிலிருந்து தனித்தன்மை உடையதாகவும் இவ்வாய்வு தன்போக்கைக் கொண்டுள்ளது.

## ஆய்வு அணுகுமுறைகள்

சங்க இலக்கிய நூல்களில் எட்டுத்தொகை நூல்களை ஆய்வுக்களமாகக் கொண்டு மேற்கொள்ளப்பெற்றுள்ள இவ்வாய்வில் கீழ்காணும் அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

1. வரலாற்று முறை அணுகு முறை (Historical Approach)
2. விளக்கமுறை அணுகு முறை (Descriptice Approach)
3. பகுப்பாய்வு அணுகு முறை (Analyfical Approach)
4. உளவியல் அணுகு முறை (Psychological Approach)

## ஆய்வின் பயன்

குறிஞ்சித் திணையை ஆய்வதின் மூலம் அக்கால மக்களின் வாழ்வியல், நில அமைப்பு, இயற்கை உயிரினங்கள், மக்களின் பண்பாடு சங்கப் புலவர்களின் புலமைத்திறன் போன்றவற்றை அறியப் பயன்படுகிறது.

## ஆய்வேட்டின் கட்டமைப்பு

சங்க இலக்கியக் குறிஞ்சித்திணைப் பாடல்கள் என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேட்டில் ஆய்வுச் செய்திகள் வகை தொகை செய்யப்பட்டுக் கீழ்வரும் ஐந்து தலைப்புகளில் இயல்களாக எழுதப்பெற்றுள்ளன.

## இயல் – 1, குறிஞ்சித் திணைப் பாடல்களில் முப்பொருளும் திணை மயக்கமும்

திணை என்ற சொல் நிலத்தையும் நிலத்தில் வாழும் மக்கள் மற்றும் பிறப் பொருள்களையும் குறித்து வருகிறது. மேலும் காலவளர்ச்சியில் மக்களின் உயர்ந்த ஒழுக்கத்தையும் அகப்புற ஒழுகலாற்றையும் உணர்த்தி வருகிறது என்பது தெரிகின்றது.

அன்பின் ஐந்திணைப் பொருட் முதற்பொருள், ஐவகை நிலங்களின் பெயர்க்காரணம், பொழுது, கருப்பொருள், தெய்வம், மக்கள் உயர்ந்தோர், தாழ்ந்தோர், ஊர், பறவை, விலங்கு, நீர், பூ, மரம், உணவு, பறை, பண், யாழ், தொழில், உரிப்பொருள் எட்டுத் தொகை குறிஞ்சிப் பாடல்களில் இடம் பெற்றிருப்பதை ஆராயப்பட்டுள்ளது.

குறிஞ்சித் திணை பாடல்களில் திணை மயக்கம், குறிஞ்சித் திணையில் பாலைத்திணை மயங்குதல், குறிஞ்சியியுள்ள மருதத் திணை

மயங்குதல் மற்றும் முல்லை மயங்குதல் போன்றவைகள் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

## இயல் – 2, உளவியல் நோக்கில் அகத்திணை மாந்தர்கள்

மனிதனின் உள்ளத்தினை அறிய முயற்சிக்கும் ஆய்வு முறையே உளவியல் ஆகும். மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை அவனுடைய செயல்பாட்டை கண்டு ஆராயும் துறை உளவியல் என அறியப்படுகிறது. இவை மனம், நடத்தை சார்ந்தது. இலக்கிய உளவியலை 1. படைப்பாளர் உளவியல், 2. படைப்பாக்க உளவியல், 3. பாத்திரங்களின் உளவியல், 4. வாசகரின் உளவியல் என நான்காகப் பகுக்கப்படுகிறது.

மகிழ்ச்சியோடு வாழும் மனிதன் துன்பம் வரும் போது மன முறிவை அடைகிறான். மனித மனம் பல்வேறு காரணங்களால் மன போராட்டத்தினைச் சந்திக்கிறது. மன முறிவாலும் போராட்டத்தினாலும் மன இறுக்கம் அடைகின்றான்.

அகத்திணை மாந்தர்கள் மனவியல்புகளும் உளவியல் போக்குகளும் விலங்குகளின் நடத்தைகளும் ஆராயப்பட்டுள்ளது. அகத்திணை மாந்தர்கள் உள்ளத் தவிப்பால் பிறழ்வு நடத்தை எனும் மடலேறும் நிலைக்கு தள்ளப்படுகினர். மக்களுடைய நல்வாழ்விற்கு யானை, புலி, கரடி, குரங்கு, மான், ஆடு, பசு போன்ற விலங்குகளின் நடத்தைப் பற்றிய ஆராய்ச்சி வழிகாட்டியாக அமைந்துள்ளது.

சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்களில் அகத்திணை மாந்தர்களின் தொல்காப்பியர் காட்டும் கனவு, குறிஞ்சிப் பாடல்களின் அணுகுதல் விலகுதல் போராட்டம், எதிர்பார்ப்புப் போராட்டம், உள்ளப் போராட்டம், அச்சம், அதீத எண்ணம், மன ஏக்கம், பிரிவுத் துன்பம், தலைவியின்

அறியாமை, உறுதியான மனநிலை பொய்மனம், காமவேட்கை, நினைவு மனம், மன இறுக்கம் போன்றவற்றை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் – 3, குறிஞ்சிப் பாடல்களில் வாழ்வியலும் பண்பாடும்**

சமுதாயத்தின் ஓர் அங்கமாக விளங்குவது வாழ்வியலாகும். அரசியல், தனி மனித இயல்பு, பொருளாதாரம், சமயம், பண்பாடு, குடும்பம், திருமணம், நம்பிக்கைகள் மற்றும் பல்வேறு சடங்குகள் ஆகியவற்றை வெளிப்படுத்துவதே வாழ்வியலாகும்.

தொல்காப்பியர் வாழ்வியலை, அகவாழ்வு, புறவாழ்வு என்று இரு கூறாகப் பாகுபடுத்தியுள்ளார். சங்க இலக்கிய பாடல்கள் ஒவ்வொன்றும் வாழ்வின் பல்வேறு நிலைப்பாடுகளைப் படம் பிடித்து காட்டுகின்றன.

சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப்பாங்கின் வெளிப்பாடே பண்பாடு என்ற கருத்து அறியப்பட்டுள்ளது.

சங்க குறிஞ்சித்திணைப் பாடல்களில் பழந்தமிழ் பண்பாட்டுக் கருத்துக்கள், கொள்கைகள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், விருந்தோம்பல், சான்றோர் இயல்பு, பழந்தமிழ்ப் பண்பாட்டில் கலந்துள்ள அரியப் பண்பாட்டுக் கூறுகள் போன்றவற்றை தெளிவாக ஆராயப்பட்டுள்ளது.

**இயல் – 4, குறிஞ்சித் திணைப் பாடல்களில் அகப் பொருள் மரபுகள்**

சங்கப் பாடல்கள் அகம், புறம் என்ற இரும்பெரும் பிரிவுகளைக் கொண்டு விளங்குகின்றன. சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் கூறும் செய்திக்கேற்பத் துறைகளையும் கூற்றுக்களையும் அமைந்துள்ளனர். திணை, துறை அமைப்பு சங்க குறிஞ்சிப் பாடல்களில் இன்றியமையாததாக விளங்குகிறது.

இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற்கூட்டம் என்பன களவொழுக்கத்தின் முதல்படி நிலைகளாக அமைந்துள்ள முறையை அறிய முடிகின்றது.

வரைவு, வரைவு மலிதல், வரைவு கடாதல், வரைவு நீட்டித்தல் போன்ற துறையிலமைந்த பாடல்களில் தன் நெஞ்சுக்குத் தலைவன் தானே திருமணம் செய்யக் கருதும் கருத்துக் கொண்ட குறிப்புக் கிடைக்கின்றன. பிரிவு பற்றிய துறையில் அமைந்த பாடல்களும் குறிஞ்சி நிலத்தின் அகமரபினைப் பற்றி குறிப்பிடுகின்றன.

அறத்தோடு நின்று வேற்று வரைவு மாற்றுதல் அகப்பொருள் மரபு என்பதை விட தமிழர் பண்பாடு எனலாம். வெறியாடல், அலர் கூற்றுதல், இற்செறிப்பு, பசலைபாய்தல், உடன்போக்கு, கையுறை, மடலேறுதல், குறிப்பேறுதல், கழற்றெதிர்மறை, தூதுவன்புறை, வாயில் மறுத்தல் போன்ற அகப்பொருள் மரபுகள் பழந்தமிழ் மக்கள் மரபாக பின்பற்றி வந்தமை இவ்வியலில் மூலம் ஆராயப்பட்டுள்ளன.

## இயல் – 5, குறிஞ்சித் திணைப் பாடல்களில் இலக்கிய நயம்

இலக்கியங்கள் கேட்டு உய்த்துணரக் கூடிய வகையில் அமைய வேண்டுமெனில் அவற்றில் சுவை பயக்ககூடிய நயங்கள் இருக்க வேண்டும். சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல் அனைத்திலும் அச்சுவைக் கூறுகள் நிரம்பக் காணப்படுகின்றன.

உவமை, உவமையின் நிலைக்களன், உவமையின் வகை, உவமையின் சிறப்பு, உவமையின் பயன், உள்ளுறை, இறைச்சி, உருவகம், வருணனை, இயற்கை நிலை, காட்சி வருணனை, கற்பனை நயம், அணி நயம், உருவகம், நனவோடை, இசை நயம், ஒலி நயம், சொல் நயம், உரையாடல், கதைக் கூறுகள் போன்றவைகள் குறிஞ்சித் திணைப்

பாடல்களில் இடம் பெற்று பாடல்களை பிடித்து இன்புறுத்தக்க வகையில் அமைந்துள்ளன. இந்நயங்கள் சங்கப் புலவர்களின் புலமைத் திறனுக்கும், புலப்பாட்டுத் தன்மைக்கும் எடுத்துக்காட்டுவனவாக அமைந்துள்ளதை இவ்வியலின் மூலம் அறிய முடிகின்றது.

**முடிவுரை**

ஆய்வில் ஐந்து இயல்களின் வழியாக ஆராய்ந்து கண்டறியப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. மேலும் இத்தலைப்பை அடித்தளமாகக் கொண்டு எதிர்காலத்தில் மேற்கொள்ளத்தக்க ஆய்வுக்களங்கள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியல்**

ஆய்வுக்குத் துணை செய்த நூல்களை அகர வரிசையில் அமைத்துத் துணைநூற்பட்டியலாக இணைக்கப்பட்டுள்ளன.

**பின்னிணைப்புகள்**

பின்னிணைப்புகளில் திணை வைப்பு முறை, சங்கப் புலவர்களின் குறிஞ்சித் திணைப்பாடல்கள் பாடிய விபரம் போன்றவை இடம் பெறுகின்றன.

# இயல் – 1

# குறிஞ்சித் திணைப் பாடல்களில் முப்பொருளும் திணை மயக்கமும்

## திணை

சிந்திக்கத் தூண்டும் தமிழ்ச் சொற்களில் தலைமை சான்று நிற்கும் சொல் ‘திணை’ என்பதாகும். சங்க காலச் சான்றோர் தம்முடைய அகப்புறப் பாடல்களைத் ‘திணை’ என்ற அடித்தளத்திலேயே அமைத்துக் கொண்டனர். தமிழிலக்கணக் கொள்கையும் தமிழிலக்கியக் கொள்கையும் ‘திணை’ என்ற சொல்லையே மையமாகக் கொண்டு சுழல்கின்றன. தமிழ் நாகரீக வளர்ச்சியும் பண்பாட்டு மலர்ச்சியும் ‘திணை’ என்ற ஆணி வேரிலேயே நிலைத்து நிற்கின்றன.

பொதுவாக தமிழாய்விற்கும் சிறப்பாகச் சங்கத் திணைப் பாடல்கள் ஆய்விற்கும் அடித்தளமாய் அச்சாணியாய் – ஆணிவேராய் அமைகின்ற ‘திணை’ என்பதன் நுண்பொருட்பேற்றைத் துருவி ஆராய்ந்தாலன்றிச் சங்கக் குறிஞ்சிப் பாக்களை ஆழ்ந்து நோக்கித் தெளிதல் அரிதாகும்.

எனவே, திணைப் பொருள் பற்றிய தெளிந்தோர் ஆய்வு மிகவும் முக்கியமானதாகும்.

## ‘திணை’ நிலத்தைக் குறித்தல்

‘திணை’ என்ற சொல் காரண இடுகுறியாய் முதலில் நிலத்தைச் சுட்டியிருக்கக் கூடும் என்பதற்குச் சங்க நூல்களில் தக்க சான்றுகள் உள்ளன.

மண்ணுக்குள் திண்மையுறச் செறிந்ததனால் அல்லது திணிந்ததால் ‘திணை’ என்ற சொல் முதலில் நிலத்தைக் குறித்ததாயிற்கு. திண் -

என்பது பகுதி, ‘ஐ’ என்பது விகுதியாகும். இதனை **“மண்திணிந்த நிலன்”**[1] என்ற புறநானூற்றுத் தொடர் மூலம் அறியலாம். ‘திணிதல்’ என்பதற்கு செறிதல் என்பது பொருள். மண்ணுக்குள் திண்மையுறச் செறிந்து அமைவது ‘நிலன்’ என்ற உண்மை இதனால் அறியலாம்.

**“திணைநிலங் கடந்தக்காற் றரிந்தயர்ந்த தகன்றோடி”**[2]

என்று பரிபாடலும்,

**“மண்தினி ஞாலம்”**[3]

என்று மணிமேகலையும்,

**“கானவர் மருதம் பாட அகவர்**
**நீனிற முல்லை பஃறிணை நுவலா”**[4]

என்று பொருநராற்றுப்படையும்,

**“ஐம்பாற் றிணையும் கவின் அமைவரா”**[5]

என்று மதுரைக் காஞ்சியும் திணை பற்றிய பொருள்களை உணர்த்துகின்றன. அதாவது நிலத்தையே திணை என்று குறிப்பிட்டுள்ளனர் என்பது அறிய முடிகின்றது.

## திணை – நிலத்துப் பொருளைக் குறித்தது

முதலில் நிலமென்ற இடத்தைக் குறித்த “திணை” அவ்விடத்தில் நிலவிய மக்களையும் மக்களல்லாத பிற பொருள்களையும் ஆகுபெயராய் சுட்டப்பட்டு வரலாம் எனக் கருதலாம். நிலைப் பொருளும் இயங்குப் பொருளும் நிலவுவதற்குரிய இடத்தைக் குறித்த ஒரு சொல் அவ்விடத்தோடு தொடர்புடைய பொருள்களைச் சுட்ட வருகின்ற குறியீடாக அமைவது தமிழ் மரபாகும்.

### திணை – வீட்டைக் குறித்தது

தமிழ் மக்கள் நாகரிகத்தின் முதற்படியில் காலெடுத்து வைத்தபோது கட்டத் தொடங்கியது வீடு. திண்ணையுறச் செறிந்த மண்ணை வெட்டிக் குழைத்து வீட்டைக் கட்டியதால் மூன்றாவது நிலையில் இருமடி ஆகுபெயராய் ‘திணை’ என்ற சொல் வீட்டைக் குறித்து வந்தது.

**“வலஞ்சுழி உந்திய திணைபிரி புதல்வர்**
**கயந்தலை முச்சிய முச்சமொடு தரீஇ”**[6]

என்று பரிபாடல் இதனை விளக்குகின்றது. இங்குத் “திணைபிரிபுதல்வர்”[7] என்பதிலுள்ள ‘திணை’ என்னும் சொல் வீட்டைக் குறித்து வந்திருப்பது நோக்கத்தகும். இதனால் இலக்கியத்திலும் ‘திணை’ வீட்டைக் குறித்து வந்ததை அறியலாம்.

திணை என்ற சொல் வீட்டையொட்டி உயர்ந்த திண்ணையையும் குறித்து நின்றதைப் பட்டினப் பாலையில் அறியலாம்.

### திணை – குடி, குலத்தைக் குறித்தது

காடு மேடுகளில் அலைந்து திரிந்து மக்கள் வீடு கட்டி ஓரிடத்தில் நிலைத்து வாழத் தலைப்பட்டபோது குடும்பங்கள் பெருகி குடியாக வளர்ந்தது பல குடிகள் இணைந்து பிணைந்து குலமாயிற்று. மேலும் திணை என்ற சொல் கால வளர்ச்சியில் மக்களின் ஒழுக்கத்தையே சுட்டி வந்தது எனலாம். இதனை,

**“ஆதியில் குடியிருப்பைக் குறித்த இச்சொல் (குடும்பமும் குழுவும் குடியிருப்புடன் பொருந்தியவை) கால வளர்ச்சியில் சொற்பொருள் மாறுதலடைந்து குடியிருப்பிலுள்ள மக்களின் ஒழுக்கத்தைச் சுட்டுவதாக மாறியிருப்பது சாத்தியமே”**[8] என்பர்.

முதலில் திண்மையுறச் செறிந்த நிலத்தைச் சுட்டி, பின்னர் நிலத்தில் நிலவிய மக்களையும், மக்களல்லாத பிற பொருளையுஞ்சுட்டி, அடுத்து வீட்டை உணர்த்தி, நான்காவது நிலையில் குடியிருப்பைச் சுட்டியதாகக் கொள்வதே பொருத்தமாகலாம்.

மக்கள் மனநிலையிலும், அறிவுநிலையிலும் வளர வளரச் சொற்பொருளும் வளர்ந்து வருவது இயற்கை. பண்டைத் தமிழர் மனநிலையிலும் அறிவு நிலையிலும் வளர்ந்தபோது குடிமை காரணமாக அல்லது குலத்தின் காரணமாக வேற்றுமை பாராட்டினார் அல்லர் என்பதைத் ‘திணை’ என்ற சொல் தெளிவிக்கின்றது.

**“வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து”**[9] என்றும்

**“விழுத்திணைப் பிறந்த களந்தொறுந் சென்று”**[20] என்றும் வருகின்ற புறநானூற்று வரிகளை நோக்கும்போது ‘திணை’ என்ற சொல் ‘குடிமை’ அல்லது ‘குலம்’ என்ற பொருளில் ஆட்சிப் பெற்றிருப்பதை அறியலாம். மேலும்,

**“தெறுவ கம்மவித் திணைப்பிறத் தல்லே”**

என்று குறுந்தொகையிலும்,

**“வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு**
**விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை”**[11]

என்று குறிஞ்சிப்பாட்டிலும் இதனை அறியலாம்.

### திணை – ஒழுக்கத்தை உணர்த்தல்

தமிழ்ச் சமுதாயம் அறிவிலும் உணர்விலும் வளர்ந்து முற்றிய நிலையில் ‘திணை’ என்ற சொல்லும் படிப்படியாகப் பொருள் நிலையில் வளர்ந்தோங்கி இறுதிநிலையில் மக்களின் உயர்ந்த வாழ்க்கை

முறையாகிய ஒழுக்கத்தையும் அகப்புற ஒழுகலாற்றையும் சுட்டி வந்தன. இதனை,

**"மேம்பட வெறுத்தவன் கொல்திணை மூதூர்"**[12]

என்று மலைபடுகடாம் உணர்த்துகிறது. இங்குத் திணையென்பது ஊர் மக்களுடைய உயர்ந்த ஒழுக்கத்தைச் சுட்டி நிற்கிறது.

**"பழையதாகிய உயர்ந்த ஒழுக்கமுடைய பழைய ஊர்"**[13] என்று நச்சினார்க்கினியர் தரும் பொருள் விளக்கமும் இங்கு நோக்கத்தக்கதாகும்.

**"அகத்திணை மருங்கின் அரிதல்ப உணர்ந்தோர்**
**புறத்திணை இலக்கணம் திறம்படக் கிளப்பின்**
**வெட்சிதானே குறிஞ்சியது புறனே"**[14]

என்ற தொல்காப்பிய நூற்பாவில் அகத்திணை, புறத்திணை என்ற சொற்றொடர்கள் அகப்புற ஒழுகலாற்றைக் குறித்து நிற்கின்றன.

இல்லற ஒழுகலாறு அகத்திணையென்றும் இல்லறத்திற்குத் துணையாய் பாதுகாப்பாய் அமையும் சமுதாய ஒழுகலாறு புறத்திணையென்றும் பொருள் கொள்ளப்படுகிறது.

## திணைப் பொருளாய்வின் முடிவு

முதலில் காரணக் குறியாய்ப் பருப்பொருளாகிய நிலத்தைச் சுட்டிய 'திணை' என்ற சொல் அடுத்து நிலத்தில் நிலவிய மக்களையும் மக்களல்லாத பிற பொருட்களையும் சுட்டியது, பின்பு நாகரிக வளர்ச்சியில் மக்கள் முதலில் கட்டிய வீட்டையும் குறித்து வந்தது. வீடு கட்டி மக்கள் ஓரிடத்தில் நிலைத்து வாழத் தலைப்பட்டபோது மக்களின் குடிப்பிறப்பையும், குலத்தையும் சுட்டத் தொடங்கியது. இறுதி நிலையில் நுண்பொருட்பேறு பெற்ற மக்களுடைய உயர்ந்த ஒழுக்கத்தையும்

அகப்புற ஒழுகலாற்றையும் உணர்த்தி வருகிறது என்று மேற்கண்ட ஆய்வின் மூலம் அறியலாம்.

### குறிஞ்சி

'குறிஞ்சி' என்பதன் பெயர் காரணம் பற்றி நிலவும் பல்வேறு மாறுபட்ட கருத்துக்களின் அடிப்படையில் கூர்ந்து நோக்கும்போது, குறிஞ்சி என்ற சொல் சங்க நூல்களில் மலை நிலைத்தையும் குறிஞ்சிச் செடியையும், குறிஞ்சிப் பூவையும், குறிஞ்சி யாழையும், குறிஞ்சிப் பண்ணையும், குறிஞ்சி ஒழுக்கத்தையும் சுட்டி வருகிறது.

### குறிஞ்சி – நிலப் பொருட்டாதல்

**"விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ"**[15]

என்ற வரியில் குறிஞ்சி என்ற சொல் மலையையும் மலை சார்ந்த இடத்தையும் குறித்து நிற்கின்றது. மேலும்,

**"குறிஞ்சிக் குறவர் மறங்கெழு வள்ளிதமர்**
**வித்தகத் தும்பை விளைத்தலான் வென்வேலாற்**
**கொத்தன்று தன்பரங் குன்று"**[16]

என்று பரிபாடலும்,

**"குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணி"**[17]

என்று சிறுபாணாற்றுப் படையும்,

**"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"**[18]

என்று தொல்காப்பியமும்,

**“முல்லையுங் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**

**நல்லியல் பிறழ்ந்து நடுங்குதுய ருறுத்துப்**

**பாலை என்பதோர் படிவுங் கொள்ளுங்**

**காலை எய்தினார்”**[19]

என்று சிலப்பதிகாரமும் தெளிவாக விளக்குகின்றன.

**குறிஞ்சி – செடியைச் சுட்டல்**

**“கடுங்கோல் குறிஞ்சி அடுக்கம் பாட”**[20]

என்ற புறநானூற்று வரியின் மூலம் ‘குறிஞ்சி’ என்ற சொல் குறிஞ்சிச் செடியைக் குறித்து வந்துள்ளமை புலப்படுகிறது. மேலும்,

**“கருங்கோல் குறிஞ்சி மதனில வான்பூ”**[21]

**“நின்மலைக் கலித்த பெருங்கோற் குறிஞ்சி**

**நாண்மலர் புரையும் மேனி”**[22]

**“கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே”**[23]

**“கருங்கோற் குறிஞ்சி நும் உறைவின் ஊர்க்கே”**[24]

**“கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பணிந்து”**[25]

என்ற சங்க இலக்கிய வரிகளின் மூலம் குறிஞ்சி என்பது ஒரு வகையான செடி என்பது விளங்குகின்றது.

**குறிஞ்சி – பூவைச் சுட்டல்**

**“கார்மலர் குறிஞ்சி குடி”**[26] என்று மதுரைக் காஞ்சியிலும்,

**“தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி”**[27] என்ற குறிஞ்சிப் பாட்டிலும் ‘குறிஞ்சி’ என்ற சொல் குறிஞ்சிப் பூவை சுட்டி வருவதைக் காணலாம்.

### குறிஞ்சி – பண்ணைச் சுட்டல்

சங்க நூல்களில் 'குறிஞ்சி' என்ற சொல் குறிஞ்சிப் பண்ணையும் சுட்டி வருவதைக் காணலாம்.

**"நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி**

**நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி"**[28]

என்ற வரிகள் மூலம் குறிஞ்சி என்ற சொல் குறிஞ்சிப் பண்ணைக் குறித்து வருவதை அறிய முடிகிறது. மேலும்,

**"வில்யாழ் இசைக்கும் விரலெறி குறிஞ்சி"**[29] என்ற பெரும்பாணாற்றுப்படை வரியும் இதை உணர்த்துகிறது.

### குறிஞ்சி – ஒழுக்கதைச் சுட்டல்

'குறிஞ்சி' என்பது கூடல் ஒழுக்கத்தைச் சுட்டும் சொல்லாகவும் ஆளப்பட்டுள்ளது.

**"காரும் மாலையும் முல்லை, குறிஞ்சி**

**கூதிர் யாமம் என்மனார் புலவர்"**[30] என்ற வரியும்

**"வெட்சி தானே குறிஞ்சியது புறனே"**[31] என்ற வரியும் குறிஞ்சி என்பது கூடலும் கூடல் நிமித்தமாகிய ஒழுக்கத்தையும் சுட்டி வருவதை உணர்த்துகிறது.

### குறிஞ்சி நிலத்தால் பெற்ற பெயர்

ஆழ்ந்து நோக்கும்போது நிலமே உயிர் வளர்ச்சிக்கும் பயிர் வளர்ச்சிக்கும் வாழ்வியல் – வரலாற்று வளர்ச்சிக்கும் அடிப்படை என்பதை உணரலாம். **"பெரும்பாலான நாடுகளில் நிலவமைப்பை ஒட்டியே தட்பவெப்பச் சூழ்நிலை உருவாகின்றது"**[32] தட்பவெப்பச் சூழ்நிலைக்கேற்பத் விலங்குலகம் உருவாகின்றது, தாவர விலங்கின வளர்ச்சிகேற்ப மக்களுடைய உணவும், உடையும், உறையுளும்,

தொழிலும், வாழ்க்கை முறையும், நாகரிகப் பண்பாட்டு எழுச்சியும் அமைகின்றன. இதுவே இயற்கையான வாழ்வியல் வளர்ச்சியாகும். அறிவியல் வளர்ச்சியால் இயற்கையைக் கட்டுப்படுத்திச் செயற்கையான மாற்றங்களை ஏற்படுத்த இன்றையநாள் நாகரிகம் விழைந்தாலும் வரலாற்று வழி ஏற்படுகின்ற இயற்கையான வாழ்வியல் வளர்ச்சியை முற்றிலும் மாற்றவோ மறைக்கவோ இயலாது.

'நிலம்' என்பது காரணப் பெயர், உயிர்கள் நிற்றற்குரிய இடம் நிலமெனப்பட்டது, ஒழுக்கம் உருவாதற்குரிய இடமும் அதுவே. நிலமென்று பொதுப்படக் கூறவே நிலத்தின் இருப்பும், அமைப்பும், தட்பவெப்பச் சூழலும், பருவமும் பொழுதும் அவ்வந்நிலங்களில் உருவாகும் தாவர உலகும், விலங்குலகும் அதில் அடங்கும்.

**"நிலம்மென்றதனால் பொருள் தோன்றுவதற்கு இடமாகிய ஐம்பெரும் பூதமும் கொள்க"**[33] என்கிறார் இளம்பூரணார்.

நிலத்தை 'தாய்' என்றால் மரம் செடி கொடிகளின் வளர்ச்சியைச் 'சேய்' என்று கூறலாம். நிலத்தை 'வித்து' என்றால் வாழ்வியல் வளர்ச்சியை 'விளைவு' எனலாம்.

தாயின்றிச் சேய் தோன்ற முடியுமா? வித்தின்றி விளைவு தோன்றுமா? நிலமின்றேல் பயிரேது? உயிரேது? வாழ்வியல் வளர்ச்சிதானேது? நிலமே யாவற்றிற்கும் மூலமாக அமைகின்றது. **"நிலநூல் வரலாற்றின் கருப்பையாகவும் வரலாற்றை வளர்க்கும் தாயாகவும் அதைக் கட்டுப்பாட்டுடன் உருவாக்கும் வீடாகவும் விளங்குகின்றது"**[34]

எனவே உயிரும் பயிரும் வளர்வதற்கும் ஒழுக்கம் நிலவுவதற்கும் நாகரிக, பண்பாடுகள் மலர்வதற்கும் நிலமே மூலதனமாக அமைவதால் 'குறிஞ்சி' என்பது நிலத்தால் பெற்ற பெயர் என்று கூறுவதே பொருத்தமாகத் தோன்றுகிறது. முதலில் மலை நிலத்தினைக் 'குறிஞ்சி'

என்ற பெயரால் சுட்டி, அச்சொல் ஆகுபெயராய் குறிஞ்சிச் செடி, பூ, ஒழுக்கம் ஆகியவற்றை குறித்து வந்தது. குறிஞ்சி என்பது நிலத்தால் பெற்ற பெயர் என்பதும் செடி, பூ, ஒழுக்கம் முதலிய பொருட்பேறுகள் ஆகுபெயர் பொருட்களால் அமைந்தன என்பதும் அறியப்படுகிறது.

## சங்க இலக்கியத்தில் குறிஞ்சித் திணை

மக்களின் வாழ்க்கை முறைகளை எழுதி வைக்கும் எண்ணத்தின் விளைவாகவே இலக்கியங்கள் தோற்றம் பெற்றன. அவ்விலக்கியங்கள் பல்வேறு பிரிவுகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

## தமிழ் நூல்களின் பிரிவுகள்

**“கால வெள்ளத்தை எதிர்த்து நீந்தி என்றென்றும் வாழும் தமிழ்மொழியின் இலக்கியச் செல்வங்களை நான்கு பிரிவிற்குள் அடக்கலாம். அவை, 1. இலக்கியம், 2. இலக்கணம், 3. தத்துவம், 4.கலை என்பனவாகும்”**[35] இந்நான்கு பிரிவினுள் இலக்கியமே முதலிடமும், முக்கியத்துவமும் பெற்று மக்கள் மனதில் நிலைத்துப் புகழப் பெற்றுள்ளது.

## இலக்கியம்

இலக்கு + இயம் = இலக்கியம். ஏதேனும் ஒன்றோ அல்லது அதற்கு மேற்பட்ட இலக்கு அல்லது குறிக்கோளினை எடுத்து இயம்புவதே ‘இலக்கியம்’ எனப்படும். இலக்கியம் வாழ்வின் கண்ணாடி அதாவது மக்களின் அன்றாட வாழ்க்கை முறைகள், பழக்கவழக்கங்கள், காதல், வீரம், விளையாட்டு முதலியவற்றையும் கருப்பொருளாகக் கொண்டு, அக்காலக் கட்டத்தில் உள்ள குறைகளையும், தேவைகளையும் கூறுவதோடு, பிற்காலத்தில் வரும் தலைமுறையினருக்கு வழிகாட்டியாகவும், உற்ற தோழமையாகவும் இருப்பது இலக்கியமாகும்.

**இலக்கியம் – இலக்கணம்**

**“இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் எனும் நூற்கொள்கையின் மூலம் முதன்மையையும் இலக்கணத்தின் கலையையும் அறியலாம்”**[36] இதனை உவமையால் விளக்கலாம். அதாவது,

**“இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே**
**எள்ளின் றாகில் எண்ணையும் இன்றே**
**எள்ளின்றெண்ணெய் எடுப்பது போல**
**இலக்கியத்தினின்றும் எடுபடும் இலக்கணம்”**[37] என்பர்.

அதாவது எள்ளும் எண்ணையும் ஒன்றையொன்று இணைந்தவையே. அதுபோல இலக்கியமும் இலக்கணமும் இயையுடையவை. இலக்கியம், இலக்கணம் என்னும் இரண்டு சொற்களின் முதனிலைகள் ‘இலக்கு’ என்பதே ஆகும். ‘இலக்கு’ என்னும் முதனிலை, இலக்கிய இலக்கணங்களின் படைப்பு, படிப்பு ஆகியவற்றின் அடிப்படையை நன்கு விளக்கு நிற்கின்றது.

**“இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பியது ஒரு நிலை. இலக்கணம் கண்டு இலக்கியம் படைத்தல் என்பது மற்றொரு நிலை இவற்றுள் இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புதலே இயற்கை முறையும், வளர்ச்சி முறையும் ஆகும்”**[38]

**சங்க இலக்கியம்**

சங்கம் வைத்து தமிழ் வளர்த்தனர் பாண்டியர். சங்கத்தை முச்சங்கமாக பிரிப்பர். அச்சங்களில் உறுப்பினர்களாக இருந்த புலவர்கள் இயற்றிய இலக்கியங்களே ‘சங்க இலக்கியம்’ ஆகும். அதனால் இக்காலத்தை ‘சங்க காலம்’ என்றும் ‘சங்க இலக்கிய காலம்’ என்றும் கூறுவர்.

‘தமிழன் என்று சொல்லடா தலை நிமிர்ந்து நில்லடா’ என்று பாடினார் நாமக்கல் கவிஞர். தமிழனைத் தலை நிமிர்த்தி நிற்குமாறு செய்வதே சங்க இலக்கியந்தான். இலக்கியம் வாழ்வின் கண்ணாடி என்றும், காலத்தைக் காட்டும் கண்ணாடி என்றும் கூறுவர். இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ் மக்கள் வாழ்ந்த வாழ்க்கையைக் கற்பனைக் கலப்பின்றிப் படம் பிடிக்கும் அற்புதக் கண்ணாடியே சங்க இலக்கியம்.

**“காதலும் போரும் பற்றிய பழைய பாடல்களில் கடல் கோளுக்கும் கறையானுக்கும் கால வெள்ளத்திற்கும் போக எஞ்சி நின்ற பாடல்களுள் சிறந்தவற்றைத் தொகுத்து அவற்றிற்கு ‘சங்க இலக்கியங்கள்’ என்று பெயரிட்டனர்”**[39]

பண்டைக் காலத்தில் வாழ்ந்த உலக மக்கள் அனைவரும் தங்கள் வாழ்க்கை இலட்சியங்களாகக் காதலையும், வீரத்தையும் கருதினர். பழம் பெருமை பெற்ற கிரேக்க, இலத்தீன் இலக்கியங்கள் போற்றி உரைப்பது போல சங்க கவிஞர்களும் இவ்விரு கருத்துக்களையே தங்கள் கவிதைகளில் சிறப்பாகப் பாடியுள்ளனர். மக்களுடைய பழக்கவழக்கங்கள், பண்பாடு முதலியன அவர்கள் வாழுகின்ற நில அமைப்பை பொறுத்துள்ளது என்ற அரிய உண்மையை வரலாற்று அறிவிற்கு எட்டாத காலம் தொட்டே பண்டைத் தமிழ் மக்கள் உணர்ந்து தமிழ்நாட்டு நிலங்களை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகைகளாகப் பகுத்து, அந்தந்த நில சூழ்நிலைக்கு ஏற்ப மனித உள்ளத்தெழும் உணர்ச்சிப் பெருக்குகளை ஐவகை ஒழுக்கங்களாக வகுத்து கவிதை புனைந்துள்ளனர். இத்தகைய சிறந்த இலக்கிய பாகுபாட்டை நாம் சங்க இலக்கியங்களில் தான் கண்டு களிக்க முடியும்.

**“கணக்கற்ற அலைகள் கூடிக் கடலாகக் காட்சியளிப்பது போல், சங்கக் கவிஞர்கள் அனைவரும் ஒன்றாகத் திரண்டு தத்தமக்குரிய தனி**

**இயல்பை இழந்து 'சங்க இலக்கியம்' என்ற ஒரு பேருருவமாகவே காட்சியளிக்கின்றனர்"**[40]

## இலக்கிய காலப் பிரிவுகள்

தமிழ் இலக்கியங்கள் தோன்றி வளர்ந்த காலப் பகுதிகளை கா.சு.பிள்ளை அவர்கள் ஏழு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றார். அவை,

**"1. சங்க காலம் (கி.மு. 200 - கி.பி. 100)**

**2. சங்கம் மருவிய காலம் (கி.மு. 100 - கி.பி. 300)**

**3. இருண்ட காலம் (கி.பி. 300 - கி.பி. 600)**

**4. பல்லவர் காலம் (கி.பி. 600 - கி.பி. 800)**

**5. சோழர் காலம் (கி.பி. 800 - கி.பி. 1200)**

**6. நாயக்கர் காலம் (கி.பி. 1200 - கி.பி. 1600)**

**7. ஐரோப்பியர் காலம் (கி.பி. 1600 - கி.பி. 1947)"**[41]

என்பதாகும்.

## பாட்டும் தொகையும்

**"தமிழகத்தில் ஆங்காங்கு வாழ்ந்த புலவர்கள், பாடல்களை இயற்றி, அவர்களிடத்திலேயே வைத்திருந்தனர். அப்பாட்டுகள் அடங்கிய ஓலைச்சுவடிகள் பல காலத்தால் அழிந்து விட்டன. அழிந்தவை போக எஞ்சியவற்றை கி.பி. முதல் நூற்றாண்டில் புலவர்களும், புரவர்களும் காப்பாற்ற முயன்றார்கள்"**[42] அம்முயற்சியினால் தொகுக்கப்பட்டவையே எட்டுத்தொகை நூல்களும் பத்துப்பாட்டுமாகும். இவையே சங்க இலக்கியமாகும்.

## எட்டுத் தொகை

எட்டுத்தொகை என்பது தனிமனிதப் படைப்பல்ல. பலர் பல காலங்களில் பல பொருள் பற்றிப் பாடிய நூல்களின் தொகுப்பு. **"தமிழில்**

**சுமார் 1800 ஆண்டுகளுக்கு முன்பே செம்மை வாய்ந்த நூல்கள் தோன்றின."[43]** இதனையே,

**"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியொடு அகம்புறமென்று**
**இத்திறத்த எட்டுத்தொகை"**

எனும் பழைய வெண்பா, எட்டுத்தொகை நூல்களின் பெயர்களை எடுத்துரைக்கின்றது. இவ்வெட்டனுள் குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, குறுந்தொகை ஆகிய ஐந்து நூல்களும் அகப்பொருளைப் பற்றி உரைக்கும் அக நூல்களாகும். புறநானூறு, பதிற்றுப்பத்து எனும் இவ்விரண்டு நூல்களும் புறப்பொருளைப் பற்றி உரைக்கும் புறநூல்களாகும். பரிபாடல் ஒன்று மட்டும் அகப்புற நூலாகும்.

இவ் எட்டுத்தொகை நூல்கள் பழந்தமிழர் தம் அகமும் புறமுமான ஒழுகலாறுகளை விளக்கி நிற்கின்றன. இந்நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு போன்றவற்றிலுள்ள குறிஞ்சித் திணைப் பாடல்கள் பற்றி ஆராயப்படுகிறது.

**அகம்**

ஆண் - பெண் உறவினை அகப்பொருள் எனலாம். தொல்காப்பிய உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர்,

**"ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்து பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் தமக்கு நேர்ந்த இன்பம் இத்தகைய என பிறருக்கு எடுத்து இயம்ப முடியாததாய் உள்ளத்துணர்வாய் அமைவதே அகம்"[42]** என்றார்.

**“அகம் என்னும் சொல், அடங்கியது, இடம், உள்ளிடம், மனம் போன்ற பல பொருள்களைக் குறிக்கும். உள்ளமாகிய மன உணர்வினால் நுகர்ந்து இன்பமும் காம இன்பத்தையும் ஆகுபெயராக இச்சொல் உணர்த்தும். ஓர் ஆணும் பெண்ணும் தனிமையில் கூடி இன்பம் நுகர்ந்தும், பின் ஊராறியத் திருமணம் புரிந்து வாழும் நிகழ்ச்சிகளை உள்ளடக்கிக் காண்பது அகப்பொருள் ஆகும்”**[43] என்பர்.

## அகத்திணை

அகப்பொருளின் திணைகள் ஏழாகும். இதனை தொல்காப்பியர்,

**“கைக்கிளை முதலாக பெருந்திணை இறுவாய்**

**முற்படக் கிளந்த எழுதிணை என்ப”**[44]

எனும் நூற்பா வழி, கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என எடுத்தியம்புகிறார். இவற்றுள் கைக்கிளை பெருந்திணையைத் தவிர ஏனைய ஐந்தும் நடுவண் ஐந்திணை என்றும் அன்பின் ஐந்திணை என்று பகுக்கிறார் தொல்காப்பியர்.

## அகப்பொருள் இலக்கிய மரபு

அகப்பொருள் இலக்கிய மரபினை,

**“நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**

**பாடல் சான்ற புலனெறி வழக்கம்”**[45]

எனத் தொல்காப்பியர் கூறுகின்றார்.

## அன்பின் ஐந்திணைப் பொருட்கள்

அன்பின் ஐந்திணைகளுக்கும் முதல், கரு, உரி எனும் மூன்று பொருட்கள் குறிக்கப்படுகின்றன. இதனைத் தொல்காப்பியர்,

**“முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**

**நுவலும் காலை முறை சிறந்தனவே**

**பாடலும் பயின்றவை நாடும் காலை”**[46]

எனும் நூற்பா வழி கூறுகிறார்.

## முதற்பொருள்

மனித ஒழுகலாறுகள் நிகழ்வதற்கு ஆதாரமாக அமைவது நிலமே. இந்நிலத்திலும் அவ்வவ் ஒழுகலாறுகள் காலம் என்ற தளத்தை அடிப்படையாகக் கொண்டே நிகழும். எனவே இவ்விரண்டுமே ஒழுக்க நிகழ்விற்கு ஆதாரம். இவ்விரண்டையும் தொல்காப்பியர்,

**“அவற்றுள்**

**முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்**

**இயல்பென மொழிப இயல்பு ணர்ந்தோரே”**

என்று நிலமும் பொழுதும் முதற்பொருள் என்கிறார் தொல்காப்பியர்.

சங்க இலக்கியங்களில் திணைக்குரிய பொருள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என அமைதல் வேண்டும். திணை, துறை ஆகியன நேரடியாகவோ, குறிப்பாகவோ உணரக்கூடிய முறையில் பாடல் புனைய வேண்டும் என்பது கோட்பாடாகும். அவ்வாறு புனையப்படும்போது மேற்சொன்ன முப்பொருளில் ஒன்றோ, பலவோ அப்பாடலில் அமைந்து திணையை உணர்த்தும். அவை மட்டுமின்றி உள்ளுறை உவமும், ஏனை உவமும் பாடலின் திணையை உணர்த்த உறுதுணையாய் அமைவதுண்டு. எனவே திணை அறிதற்குத் துணை நிற்பன.

1. முதற்பொருள}
2. கருப்பொருள்
3. உரிப்பொருள்

4. உள்ளுறை உவமம்

5. ஏனை உவமம்

என்ற ஐந்தும் துணை நிற்கின்ற என்ற உண்மை புலப்படுகின்றது.

நிலமும் காலமும் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகும். இவற்றின் இன்றியமையாமை கருதியே அவற்றை முதற்பொருள் என்று அழைத்தனர்.

**“நிலமில்லாவிடத்து மக்கள் யாண்டு வாழ்வர்? மக்கள் பிறப்பையும் இறப்பையும் பிற செயல்களையும் வரையறுத்து நிற்பது காலந்தானே? நிலவுகில் ஓரெல்லையுட்பட்ட காலத்தளவு வாழ்தலே மக்கள் வாழ்க்கை யாமாதலின் காலத்தில் பெருமை வெளிப்படை”**[47]

பண்டைத் தமிழருடைய இலக்கிய மரபுகளையும், கோட்பாடுகளையும் அறிந்து, திணை உணர்ந்து தெளிதற்கு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியன இடம் பெற வேண்டும். உயிர்கள் நிலத்தை ஆதாரமாகக் கொண்டே வாழ்கின்றன. இவ்வாறு உயிர்களின் வாழ்க்கைக்கு ஆதாரமாக உள்ள நிலமும் அவ்விடத்துத் தோன்றும் காலமும் முதற்பொருள் எனலாம். நிலத்தினும் காலத்தினும் தோன்றும் பொருள் கருப்பொருள் எனவும் அவ்வுயிர்களின் ஒழுகலாறுகளை உரிப்பொருள் எனவும் கொள்வர்.

உரிப்பொருளை முதல், கரு ஆகிய இரண்டும் சிறப்பிக்கின்றன.

“முதல், கரு, உரி என்ற மூன்றும் ஒத்த மதிப்புடையன போல மேற்போக்காகக் காண்போர்க்குத் தோன்றும். நிலமோ பொழுதோ இல்லாமல் வாழ்வில்லை. அவ்வாறே தெய்வத்தின் திருவருள், உணவு முதலியன இல்லாமலும் வாழ்வில்லை. இவை இல்லாமல் உரிப்பொருள் என்னும் ஒழுக்க நெறிக்கு இடமேயில்லை. ஆதலால், மூன்றாவதாகச் சொல்லியுள்ள உரிப்பொருள் தரத்தாலும் மூன்றாம் தரத்தே என்ற

ஆராய்ச்சி எழலாம். ஆனால் தமிழ் வழி அப்படி பேசவில்லை. 'முதல், கரு......... நாடுங்காலை' என்பது தொல்காப்பிய விதி. பாடல்களில் முதற்பொருளும் கலந்து உரிப்பொருளைச் சிறப்பிக்கலாம்."[49]

முதல், கரு, உரி என்னும் முப்பொருள்களும் ஒன்றில் ஒன்று முறையே சிறந்து விளங்குகின்றன. முப்பொருள்களும் முறைமையாற் சிறந்தன என்பதற்கு,

**"முதலிற் கருவும் கருவில் உரிப்பொருளுஞ்**

**சிறந்து வரும்"**[50] என்று நச்சினார்க்கினியாரும்,

"முறைமையாற் சிறத்தலாவது, யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும்வரின், முதற்பொருளால் திணையாகும் என்பதூஉம் முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டும் வரின், கருப்பொருளால் திணையாகும் என்பதூஉம் உரிப்பொருள் தானேவரின், அதனால் திணையகும் என்பதூஉம் ஆகும்"[51] என்று இளம்பூரணரும் விளக்கமளித்துள்ளனர். இளம்பூரணர் கருத்துப்படி, சங்க அகப்பாடல் ஒன்றை இன்ன திணை என இடம் பிரித்துக் காண முற்படுகையில் முதல், கரு, உரியென்ற மூன்றும் சிறந்திருக்கும்பொழுது, முதற்பொருள் கொண்டே திணையை முடிவு செய்ய வேண்டும். முதற்பொருள் இன்றி கருவும் உரியும் மட்டும் சிறந்திருக்க வேண்டும். உரிப்பொருள் மட்டும் சிறந்திருக்கும்பொழுது வேறுவழியின்றி உரிப்பொருளால் திணையை முடிவு செய்ய வேண்டும் எனத் தெளியலாம்.

"முதற்பொருளாலும் கருப்பொருளாலும் முடிவு செய்ய முடியாத நிலை ஏற்படின் உரிப்பொருள் கொண்டு தெளிவாக முடிவு செய்யலாம். ஏனென்றால், திணைப்பாடல்களுக்குப் புறவுடலாக இருப்பவை முதலும் கருவும், உயிராக இருப்பது உரிப்பொருளே. புறக்கோலங்களால் மயக்கம்

நிகழ்ந்தவிடத்து உரிப்பொருள் கொண்டு திணை முடிவு செய்யும் இலக்கியக் கொள்கையை இம்மரபு தெளிவுறுத்துகிறது. உரிப்பொருள் என்பதனை விழுமிய உணர்ச்சியாகக் கொண்டால் அந்த உணர்ச்சியை வெளிப்படுத்தியப் பயல்வார் உள்ளத்தில் அவ்வுணர்ச்சி நின்று நிலைபெறத் துணை செய்யும் பின்புலங்களாகவே முதலையுங் காலமாகப் பண்டையத் தமிழகத்தில் நிலவி வந்ததென்பதைத் தொல்காப்பிய நூற்பாக்கள் (அகத். 3, 14, 15) தெளிவுறுத்துகின்றன."[52]

எல்லா அகப்பாடல்களும் உரிப்பொருள் கொண்டு திணை பகுக்கப்பெறவில்லை. முதல், கரு, உரி ஆகிய முப்பொருள்களும் சிறந்திருக்கும்பொழுது, ஓர் அகப்பாடலை இன்னதிணை என்று பகுக்க உரி, கரு, முதல் என்ற முறையைக் கொள்வோமானால், அப்பாடல் அகத்திணைக்குரியதென அறுதியிட்டுக் கூறவியலாது. எனவே, திணை நோக்கில் முதற்பொருளே முப்பொருள்களுள் முதன்மையான பொருள் என அறுதியிட்டுக் கூறலாம்.

**"முதற்பொருள் அடிப்படையில் இருக்கின்றது. கருப்பொருள் பின்னணி அமைகின்றது. காதலர் மகிழ்ச்சிக்குரிய உரிப்பொருள் கொலுவிக்கின்றது"**[52] என்ற மு.வ. வின் கூற்று மேலும் அரண் செய்கிறது.

மேற்கூறிய கருத்துக்களை நோக்கும்போது திணையை உணர்வதற்கு முதற்பொருளே அடிப்படை என்பது புலனாகிறது. நில பாகுபாடு,

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தமேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**

**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே”**

என்னும் நூற்பாவால் தொல்காப்பியர் நான்கு திணைகளுக்கும் உரிய நிலத்தைக் கூறுகின்றார். இந்நூற்பாவில் தெய்வ அடிப்படையிலும் நில அடிப்படையிலும் திணைப் பெயர்கள் அடிப்படையிலும் என மூவகையாக நிலங்களுக்குப் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. மாயோனுலகு, சேயோனுலகு, வேந்தனுக்கு வருணனுலகு எனத் தெய்வத்தை அடிப்படையாக் கொண்டும் காடுறையுலகு, மைவரையுலகு, தீம்புனலுலகு, பெருமணலுலகு என இடத்தை அடிப்படையாகக் கொண்டும் சொல்லப்படும் நிலங்கள் அகத்திணையுலுள்ள முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனும் பெயரீடுகளைப் பெறும் என்பது இந்நூற்பாவால் உணர்த்தப்பட்டுள்ளது.

தொல்காப்பியர் பாலைத் திணைக்கு நிலம் கூறவில்லை. திணை ஐந்து என்பதும் அவற்றுள் நிலம் சுட்டாது உணர்த்தப் பெறுவது பாலை என்பதனை,

**“நடுவண் ஐந்திணை நடுவண தொழிய”**[54]

என்ற தொடரில் தொல்காப்பியர் காட்டுவார்.

மேலும், இவ்வுலகம் நானிலம் என்பதும் ஐந்நிலமன்று என்பதனையும்,

**“படுதிரை வையம் பாத்திய பண்பே”**[55] என அறுதியிட்டுள்ளார்.

திணைகளை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனக் காட்டியுள்ளவர், பாலைத் திணையை ‘நடுவுநிலைத் திணை’ எனக் குறித்தார். அது அந்நால்வகைத் திணை ஒழுக்கத்திற்கு இடையில் கடறினமையாலும் பிரிவுகள் பற்றி நிகழும் இடமாதலாலும் பாலை

‘நடுவண் திணை’ எனப்பட்டது எனலாம். ஐந்திணைகளுக்கு உரையாசிரியரே நிலம்பகுத்துக் கூறுகின்றமையை,

“உலகத்தைப் படைக்கின்ற காலத்துக் காடும் மலையும் நாடும் கடற்கரையுமாகப் படைத்து இந்நால்வகை நிலத்திற்கு ஆசிரியன் தான் படைத்த ஐவகை ஒழுக்கத்திற் பாலையொழிந்தனவற்றைப் பகுத்துக் கொடுத்தான். அப்பாலை ஏனைய போல ஒருபாற் படாது நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறி வழக்கும் செய்து வருதல் பற்றிய பாலைக்கு நடுவணதென்னும் பெயர் ஆட்சியும் குணனும் காரணமாகப் பெற்ற பெயர்”[56] என்று நச்சினார்க்கினியர் கூறும் காரணத்தால் தெளியலாம். மேலும் பாலை நிலம் உருவாயினமையை,

**“வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்**
**தானலந் திருகத் தன்மையிற் குன்றி**
**முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
**நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவுங் கொள்ளும்”**[57]

என்று இளங்கோவடிகளும்,

**“நானிலம் வாய்க்கொண்டு நன்னீர்**
**அறமென்று கோதுகொண்ட**
**வேனிலஞ் செல்வன் சுவைத்து உமிழ்பாலை”**[58]

என்று நம்மாழ்வாரும் விளக்கிக் காட்டுவர். காடும் மலையும் கோடை வெப்பத்தினால் தத்தம் பசுமைத் தன்மை இழந்து திரிந்த நிலமே பாலை நிலமாகத் திகழ்ந்தது என்பது தெளிவாகிறது.

### நிலம் வைப்பு முறை

நிலங்களைத் தொல்காப்பியர் கூறுகையில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என முறைப்படுத்திச் ‘சொல்லிய முறையான்

சொல்லவும் படுமே' என்று கூறியுள்ளார். இம்முறையை மாற்றியும் கூறலாம் என்பர்.

"உம்மை எதிர்மறையாகலான் இம்முறையின்றிப் பிற வாய்ப்பாட்டால் சொல்லவும்படும் என்றவாறு, காடு, நாடு, மலை, கடல் என்பதே பெரு வழக்கு. இன்னும் 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்றதனான், இம்முறையின்றி சொல்லவும் படும் என்று கொள்க. அதாவது, அவற்றுள் யாதானும் ஒன்றை முன்னும் பின்னுமாக வைத்துக் கூறுதல். அது சான்றோர் செய்யுட் கோவையினும் பிறநூலகத்துங் கண்டு கொள்ள"[59] என்று விளக்கிய இளம்பூரணர், பாலைத் திணைக்குத் தனித்து நிலம் என்பது இல்லையென்றாலும், சிறப்பு கருதிப் பாலை எனப்பட்டது என்பதை,

"பாலை என்பதற்கு நிலம் இன்றேனும் வேனிற்காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின், அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறியிட்டார்"[60] என்ற உரைப்பகுதியால் அறிய முடிகிறது. இவ்வாறு அமைந்த ஐந்திணை முறையை நோக்கும்போது அன்பின் ஐந்திணைகளை முறைமாற்றி அமைத்தலும் உண்டு எனக்கூறலாம்.

## ஐவகை நிலங்களின் பெயர்க்காரணம்

ஐவகை நிலங்களுக்கும் எக்காரணம் பற்றி இப்பெயர் வந்தது என்றால்,

"காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது ஆகலானும் (நாழி கொண்ட நறுவீ முல்லை – முல்லை. 9), மைவரை உலகிற்குக் குறிஞ்சிப்பூ சிறந்தது ஆகலானும் (குறிஞ்சிப் பூக்கொண்டு – குறுந்.3), தீம்புனல் உலகிற்கு மருதி சிறந்தமையானும் (சிறுசிரல் மருதின் தாழ்சினை – அகநா. 286), பெருமணல் உலகிற்கு நெய்தல்

சிறந்தமையானும் (பாசடை கவர்ந்த கணைக்கால் நெய்தல் – குறு.9) பாலை என்பதற்கு நிலம் இல்லாவிடினும் அது வேனிற்காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை என்றமையானும்"[61] முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற திணைகளின் பெயர்கள் அவ்வத்திணைகளில் சிறந்து விளங்கும் மலர்களால் விளங்குகின்றன என்பது புலனாகும்.

"மனிதப் பண்பான ஒழுக்கம் குறிக்கப்படும் முன்னரே இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்திய பண்டைத் தமிழர் இயற்கை வழித்தே மலர்ப் பெயர்களை நிலத்திற்கு முதலில் அமைத்தனர் எனல் சாலும்" [62] என்று மு. வரதராசனாரும் திணைப் பெயர்கள் மலர்களால் பெயரிட்டு அழைக்கப்படுகின்றன என்னும் இளம்பூரணர் கருத்துக்கு உடன்படுவர். இக்கருத்தை நச்சினார்க்கினியர்,

"இவ்வாறின்றி முல்லை முதலிய பூவால் பெயர் பெற்றன. இவ்வொழுக்கங்களெனின், அவ்வந் நிலங்கட்கு ஏனைப் பூக்களும் உரியவாகலின் பெயர்கூறலும் உரியவகைக் கடாயினாற்கு விடையின்மை உணர்க"[63] என்று மறுப்பர்.

இறையனார் அகப்பொருள் உரையாசிரியரும் அவ்வந்நிலத்து ஒழுக்கத்தான் வந்ததே நிலப்பெயர் என்பதை,

"குறிஞ்சியாகிய ஒழுக்கம் நிகழ்ந்த நிலமும் குறிஞ்சி எனப்பட்டது. என்னை, விளக்காகிய சுடர் இருந்த இடனும் விளக்கு எனப்பட்டது போல என்பது"[64] என்னும் அவர்தம் உரையால் அறியமுடிகிறது.

வ.சுப. மாணிக்கம் அவர்கள் உரிப்பொருள் பற்றியே திணைப்பெயர் அமைந்தது என்பர்.

“உரிப்பொருள் ஒன்றே நுவலும் இவ்வனைய பாக்கள் பாலைத்திணை குறிஞ்சித் திணையெனச் செவ்விதின் பெயர் பெறுகின்றன. காரணம் திண்மையாவது உரிப்பொருளே பற்றியது. முதலும் கருவுமோ அப்பொருட்குத் திணைமையாம் அத்துணையே. ஆதலின், அகத்திணை எழுமைப் பகுப்பு காதலர்களின் கைக்கிளை புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல், பெருந்திணை என்னும் காமவொழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டது என்று தெளியத்தகும்”[65]

மேற்கண்ட கூற்றுகளால், உரிப்பொருள் திணையொழுக்கமாய் அமைந்து திணையொழுக்கமே நிலத்திற்கும் பெயராய் அமைந்தது என்று உறுதியாகக் கூறலாம்.

## பொழுது

ஒரு பாடலின்கண் அமைந்துள்ள திணையை உணர்வதற்கு நிலம் மட்டுமின்றிப் பொழுதும் பெருந்துணை புரிகின்றது. இப்பொழுதினைப் பெரும்பொழுது சிறுபொழுது என இருவகையாகப் பிரித்துக் கூறுவர். இதனை,

**“பெருபொழு தென்றா சிறுபொழு தென்றா**
**இரண்டு கூற்ற தியம்பிய பொழுதே”**[66]

என்று நம்பியகப்பொருள் நூற்பா இருபொழுதுகளையும் பகுத்துக் கூறுகிறது.

“ஓர் ஆண்டினை ஆறு பகுதிகளாகப் பிரித்து ஆறும் பெரும் பொழுதுகளாகவும், ஒரு நாளை ஆறு கூறுகளாக பிரித்து ஆறு சிறுபொழுதுகளாகவும் தொல்காப்பியர் கூறுகின்றார்”[67]

பெரும்பொழுது ஓராண்டினை,

1. இளவேனில் - சித்திரை, வைகாசி

2. முதுவேனில் - ஆனி, ஆடி

3. கார் - ஆவணி, புரட்டாசி

4. கூதிர் - ஐப்பசி, கார்த்திகை

5. முன்பனி - மார்கழி, தை

6. பின்பனி - மாசி, பங்குனி

என்று அறுவகைப் பருவமாகப் பகுத்தும், சிறுபொழுது ஒரு நாளினை,

1. வைகறை - இராப்பொழுதின் பிற்கூறு

2. விடியல் - பகற்பொழுதின் முற்கூறு

3. எற்பாடு - பகற்பொழுதின் பிற்கூறு

4. நண்பகல் - பகற்பொழுதின் நடுக்கூறு

5. மாலை - இராப்பொழுதின் முற்கூறு

6. யாமம் - இராப்பொழுதின் நடுக்கூறு

என்று அறுவகைப் பொழுதாகப் பகுத்துக் கூறுவர்.

மேற்கண்ட பெரும்பொழுது ஆறு என்பதில் நூலாசிரியர்களுக்கோ உரையாசிரியர்களுக்கோ எவ்வித வேறுபாடும் இல்லை. ஆனால் சிறுபொழுதுகள் ஆறு என்பதில் நூலாசிரியர்களிடையேயும் உரையாசிரியர்களிடையேயும் வேறுபாடு காணப்படுகின்றது.

இறையனார் களவியல் உரையாசிரியர் காலை தவிர சிறுபொழுதுகள் ஐந்து என்கிறார். நம்பியகப் பொருளின் ஆசிரியர் நாற்கவிராச நம்பியும் ஐந்து என்கிறார். சிவஞான முனிவர் தமது தொல்காப்பியச் சூத்திரவிருத்தியுள் ஆறுவகை என்கிறார். குறுந்தொகை 32-வது பாடலில் சிறுபொழுது ஐந்து என்று கூறப்பட்டுள்ளது. மு. அருணாசலம்பிள்ளை அகத்திணையியல் உரைவளம் எனும் நூலில் சிறுபொழுதுகள் 6

என்கிறார். இவரைப் போன்று இராம. பெரியகருப்பன் அவர்களும் ஆறு என்கிறார்.

இவ்வாறு அறிஞர்களிடையே சிறுபொழுது ஆறா, ஐந்தா என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. பிற்கால நூல்வழக்கில் பெரும்பொழுது ஆறென்பதற்கு ஏற்பச் சிறுபொழுதும் ஆறு எனக்கருதும் நிலை ஏற்பட்டு உள்ளதை உணர முடிகின்றது.

**கருப்பொருள்**

நிலத்தைச் சார்ந்து மக்கள் வாழ்வதால் அதன் சூழலுக்கேற்ப தங்களை ஆயத்தப்படுத்திக் கொள்கிறார்கள். அதனோடு இயைந்து விடுகிறார்கள். இதை "நிலம் இயற்கையானது, தனக்குரிய நிலைத்த இயல்புகளை உடையது. இந்நிலம் வெவ்வேறுபட்ட பருவச் சூழல்களுக்கு ஏற்ற மாற்றங்களை உடையது. நிலமும் பொழுதும் இயைந்த இயைவில் ஏற்படும் சூழல் குறிப்பிட்ட தாவரங்கள் வளருவதற்கும் குறிப்பிட்ட வகை விலங்குகள் வாழ்வதற்கான வாய்ப்பானாக அமைகின்றது. இந்த இயற்கைச் சூழலைப் பயன்கொண்டு மக்கள் தங்களுக்குரிய வாழ்வியல் ஆதாரங்களைக் கட்டமைத்துக் கொள்ளும் இயல்புடையவராக உள்ளனர்"[68]

முதலும் உரிமையுமல்லாத அகப்பொருள்களுள் அகத்திணைக்குக் கருவாய் அமைவன யாவும் கருப்பொருள்கள் என்பர் அக நூலார். அகப்பாடல்களில், உரிப்பொருளே தலையாய இடம்பெற்று விளங்கும். அவ்வுரிப்பொருள் சிறப்புற முதற்பொருளும் கருப்பொருளும் துணைப் புரியும். எனவே முதற்பொருள்களால் திணை உணரப்படும்.

தொல்காப்பியர் தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ் ஆகிய எண் வகைக் கருப்பொருள்களை மட்டுமே குறிப்பிடுகின்றார். இதனை,

**“தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவுங் கருவென மொழிப”[69]**

என்ற நூற்பா உணர்த்தும்.

நம்பியகப்பொருள் ஆசிரியர் கருப்பொருளை,

**“ஆரணங் குயர்ந்தோ ரல்லார் புன்விலங்**
**கூர்நீர் பூமர முணாப்பறை யாழ்பண்**
**தொழிலெனக் கருவீ ரெழுவகைத் தாகும்”[70]**

எனப் பதினான்கு வகையினைக் குறிப்பிடுவர். தொல்காப்பியர் கருப்பொருள்கள் எட்டென்று கூறுவதால் மற்ற ஆறினை அந்நூற்பாவில் ‘பிறவம்’ என்பதனுள் அடக்கலாம்.

## உரிப்பொருள்

உரிப்பொருள் என்பது மக்கட்குரிய பொருள். மேலும் அவை மக்களின் வாழ்க்கை நெறி மற்றும் ஒழுக்கம் ஆகும்.

“நிலமும் காலமுமாகிய முதற்பொருளும் அவை காரணமாகத் தோன்றும் கருப்பொருளும் மக்களின்பால் எழுப்பும் உணர்வுகளான் நிகழும் ஒழுகலாறாகிய திணைகள் காமப்பொருள் பற்றியவையாயின் அகம் என்றும் அஃதல்லாத அறமும் பொருளும் பற்றியவையாயின் புறம் என்றும் வகுத்தி அவற்றைப் பற்றி இலக்கியம் படைத்தற்குரிய நெறிமுறைகளைக் கூறுதலே பொருளதிகார இலக்கணமாதலின் அவ்விரு திணையாகிய ஒழுகலாறு பற்றிய நிகழ்ச்சிகட்டுகுரிய பொருள் உரிப்பொருள் எனலாயிற்று”[71]

சங்க அகப்பாடல்கள் திணையமைதி கொண்டவை. முதல், கரு, உரியெனக் கூறப்பெறும் முப்பொருள்களுள் முதற்பொருள்

கருப்பொருள்களை விட உரிப்பொருளே தலையானது என்பது சான்றோர் வாக்காகும்.

"உரிப்பொருள் குறிப்பிட்ட நிலத்திற்குரிய அகச் செயற்பாடு. உதாரணமாக மலைப்பகுதிக்குப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும்"[72] என்கிறார் கார்த்திகேசு சிவத்தம்பி.

ஐந்திணைக்குரிய உரிப்பொருள்களாக தொல்காப்பியர் குறிப்பிடுகையில்,

**"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேரும் காலை திணைக்கு உரிப்பொருளே"**[73]

என்று விளக்குகிறார். அதாவது புணர்தலும் புணர்தல் நிமித்தமும் பிரிதலும் பிரிதல் நிமித்தமும், இருத்தலும் இருத்தல் நிமித்தமும், இரங்கலும் இரங்கல் நிமித்தமும், ஊடல் நிமித்தமும் ஆகிய ஐந்தும் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் முதலிய ஐந்திணைக்கும் உரிய உரிப்பொருள் என்பதை உணர்த்துகிறார்.

குறிஞ்சித் திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள்

அன்பின் ஐந்திணைகளுள் ஒன்று குறிஞ்சித் திணை. ஐந்திணைகளில் முதலிடம் பெறுவது இத்திணையேயாகும். குறிஞ்சித் திணைப் பாடல்களிலே மலை நிலத்து மக்களின் பழக்கவழக்கங்கள், மலைகாட்சிகள், மலை வளங்கள், மக்களின் களவு – கற்பு வாழ்க்கை ஆகியவற்றைக் காணலாம். குறிஞ்சித் திணையில் காதலர் இருவர் சந்தித்து கருத்திலே ஒன்றுபடுவர். இதற்கு 'குறிஞ்சியொழுக்கம்' என்று பெயர். இக்காதலர்கள் வெளிப்படையாக மணம் புரிந்து கொள்ளும் வரையிலும் அடிக்கடி சந்திப்பார்கள். அவர்கள் இரவிலும் பகலிலும் குறித்த இடத்தில் கூடுவார்கள். இதன் காரணமாகவே குறிஞ்சித் திணைக்கு

‘புணர்தலும் புணர்தல் நிமித்தமும்’ உரிப்பொருளாக அமைந்தன என்பதை அறிய முடிகின்றது. எனவே குறிஞ்சித் திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள் பின்வருமாறு கூறப்படுகின்றது.

முதற்பொருள்

நிலம், பொழுது என இரு வகைப்படும்

நிலம்

குறிஞ்சித் திணைக்குரிய நிலம் முருகன் உறையும் மலையும் மலைசார்ந்த இடமும் ஆகும். இதனே,

**“சேயோன் மேய மைவரை யுலகும்” (தொல்.அகம்.5)**

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

பொழுது

**“கூதிர் யாமம் முன்பனி என்றிவை**
**ஓதிய குறிஞ்சிக்கு உரிய வாரும்”**

எனும் நூற்பா வழி அறிய முடிகின்றது.

பெரும்பொழுது – குளிர்காலம், முன்பனிக் காலம்

சிறுபொழுது – யாமம் (இரவு 10 மணிமுதல் 2 மணிவரை)

என்பது புலப்படுகின்றது.

கருப்பொருள்கள்

கருப்பொருள்கள் பதினான்கு வகைப்படும்.

| | | |
|---|---|---|
| **1. தெய்வம்** | **–** | **முருகன்** |
| **2. உயர்ந்தோர்** | **–** | **பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி** |
| **3. தாழ்ந்தோர்** | **–** | **குறவர், கானவர், குறத்தியர்** |
| **4. பறவை** | **–** | **கிளி, மயில்** |

**5. விலங்கு - புலி, கரடி, யானை, சிங்கம்**

**6. ஊர் - சிறுகுடி**

**7. நீர் - அருவி நீர், சுனை நீர்**

**8. மலர் - வேங்கைப் பூ, குறிஞ்சிப் பூ, காந்தள் பூ**

**9. மரம் - சந்தனம், தேக்கு, அகில், அசோகம், நாகம், மூங்கில்**

**10. உணவு - மலைநெல், தினை, மூங்கிலரிசி**

**11. பறை - தொண்டகம்**

**12. யாழ் - குறிஞ்சி யாழ்**

**13. பண் - குறிஞ்சிப்பண்**

**14. தொழில் - வெறியாடல், மலைநெய் பயிரிடுதல், தேனெடுத்தல், கிழங்கு அகழ்தல், அருவி நீராடல், சுனை நீராடல்**

எனக் குறிஞ்சிக்குரிய கருப்பொருள் குறிப்பிடப்பட்டுள்ளது.

**உரிப்பொருள்**

மக்களுக்குரிய ஒழுக்கம் உரிப்பொருளாகும். தலைவன், தலைவி புணர்தலும் அதன் நிமித்தமும் குறிஞ்சித் திணைக்குரிய உரிப்பொருளாகும்.

புணர்தல் முதலானவை அன்பின் வழிப்பட்டனவாகிய நடுவண் ஐந்திணைகளுக்கு மட்டுமே உரியனவாக உள்ளன. இவற்றைக் கைக்கிளை, பெருந்திணைகளுக்கு விரிவுப்படுத்துவது முறையல்ல. எனவே, இவ்விரண்டுக்கும் புணர்தல் முதலான உரிப்பொருட்களைச் சார்த்திக் கூறுவது தொல்காப்பிய மரபுக்கு, அவர்தம் அகத்திணைக் கோட்பாட்டுக்கு முரணாக முடியும் என்பது புலனாகிறது. இதன் மூலம்

கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் உரிப்பொருள் இல்லை என்ற உண்மை புலப்படுகின்றது.

குறிஞ்சித்திணையில் பொதுவாக நிகழும் உரிப்பொருள் நிகழ்வுகளாவன வருமாறு :

தலைவியைப் புணர்தலே கருத்தாகி வந்து செல்லும் தலைவனைத் தோழி, பகற்குறி மறுத்து இரவு வா என்றலும், இரவுக்குறி மறுத்துப் பகற்குறியிடத்தே வா என்றதும், இற்செறிப்பினைச் சுட்டியும் வேலன் வெறியாட்டினை உணர்த்தியும் இன்னபிற செய்திகளை நேரடியாகக் கூறியும் சிறைப்புறமாகக் கூறியும், விரைந்து வந்து வரைந்து கொள்க என்று கூறுதலும், அன்னை தலைவியின் உடல் வேறுபாட்டினை அறிந்து இஃது செவ்வேலனால் நிகழ்ந்தனவற்றைக் கூறலும், தலைவி தலைவன் வரவினை அறிந்தும் அறியாதவளாகத் தோழியிடம் பேசுதலும், தலைவி தலைவனைப் புகழ்ந்து கூறுதலும், தலைவி ஆற்றாமையால் பேசாப்பொருள்களுடன் புலம்பிக் கூறுதலும், தலைவன் திருமணம் புரிந்தபின் அன்பு மாறாது இருப்பதைத் தலைவி, தோழியிடம் கூறுதலும், புணர்ந்து நீங்கிய தலைவன் தன் தலைவியின் அன்பினைத் தன்நெஞ்சிக்குக் கூறுதலும் குறிஞ்சித் திணைக்குரிய உரிப்பொருள்களாய் அமைந்துள்ளன.

**எட்டுத்தொகை –**

## குறிஞ்சித் திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள்

எட்டுத்தொகை நூல்களில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு போன்ற ஐந்து நூல்களிலுள்ள குறிஞ்சித் திணைப் பாடல்கள் மட்டும் ஆராயப்படுகிறது. இந்நூல்களில் உள்ள குறிஞ்சித்திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள் பின்வருமாறு காணலாகிறது.

## முதற்பொருள்

முதற்பொருள் இயற்கையாய் அமைந்த நிலமும் காலமும் ஆகும்.

## நிலம்

மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும். வானுயர்ந்த மலையும் ஓங்கி வளர்ந்த மரங்களும் பாறைகளும் செடிகொடிகள் நெருங்கி வளர்ந்த சோலைகளும் சுனைகளும் அருவிகளும் கொண்ட நில அமைப்பை உடையது குறிஞ்சி நிலமாகும்.

குறிஞ்சி நிலத்தைப் பல்வேறு பெயர்கள் வெளிப்படையாக உணர்த்த வந்துள்ளன. மலை (அகம்.2), வரை (அகம்.12), சிலம்பு (அகம்.8), குன்றம் (அகம்.88), பிறங்கல் (அகம்.8), குறும்பொறை (அகம்.368), சாரல் (அகம்.2), அடுக்கம் (அகம்.8) கவான் (அகம்.72), வெற்பு (அகம்.162), பொருப்பு (அகம்.8), கோடு (அகம்.182), விடரகம் (குறுந்.42), கானம் (குறுந்.179), துடைவை (குறுந்.105), நெடுமலை (ஐங்.202), சிலம்பு (ஐங்.211), அடுக்கம் (ஐங்.220), வெற்பு (கலி.44), குன்றம் (நற்.5), குன்றம் (நற்.5), மலை (நற்.44), சிலம்பு (நற்.359) போன்ற எளியத் தொடர்களால் மலை வர்ணிக்கப்படுகிறது. எனவே அனைத்துக் குறிஞ்சித் திணைப் பாடல்களிலும் முதற்பொருளாகிய திணைக்கூறு அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

பெரும்பொழுது

கூதிரும் முன் பனியும் குறிஞ்சிக்குரிய பெரும்பொழுது ஆகும். ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை போன்ற மாதங்கள் இப்பொழுதுகளுக்குரியதாகும்.

**“குறிஞ்சிக்கு முன்பனிக் காலமும் உரித்து”**[74]

என்று தொல்காப்பியர் கூறுவர்.

கூதிர் (அகம்.58, குறுந்.86, நற்.112, ஐங்.207), அற்சிரம் (அகம்.78, குறுந்.68, 76, நற்.5, ஐங்.223) போன்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன.

குறிஞ்சிக்குரிய சிறுபொழுது யாமம் ஆகும். அச்சிறு பொழுதை வெளிப்படையாக யாமம் (அகம்.18), கங்குல் (அகம்.2), பானாள் (அகம். 192), நடுநாள் (அகம். 22), அரைநாள் (அகம்.138), இரவு (அகம்.178), யாமம் (குறுந்.42,86), பானாள் (குறுந். 301, 356), கங்குல் (குறுந்.312), யாமம் (நற்.36), யாமம் (ஐங்.241), யாமம் (கலி.52), கங்குல் (ஐங்.296) ஆகிய சொற்கள் சுட்டுகின்றன. அச்சொற்கள் யாவும் பல அடைமொழிகளுடன் வந்து அச்சிறுபொழுதைக் குறித்தன.

இவ்வாறு, குறிஞ்சிக்குரிய நிலமும் பெரும் பொழுதும் சிறுபொழுதும் வந்து திணைக்குரிய முதற்பொருளை உணர்த்தி நிற்கின்ற பாங்கினை எட்டுத் தொகை நூல்களில் காணமுடிகிறது.

**கருப்பொருள்**

சங்க இலக்கியங்களில் குறிஞ்சிப் பாடல்களே அதிகமான கருப்பொருள்களை பெற்று விளங்குகின்றன. குறிஞ்சி நிலத்தின்கண் காணலாகும் களவுச் சூழலுக்குத்தக அகத்திணை பாடிய புலவர்கள் அந்நிலத்தே காணப்படும் கருப்பொருள்களை இணைத்துக் கூறியுள்ளனர். இதனை,

“களவுச் சூழலுக்கு ஏற்பக் குறிஞ்சி நில இயற்கையின் ஆளுமை சங்கப் பாடலில் மிகுதியும் எடுத்தாளப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் களவுப் பாடல் மிகுந்து இருப்பதால் இயற்கையின் சூழலின், அதனைப் பல்வேறாகக் காட்டியுள்ளனர் புலவர்கள். குறிஞ்சி நில அமைப்பு புலவர்களின் திறனுக்குத்தக விரிந்த பார்வையுடையது. இதனாலும் பிற திணைகளைவிடக் கருப்பொருள் செய்திகள் குறிஞ்சியில் மிக்கு விளங்குதல் பெறப்படும்”[75] என்பர்.

## தெய்வம்

குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வம் முருகன் ஆகும். அத்தெய்வத்தை நெடுவேள் (அகம்.22), முருகன் (அகம்.98), முருகு (அகம்.22), வேலன் (அகம்.22), முருகன் (நற்.34), கடவுள் (ஐங்.257), வேள் (ஐங்.250), முருகன் (கலி.43), முருகன் (குறு.87,117), சூர் (குறு.52.105), அணங்கு (குறுந்.308) என்னும் சொற்களால் குறிக்கப் பெறுகின்றது.

### மக்கள்

மக்களைச் சுட்டப்படுவதில் தலை மக்கள், நிலமக்கள் என தொல்காப்பியப்படி வேறுபாடு காட்டலாம். நம்பியகப்பொருளில் உயர்ந்தோர், அல்லோர் எனக்குறிக்கப்படுவது இவர்களையே ஆகும்.

### அ) உயர்ந்தோர்

வெற்பன் (நற்.17), மலைநாடன் (நற்.25, குறுந். 3,14), கிழவன் (நற்.32), ஐ (நற்.136), பார்ப்பன் (ஐங்.202), நாடன் (ஐங்.205, குறுந்.3.13), சாரல் நாடன் (குறுந்.18), குன்றநாடன் (குறுந். 36.38), கானகநாடன் (குறுந்.54), மலைகிழவோன் (குறுந்.332), மாமலைச் சிலம்பன் (குறுந்.362) என்பது போல உயர்ந்தோர் குறிக்கப்படுகின்றனர்.

### ஆ) தாழ்ந்தோர்

நிலமக்களாகிய தாழ்ந்தோர் என்ற பிரிவில் கானவர் (ஐங்.205), குறவர் (ஐங்.213,246), காவலர் (ஐங்.267), வேட்டுவன் (நற்.75), வேட்டுவன் (அகம்.168), புனக்குறவன் (குறுந்.82), குறவன் (குறுந்.95), புனவன் (குறுந்.105), குறவர் மகளிர் (குறுந்.208), அகவன் மகள் (குறுந்.23), கொடிச்சி (ஐங்.255) முதலியவர்கள் குறிக்கப்படுகின்றனர்.

**ஊர்**

மலைப்பகுதியில் மக்கள் வசிக்கும் இடங்களை சேரி (நற்.77), சிறுகுடி (நற்.82,114,122), சிறுகுடி (குறுந்.95), சிறுகுடில் (ஐங்.22), மூதூர் (அகம்.342), பாக்கம் (குறுந்.332) என்று சுட்டப்படுகிறது. பிற்காலத்தில் ஊரும் நீரும் வேறாக கொண்டதற்கு ஏற்ப, இவையும் சிற்சில பாடல்களில் இடம் பெறுகின்றன.

**பறவை**

குறிஞ்சி, மலைப்பாங்கான இடமாதலால் அங்கு மரங்கள் மிகுதியாய்க் காணப்படும். அம்மரங்களில் வாழும் பறவையினங்களும் பலவகையினங்களாக இருக்கும். அப்பறவை இனங்களைப் புலவர்கள் தம் கற்பனைக்கு ஏற்பப் புனைந்து கூறியுள்ளனர்.

மயில் (அகம்.82,152), மஞ்ஞை (அகம்.108,242,குறுந்.133), கிளி (அகம்.12), வண்டு (அகம்.22), அசுணம் (அகம்.88), கிள்ளை (அகம்.28), முருகு (அகம்.178), கூகை (அகம்.362), சேவல் (அகம்.122), தும்பி (அகம்.388), பருந்து (அகம்.342), கிளி (நற்.13.25), தும்பி (நற்.17), கிச்சிலிப்பறவை (நற்.61), ஆந்தை (நற்.83), மயில் (ஐங்.291.293), பேராந்தை (ஐங்.291), குறுங்பூழ் பறவை (குறுந்.68), ஆந்தை (குறுந்.153), அன்னம் (குறுந்.300), புறா (கலி.56), அன்னம் (கலி.56), தூக்கணாங்குருவி (குறுந்.374) போன்ற பறவையினங்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன.

மயில் ஆடுதலும், வண்டு ஒலித்தலும், கிள்ளை மிழற்றுதலும், சேவல் கூவுதலும், தும்பி இசையெழுப்புதலும், பருந்து பறத்தலுமாகத் திகழும் குறிஞ்சி நிலப் புனைவுகள் களவொழுக்கத்தை வளர்ப்பதுபோல் உள்ளன. ஆதலால், பெரும்பாலான கருப்பொருள்கள் திணைக்குரியப் பொருள்களாகத் திகழ்கின்றன எனலாம்.

## விலங்கு

குறிஞ்சி நிலத்தில் வாழும் விலங்குகளாகக் குறிக்கப் பெறுவது பலவுள்ளன. அவை யானை (அகம்.18,68,78,82), புலி (அகம்.12,22), கடுவன் (அகம்.2,353, ஐங்.274), மந்தி (அகம்.82,92, நற்.22), ஆளி (அகம்.78), இரும்போத்து (அகம்.238), எண்கு (கரடி) (அகம்.112), குதிரை (அகம்.148), நாய் (அகம்.28), பன்றி (அகம்.18), முதலை (அகம்.72), யானை (குறுந்.13), யானை (அகம்.18, 68, 78, 82, குறுந். 13, ஐங். 216, கலி. 38), மந்தி (குறுந்.29), புலி (குறுந்.47), குதிரை (குறுந்.74), ஆ (குறுந்.132), ஆனேறு (குறுந்.74), ஆமான் (குறுந்.322), செந்நாய் (குறுந்.141), ஊகம் (குறுந்தொகை (373), பன்றி (நற்.13), மந்தி (நற்.22), வரிப்புலி (நற்.39), ஆடு (நற்.47), பாம்பு (நற்.51), வேட்டைநாய் (நற்.82), மான் (நற்.119), யானை (ஐங்.216), மான் (ஐங்.217), செம்மறி ஆடு (ஐங்.238), பன்றி (ஐங்.261), யானை (கலி.38), பாம்பு (கலி.38), குரங்கு (கலி.40), புலி (கலி.43), மான் (கலி.50) என்பனவாகும்.

தலைவியைக் காணக் களவொழுக்கத்தின்போது தலைவன் வந்து போகும் வழியின் அருமைப்பாட்டைப் புலப்படுத்தப் பொருத்தமான விலங்குகளாகப் பலவும் இருப்பதால் திணையுணர் நோக்கில் அவ்விலங்குகள் சித்தரிக்கப்பட்டுள்ளன.

## நீர்

கயம் (நற்.22), அருவி (நற்.32), ஆற்றுநர் (நற்.53), கான்யாறு (நற்.65,114), கிணறு (ஐங்.203), வெள்ளருவி (ஐங்.205), சுனைநீர் (ஐங்.225), குளம் (ஐங்.278), காட்டாறு (அகம்.18), அருவி (அகம்.82), மலையருவி (குறுந்.78), அருவி (கலி.42, 44) நீர்அருவி (குறுந்.42),

கயம் (குறுந்.170), கான்யாறு (குறுந்.264), சுனை (குறுந்.291) என்ற சொற்களால் நீர் நிலைகளைக் குறிக்கப்படுகின்றது.

**பூ**

தாமரை (நற்.1), காந்தள் (நற்.17,69) பிடிவம் (நற்.22), குவளை (நற்.6,34,77), வேங்கை (நற்.13), காட்டு முல்லை (நற்.61), காட்டு மல்லிகை (நற்.119), கூதளம் (நற்.119), வேங்கை (ஐங்.208,259), அவரைப்பூ (ஐங்.209), காந்தள் (ஐங்.22,254,239), குவளை (ஐங்.277), மூங்கில் பூ (அகம்.78), காந்தள் (அகம்.78), ஆம்பல் (அகம்.78), காயாம்பூ (அகம்.108), குவளை (அகம்.128), இலவம்பூ (அகம்.142), வேங்கை (அகம்.232), குறிஞ்சி (அகம்.360), கொன்றை (அகம்.362), இலமலர் (அகம்.142), பித்திகை (அகம்.92), வேங்கை (கலி.39), கோங்கு (கலி.42), நறவன் பூ (கலி.54), தாழம்பூ (கலி.55), தாமரை (கலி.59), நொச்சிப்பூ (குறுந்.138), பருத்தி (குறுந்.73), குவளை (குறுந்.62), நரந்தம்பூ (குறுந்.52) போன்ற மலர்கள் குறிஞ்சித் திணைப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**மரம்**

குறிஞ்சி நிலத்தில் வளரும் மரங்கள் உறுதியாகவும், உயரமாகவும் வளரக்கூடியன. உறுதியும் உயரமும்மிக்க மரங்கள் செறிந்த நிலப்பகுதியே உள்ளத்தில் உறுதியையும் உயர்வுமிக்க அன்பு தோன்றும் களவொழுக்கத்திற்கும் தக்கப் பின்புலங்களாகும். அமை (அகம்.82), ஆரம் (அகம்.22), ஈங்கை (அகம்.252), கடம்பு (அகம்.98), கழை (அகம்.8), அசோகு (அகம்.38), பனை (அகம்.148), பலவு (அகம்.2), பலா (அகம்.8), வெண்கடம்பு (அகம்.172), மா (அகம்.348), முருக்கு (அகம்.362), மூங்கில் (அகம்.268), வாழை (அகம்.2), வேங்கை (அகம்.2), வேம்பு (அகம்.138), சாந்து (நற்.1) ஆரம் (நற்.5), வேங்கை (நற்.8), கடம்பம்

(நற்.34), குமிழ் (நற்.6), ஆசினி (நற்.44), மூங்கில் (நற்.51), நாகமர.ம் (நற்.82), அசோகம் (ஐங்.211), சந்தனம் (ஐங்.212), அகில் (ஐங்.211), பலா (ஐங்.214), மாமரம் (ஐங்.218), வேங்கை (ஐங்.217), மூங்கில் (ஐங்.220), சந்தனம் (ஐங்.254), இற்றி (குறுந்.279), குதிரை மரம் (அகம்.278), வேங்கை (குறுந்.26), மூங்கில் (குறுந்.74), செங்கடம்பம் (குறுந்.87), இற்றி (குறுந்.106), யா (குறுந்.198), சந்தனம் (குறுந்.198), பனை (குறுந்.106), வேங்கை (கலி.38), மூங்கில் (கலி.39), சந்தனம் (கலி.40), பலா (கலி.41), புன்னை (கலி.50) முதலான மரங்கள் காட்டப் பெற்றுள்ளன.

**உணவு**

குறிஞ்சி நிலமானது மலையும் மலை சார்ந்த பகுதியுமாதலால், அங்கு இயற்கையாகக் கிடைக்கும் உணவுப் பொருட்களே மிகுதி எனலாம். குறிஞ்சி நில மக்கள் உழுதுவிளைவித்த தினையும் இந்நிலத்திற்குரிய உணவுப் பொருளாகும்.

குறிஞ்சி நில மக்களின் உணவுப் பொருள்களாக அரியல் (அகம்.348), உப்பு (அகம்.208), கள் (அகம்.298), தேறல் (அகம்.182), தேன் (அகம்.18), நறவு (அகம்.242), தேனிறால்கள் (அகம்.78), பால் (அகம்.48), பிரசம் (அகம்.172), நெல் (நற்.22), கிழங்கு (ஐங்.208), களாம்பழம் (குறுந்.264), தேன் (குறுந்.3), உளுந்து (குறுந்.68), கனி (குறுந்.90), ஐவனம் (குறுந்.100), நறவு (குறுந்.165), எள் (குறுந்.261), கள் (குறுந்.298), வெண்ணெல் (ஐங்.267,285), தினை மாவு (ஐங்.285), வள்ளிக்கிழங்கு (கலி.39) ஆகியனவற்றைக் குறிஞ்சிப் பாடல்கள் வழி அறிய முடிகின்றது.

பலவித உணவுப் பொருள்களைக் குறிஞ்சித் திணைப் பாடல்கள் சுட்டிய போதிலும், 'தினை' உணவுப் பொருளாய் பயன்பட்டதாக ஒரு

பாடலிலும் சுட்டப்படவில்லை. மாறாகத்தினைப்புனம் காத்தலும் அங்கு நிகழும் களவு நிகழ்ச்சிகளுமே சுட்டிக் கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. குறிஞ்சி நிலத்தில் சிறப்பாகப் பேசப்படும் ‘தினை’ ஒரு பாடலிலும் உணவுப் பொருளாய்ப் பேசப்படவில்லை.

குறிஞ்சித் திணைக்குரிய கருப்பொருள் ‘தினை’ ஓர் உணவுப் பொருளே எனினும், அது பாடல்களில் அவ்வாறு காட்டப்படவில்லை. குறிஞ்சிக்குரிய களவொழுக்கத்தில் தலைவியும் தோழியும் தினைப்புனம் காக்கச் செல்வது வழக்கம். அங்கு பரண் மீது இருந்து தினைக்கதிரைக் கவர வரும் குருவிகளைத் தட்டைக்கொண்டு விரட்டுவர். தினை கதிர்விடும் பருவம் தொடங்கி, அறுவடைப் பருவம் வரும் வரை மட்டுமே அங்கு காவல் செய்வர்.

அவ்வேளையில், அவ்வழி வந்த காளை ஒருவன்பால் காதல வயப்படுவாள் தலைவி. அக்காதலால், சேரிப்பெண்டிரின் அலரும் ஆம்பலும் நிகழும். களவொழுக்கம் அறியாத அன்னை தலைவிக்குத் தெய்வக்குற்றம் நேர்ந்தது என்று எண்ணி வெறியாட்டெடுக்க, அதனையறிந்து தோழி, தாய்க்கு அறத்தொடு நிற்க, அதனால் இருள்மெல்ல விலகி ஆதவன் வெளிப்படுவது போன்று அவர்கள் களவும் வெளிப்படும். தினைக்கதிர் முற்றும் முன்னரே அவர்களின் களவுக்காதலும் முற்றிவிடுகிறது. அதனால், கதிர் முற்றி விளைந்து அது உணவாகப் பயன்படுமாற்றைப் புனையாது விட்டனர் என்று கருதலாம்.

சங்க அக இலக்கியத்தைப் படைத்த புலவர்கள் தலைவியைச் சுற்றியே பாடல் புனைய ஆர்வம் கொண்டிருந்தனர். தலைவன் தலைவி களவுக் காதலைப் புனைந்துரைக்க வேண்டிய புலவர்கள் தினைப்புனத்தைக் கற்பித்தனர்.

எனவே, தலைவி தினைப்புனத்தை விட்டு வந்த பிறகு, அதனை மீண்டும் விளக்க அவர்கள் ஆர்வம் காட்டவில்லை. அதனால், தினை விளைந்து அது உணவுப் பொருளாகும் நிலையை விளக்காமல் விட்டனர் என்று எண்ணத் தோன்றுகிறது. களவொழுக்கத்திற்குப் பயன்படும் எல்லைவரை கருப்பொருள் பயன்படும் என்பதை இதனால் உணரலாம்.

**பறை**

ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு பறை உண்டு. குறிஞ்சி நிலத்தில் தொண்டகம் (அகம்.118), துடி (அகம்.62), பேரிசை (அகம்.152), முரசு (அகம்.188), முழவு (அகம்.82), தொண்டகம் (குறுந்.33), சிறுபறை (குறுந்.75), தொண்டகம் (நற்.104), கிணை (நற்.108), பெருவங்கியம் (அகம்.82), தண்ணுமை (ஐங்.215), முழவு (குறுந்.301, 365), கொம்பு (நற்.276), இன்னியம் (நற்.322) என்ற பல வகையான இசைக்கருவிகள் உள்ளன. இருப்பினும் தொண்டகப்பறை பற்றிய தகவல்கள் அதிக இடங்களில் உள்ளது.

**பண்**

குறிஞ்சிப் பண் (நற்.255), குறிஞ்சிப்பண் (அகம்.102) போன்ற இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**யாழ்**

குறிஞ்சிக்குரிய யாழாகக் குறிஞ்சியாழ் குறிப்பிடப்படுகிறது. குறிஞ்சியாழ் (அகம்.82, 318), யாழ் (நற்.176), விளரி (குறுந்.336) என்பனவாகும்.

## தொழில்

நிலத்தின் அமைப்புக்கு ஏற்பக் குறிஞ்சி நில மக்கள் பெரும்பான்மை வேட்டையாடியும் சிறுபான்மை உழவு செய்தும் வாழ்ந்து வந்தமையை

அறிய முடிகின்றது. வேட்டையாடுதல் (அகம்.58), உழவு (அகம்.262), தினைபுனம் காத்தல் (நற்.102), தினைஅறுத்தல் (ஐங்.286), தேனெடுத்தல் (அகம்.78), வேட்டையாடல் (நற்.276), கிழங்கு அகழ்தல் (கலி.39), நெல்விதைத்தல் (குறுந்.100), தினைபுனம் காத்தல் (குறுந்.291) ஆகிய தொழில்களை செய்து குறிஞ்சி நில மக்கள் வாழ்ந்து வந்தனர்.

இவ்வாறு குறிஞ்சித் திணைக்குரிய கருப்பொருள்கள் அந்நில மக்களின் வாழ்வியலுக்கு ஏற்றவாறு அமைந்திருப்பதைக் காணலாம். இக்கருப்பொருள்கள் அம்மக்களின் பண்பாடு மற்றும் நாகரிகத்தை வெளிப்படுத்துவனவாக அமைந்திருக்கிறது.

## உரிப்பொருள்

குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் புணர்தல் புணர்தல் நிமித்தமும் ஆகும். எட்டுத்தொகை குறிஞ்சித் திணைப்பாடல்களில் தலைவன், தலைவி களவொழுக்க உறவை பல இடங்களில் காணலாம்.

தலைவன், களவின்பத்தையே கருதி திருமணம் செய்யாமல் பகற்குறிக்கண்ணும் இரவுக்குறிக்கண்ணும் மாறிமாறி இடைவிடாமல் வந்து நிற்கிறான். தோழி அவனுக்கு தலைவியை அன்னை இற்செறித்தமையையும், வெறியாட்டு எடுக்க முயன்றமையையும் அலர் எழுந்தமையையும் கூறி விரைவில் மணம் செய்து கொள் என்று அறிவுறுத்துகிறாள். இதனை அகநானூற்றில் நாற்பத்தாறு பாடல்களில் கூறப்பட்டுள்ளது. (அகம்.2, ,12, 8, 8,32, 38, 42, 68, 78, 88, 92, 98, 108, 112 முதல் 392 வரையுள்ள பாடல்கள்)

இரவுக்குறியில் வந்தொழுகும் தலைவனிடம் தோழி விரைந்து வரைந்து ஒழுக வேண்டுகிறாள். அவனிடம், தலைவனே நின் மலையில் பலாமரத்தில் பலாப்பழம் எந்தவிதப் பற்றுக்கோடுமின்றி

தொங்குவதுபோல் இவளுடைய உயிரானது மிகச் சிறியதாகும். இவளது காமமோ பெரியதாகும். காமம் எனும் பெரிய கனி பாரம் தாங்காமல் முறிவதற்குள் தலைவியை வரைந்து கொள் என்கிறாள். இதனை,

**“சிறுகோட்டுப் பெரும் பழம் தூங்கியாங்கு இவள்**
**உயிர் தவச்சிறிது; காமமோ பெரிதே”**[76]

என்ற குறுந்தொகைப் பாடல்வழி அறியலாம்.

தலைவன் இரவுக்குறி வரும் வழியின் தீமைக்கு வருந்திய தலைவி அவன் சினைப்புறமாக இருக்க தோழியிடம் கூறுகிறாள்.

பெண் புலி இரை தேடும் கொடிய வழியில் நீரோட்டத்தையுடைய ஆற்றைக் கடந்து நீந்தி வருகின்றான். இதனை அவன் மீதுள்ள மலர்கள் மூலம் அறிந்தேன். அதனால் தலைவனை இரவில் வரச்சொல்லாதே என்கிறான். இதனை,

**“பெருங்களிறு உழுவை தாங்கலினி இரும்பிடிக்**
**கருவிமா மழையின் அரவம் அஞ்சுபு”**[77]

எனும் நற்றிணைப் பாடல் வழி தலைவியின் வருத்தத்தை அறியலாம்.

இரவுக்குறியின் ஏதத்தை நினைத்து தலைவி வருந்துவதை தோழி தலைவனிடம் கூறுகிறாள். அதனால் பகலில் வா என்று அறிவுறுத்துகிறாள். தலைவியைச் சந்திப்பதற்கு இரவு நேரத்தில் இடி மின்னலுடன் கூடிய பெருமழை பொழியும் போது தனியாக வருகின்றாய். வழியில் உனக்கு என்ன துன்பம் நேருமோ? என்று நினைத்து ஒவ்வொரு நாளும் தலைவி அழுகின்றாள். அதனால் அதிரும் குரலை உடைய ஆண் குரங்கு மிளகின் தளிரை உண்பதை வெறுத்து மலைச் சிகரங்களில் தாவி விளையாடியது. அதனால் மரங்களின் மலர்கள் கீழே உதிர்ந்து வேலன் வெறியாடும் களத்தைப் போல் தோன்றுகிறது.

**“வெறி அயர் வியன்களம் கடுக்கும்**

**பெருவரை நன்னிய சாரலானே”[78]**

இத்தகைய மலைச்சாரலில் நீ பகலில் வந்து வந்திருத்தல் வேண்டும் என்கிறாள்.

“இரவுக் குறியில் வந்து நீங்கும் தலைவனை எதிர்பட்டுத் தோழி தலைவியின் வருத்தத்தை எடுத்துக் கூறி விரைவில் அவளை வரைந்து கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்துகிறாள்”[79]

இவ்வாறு களவொழுக்கத்தின் கண் குறிப்பட்டுப் புணர்ந்து மகிழ்தலையும், வரைந்து கொள்ள வேண்டி வற்புறுத்தும் தன்மைகளையும் சுவைப்படக் குறிஞ்சித் திணையில் சித்தரிக்கப்பட்டுள்ளது.

**திணை மயக்கம்**

மயக்கம் எனும் சொல் தொல்காப்பியத்தில் ஒன்றுடன் ஒன்று கலத்தல், மயங்குதல், கலவை எனும் பொருள்களில் கூறப்பட்டுள்ளது. இவற்றில் மயக்கம் என்ற சொல்லுக்கான முக்கியப் பொருளாக இருப்பது கலத்தல் என்பதே ஆகும். எனவே திணை மயக்கம் எனும் கூட்டுச் சொல்லில் உள்ள மயக்கமும், திணைக் கலப்புப் பற்றியதே ஆகும்.

திணை மயக்கம் என்பது ஒரு திணைக்கு உரியனவாகக் கூறப்பட்ட முதலும் கருவும் மற்றொரு திணையின்கண் கலந்து வருவது திணை மயக்கம் என்று கூறப்படும்.

“உரிப்பொருள் அல்லன மயக்கவும் பெறுமே”[80] என்ற நூற்பாவில் உரிப்பொருள் மயங்காது என்பது புலனாகும்.

“முதற்பொருளில் நிலம் ஒழிந்து, பொழுதும் கருப்பொருளும் மயங்கி வரும்”[81] அவ்வாறு மயங்கி வரும்போது, எந்த நிலத்தில் மயங்கி வருகிறதோ அந்நிலத்தோடு சேர்த்து திணை உணரப்படும் என்பதை,

**“எந்நில மருங்கினும் பூவும் புள்ளும்**

**அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும்**

**வந்த நிலத்தின் பயத்த ஆகும்”**[82]

என்ற நூற்பாவில் விளக்குகிறார் தொல்காப்பியர்.

உரிப்பொருள், முதற்பொருளில் நிலம் ஆகியவை மயங்காது, பொழுதும், கருப்பொருளும் மயங்கும் என்பது தொல்காப்பியர் கூறும் திணைமயக்கக் கோட்பாடு ஆகும்.

“திணை மயக்கத்தில் இரண்டு திணைக்கூறுகள் தம்முள் கலந்து நிற்கும். உரிப்பொருளைப் பாடற்பொருளாக விளக்கும்போது இரண்டு திணைகளுக்குரிய உரிப்பொருள்கள் கலந்து ஒருபாட்டில் வர முடியாது. எனவே, இரண்டு உரிப்பொருள்கள் தம்முள் மயங்கிவரும் என்றல் பொருந்தாது. ஆனாலும் முதலும் கருவும் ஒரு திணைக்குரியவாகவும் உரிப்பொருள் பிறிதொரு திணைக்குரியதாகவும் அமையலாம்”[82] எனத் திணை மயக்கத்திற்கும் விளக்கம் தருவர்.

திணைக் கூறுகளாகக் கூறும் முப்பொருட்களாகிய முதல், கரு, உரி என்ற மூன்றும் எவ்வெவ்வாறு கலந்து வரலாம் என்பதை,

**“திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே**

**நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப**

**புலன்நன் குணர்ந்த புலமை யோரே”**[84]

என்று தொல்காப்பியர் விளக்குகிறார். இந்நூற்பாவில் வரும் திணை என்பதற்கு வெவ்வேறு நிலையில் உரை கூறப்பட்டுள்ளது.

“ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற்பொருளோடு சேர முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற்பொருளோடு சேர நிற்றலும் கடியப்படாது. ஆண்டு நிலம் சேர

நிற்றல் இல்லை என்று சொல்லுவர். எனவே காலம் மயங்கும் என்றவாறாயிற்று”[85] என்கிறார் இளம்பூரணர்.

ஆ. சிவலிங்கனார், “திணை மயக்குறுதல் என்பது நிலமும் பொழுதும் மயங்குதலையே குறிக்கும்”[86] என்கிறார்.

எனவே, ஒரு நிலம் தனக்குரியதாகக் கருதப்பட்டுவரும் ஒவ்வொரு ஒழுக்கத்தை மட்டுமே உடையதாக வராமல் பிற ஒழுக்கங்களையும் ஏற்றுச் செயல்படும். இந்த அடிப்படையில் குறிஞ்சியில் புணர்தல் ஒழுக்கம் மட்டுமல்லாமல் பிற இருத்தல் முதலான ஒழுக்கங்களும் வரலாம். இவ்வாறே பிற திணைகளில் எஞ்சிய திணைகளின் ஒழுக்கங்கள் தனித்தனியே கலந்து வரலாம். இவற்றைப்போலவே கைக்கிளையும் பெருந்திணையும் ஐந்திணைகளிலும் வரலாம் என்பது புலனாகிறது.

## குறிஞ்சித் திணைப்பாடல்களில் திணை மயக்கம்

சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் பூவும் பறவைகளைத் தவிர ஏனைய பிறதிணைக் கருப்பொருளும் முதற்பொருளும் உரிப்பொருளும் மயங்கி வருவதை பின்வரும் எடுத்துக்காட்டுகளால் அறியலாம்.

குறிஞ்சியுள் நெய்தல் திணை மயங்குதல்

**“செறுவர்க் குவகை யாகத் தெறுவர**
**ஈங்ஙனம் வருபவோ தேம்பாய் துறைவ!**
**சிறுநா வொண்மணி விளரி யார்ப்பக்**
**கடுமா நெடுந்தேர் நேமி போகிய**
**இருங்கழி நெய்தல் போல**
**விருந்தினள் அளியல்நீ பிரிந்திசி னோளே”**[87]

இஃது தலைமகன் இரவுக்குறி நயந்தானைத் தோழி சொல்லி மறுத்ததாக வரும் குறுந்தொகைக் குறிஞ்சிப் பாடலாகும்.

இப்பாட்டில் ‘தேம்பாய் துறைவ’ என்ற தலைமகன் விளிக்கப்படுகிறான். ‘துறைவ’, ‘சேர்ப்ப’ என்று நெய்தல் நிலத்தலைவனை விளிப்பதுதான் அகப்பொருள் மரபு. குறிஞ்சித் தலைவன் ‘குன்றநாடன்’ ‘பெருங்கல்நாடன்’ ‘நல்வரை நாடன்’ ‘மால்வரை நாடன்’ என்றுதான் குறிஞ்சிப் பாடல்களில் குறிக்கப்பெற்றுள்ளான், இங்கு ‘தேம்பாய் துறைவ’ என்பது திணை மயக்க விளியாக வந்துள்ளதைக் காண முடிகிறது. மேலும், நெய்தல் நிலத்திற்குரிய ‘விளரிப்பண்’ இக்குறிஞ்சித் திணைப் பாட்டில் மயங்கி வருகிறது, நெய்தல் நிலத்து நீரை ‘இருங்கழி’ என்று இங்குச் சுட்டப்படுகின்றது.

தலைவன் வந்த தேரின் உருளையால் நசுக்குண்ட நெய்தல் பூப்போல் தலைவி உருக்குலைந்து நலிந்து இரங்கினாள் என்று புலவர் உவமை கூறும் போது இரங்கல் உரிப்பொருளே படிப்போர் உள்ளத்தில் மேலோங்கி நிற்கின்றது.

இப்பாடலைக் குறிஞ்சியுள் நெய்தல் திணை மயங்கி வருவதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

இரவுக்குறி வந்து ஒழுகா நின்ற தலைமகன் கேட்குமாறு தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் ஊரில் அலர் எழுந்த தன்மையைக் மற்றொரு குறிஞ்சிப் பாடல் காட்டுகிறது.

**“பனைத்தலைக் கருக்குடை நெடுமடல் குறுந்தொடு மாயக்**
**கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்**
**கணங்கொள் சிமைய வணங்குங் கானல்”**

என்ற இப்பாடலில் கடற்கரையை வருணிக்கப்பட்டுள்ளது. கடற்கரைப் பகுதியில் பெருங்காற்று வீசுவதாகவும், மணல் பெருமேடாகக் குவிக்கப்பட்டு அங்குள்ள பனை மரங்கள் குருத்தொடு மறைக்கப்படுவதையும் காட்டியுள்ளார் புலவர். மணல்மேட்டில் தலைமகன்

வந்து சென்ற ஈரம் புலர்வதற்குள் ஊரெல்லாம் அலர் பரவி விட்டது. ‘கானல்’ என்ற சொல்லைப் புலவர் கையாண்மைள்ளமை இங்கு நோக்கப்படுகிறது. எனவே இங்கு நெய்தல் நிலம் குறிஞ்சியுள் மயங்கி வந்திருப்பதை அறியலாம்.

## குறிஞ்சியுள் பாலைத்திணை மயங்குதல்

மதுரை மருதனிளநாகனார் பாடிய நற்றிணைக் குறிஞ்சித் திணைப் பாடலில் பகைவயிற் பிரிந்திருந்த தலைமகனின் ‘பாசறைப் புலம்பல்’ இடம் பெற்றுள்ளது.

**“பாசறைப் புலம்பல் என்பது பாசறைக்கண்**
**தலைமகன் தண்மையுரைத்தல் என்றவாறு”**[88]

என்பர் இளம்பூரணர்.

குன்ற குறவனொடு காதலில் திளைத்து விளையாடிய மடந்தை நல்லாளைக் கண்ணுற்ற தலைமகன் ஒருவன்,

**“நீரிரங் கரைநாள் மயங்கிக் கூதிரொடு**
**வேறுபுல வாடை அலைப்பத்**
**துணையிலேம் தமியேம் பாசறை யேமே”**[89]

என்று பாசறைக்கண் புலம்புகின்றான். இங்குக் கூதிர்பாசறைப் புலம்பல் இடம்பெற்றுள்ளது.

தலைமகனுக்குப் பிரிவின்கண் கூற்று நிகழுமிடங்களைக் குறித்து விளக்கவந்த தொல்காப்பியர் அகத்திணையியலில் பாலைக்குரிய உரிப்பொருளாகப் பாசறைப் புலம்பலைச் சுட்டியுள்ளார். பாலை உரிப்பொருள் எல்லாத் திணைகளிலும் விரவி வரும். எனவே இங்கு பாலைத் திணைக்குரியப் பாசறைப் புலம்பல் குறிஞ்சித் திணையில் மயங்கி வந்துள்ளதை அறிய முடிகிறது.

குறிஞ்சிப் பாடல்களில் பாலைத்திணைக்குரிய இளவேனில் காலம் மயங்கி வருவதும் மற்றொரு எடுத்துக்காட்டில் காணலாம். இளவேனிற் காலமாகிய சித்திரை, வைகாசி மாதத்து நிலவு பட்டப்பகல் போன்று தோன்றும். அப்போது இந்நிலவு களவுப் புணர்ச்சி காதலர்க்கு நன்றாக அமைவதில்லை. இதை,

**"எல்லி வருநர் களவிற்கு**

**நல்லை யல்லை நெடுவெண்ணிலவே"[90]**

என்று இளவேனிற் காலத்து நிலவினைப் பாடுகிறார் நெடுவெண்ணிலவினார்.

இக்குறுந்தொகைக் குறிஞ்சிப் பாடலில் பாலைக்குரிய இளவேனில் காலம் குறிஞ்சித் திணையில் மயங்கி வந்துள்ளமையை காண முடிகிறது.

"கொங்கு தேர் வாழ்க்கை" எனத் தொடங்கும் குறுந்தொகை இரண்டாம் பாடலிலும் பாலைக்குரிய இளவேனில் குறிஞ்சித் திணையில் மயங்கி வருவதாகக் கருதுவர் நச்சினார்க்கினியர்"[91]

## குறிஞ்சியுள் மருதத்திணை மயங்குதல்

தொல்காப்பியர் 'கூதிர்' காலத்தைக் குறிஞ்சிக்குரிய பெரும்பொழுதாகவும், 'யாமத்தை' குறிஞ்சிக்குரிய சிறுபொழுதாகவும் குறிப்பிடுகிறார். மேலும் பனியெதிர் பருவமாகிய முன்பனிக் காலத்தையும் குறிஞ்சித் திணைக்குரிய பெரும்பொழுதாகவே எண்ணினார். ஆனால் இது சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் சிலவிடங்களில் மாறிவருகிறது.

**"கொண்டல் வான்மழை பொழிந்த வைகறை**

**தன்பனி அற்சிரம் தமியேற் கரிதெனக்**

**களவிலும் பிறிவறி யலளே............"**

என்ற அகநானூற்றுக் குறிஞ்சித் திணைப் பாடல் இதை குறிப்பிடுகிறது. இங்கு முன்பனிக்காலத்தில் ‘வைகறை’ குறிஞ்சிக்குரிய சிறுபொழுதாகவே வந்துள்ளது.

கூதிர் காலத்தில் வைகறைப் பொழுது மயங்கி வருவதை நற்றிணைப் பாடல் (347) விளக்குகிறது. இதில் மருதத்திணைக்குரிய சிறுபொழுதாகிய ‘வைகறை’ குறிஞ்சித் திணையில் மயங்கி வந்துள்ளதை காண முடிகிறது.

‘திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே’ என்று தொடங்கும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரையெழுத வந்த நச்சினார்க்கினியர் மருத உரிப்பொருள் குறிஞ்சித் திணையில் மயங்கி வந்திருப்பதை ஐங்குறுநூற்றுக் குறிஞ்சிப்பாடல்களில் (240, 265, 283) எடுத்துக் காட்டிள்ளார்.

“நற்றிணை 176வது பாடலிலும் மருத உரிப்பொருள் குறிஞ்சித் திணையில் மயங்கி வருவதாக டாக்டர்.இரா.பெரியகருப்பன் கூறியுள்ளார்”[92]

ஐங்குறுநூறு 265வது பாடலில் குறிஞ்சித் திணையில் மருதத்தின் உரிப்பொருள் மயங்கி வந்திருக்கிறது. அவை,

**“புலிகொல் பெண்பாற் பூவரிங் குருளை**
**விளைவெண் மருப்பிற் கேழல் புரக்கும்**
**குன்றுகெழு நாடன் மறந்தனன்...........”**[93]

என்ற உள்ளுறைப் பாடலில் பரத்தமைக் காரணமாகத் தன்னையும் தான் ஈன்ற பொன் போன்ற புதல்வனையும் விட்ட தலைவன் பொருட்டு ஏன் வாயில் வேண்டி வந்தீர்? என்று தலைவன் விடுத்த, வாயில் மக்களைச் சாடுகிறாள் தலைவி. இங்கு ‘ஊடல்’ உணர்வே மேலோங்கி நிற்பதைக் காண முடிகிறது.

**குறிஞ்சியுள் முல்லைத் திணை மயங்கல்**

முல்லைக்குரிய கார்காலமும் மாலைப்பொழுதும் குறிஞ்சிப் பாடல்களில் மயங்கி வந்துள்ளது. முல்லை நிலத்தெய்வமாகிய திருமால் பற்றிய குறிப்பும் வந்துள்ளது.

கார்காலத்தில் மழை பெய்ததால் எள் செடிகளில் காய்கள் பதனழிந்து உள்ளீடில்லாமல் உருகிப் பொக்காக மாறிவிட்டன. இச்செய்தி குறுந்தொகைக் குறிஞ்சித் திணைப்பாட்டில் இடம் பெற்றுள்ளது.

**“பழமழை பொழிந்தெனப் பதனழிந் துருகிய**
**சிதட்டுக்காய் எண்ணின் சில்பெயற் கடைநாள்”**[94]

இங்கு முல்லைக்குரிய கார்காலம் குறிஞ்சித் திணையில் மயங்கி வந்துள்ளதை அறிய முடிகிறது.

அகநானூற்றுக் குறிஞ்சிப் பாடல்களில் முல்லைக்குரிய சிறுபொழுது ‘மாலை’ இடம்பெற்றுள்ளது.

**“பயங்கெழு திருவின் பல்கதிர் ஞாயிறு**
**வயங்குதொழில் தரீஇயர் வலனேர்பு விளங்கி**
**மல்குகடல் தோன்றி யாங்கு மல்குபட**
**மணிமருள் மாலை மலர்ந்த வேங்கை”**[95] என்றும்,

**“வடந்தை தூக்கும் வருபனி அற்சிரம்**
**சுடர்கெழு மண்டிலம் மழுங்க ஞாயிறு**
**குடகடல் சேரும் படர்கூர் மாலையும்”**[96] என்றும்,

அகநானூற்றில் முல்லைக்குரிய மாலைப் பொழுது குறிஞ்சித் திணையில் மயங்கி வந்திருக்கிறது.

**“தீங்குழல் ஆம்பலின் இனிய இமிரும்**
**பதன்மலர் மாலையும் பிரிவோர்**
**அதனினும் கொடிய செய்குவ ரன்னாய்”**[97]

என்ற ஐங்குறுநூறு பாடல் மாலைப் பொழுதை குறிப்பிடுகிறது.

வினைவயிற் பிரிந்த தலைமகன் வருவதாகக் குறித்துச் சொன்ன மழைக்காலமாகிய கார்காலம் வந்துற்றதாக, ஆற்றாளாகிய தலைவியைத் தோழி வற்புறுத்துகின்றாள்.

“கடல் நீரை ஆவி வடிவமாக வாங்கி பருகி மலை கண் விழித்து இமைப்பதுபோல் மின்னி இடியிடித்து எங்கும் பரவிப் பெய்யத் தொடங்கிய மழைக்கு விருந்தெவன் செய்கோ?”[98] என்றாள் தோழி.

இரவுக்குறியில் தோழி கேட்குமாறு தலைவன் தன் நெஞ்சோடு கூறும் வகையில் அமைந்த பாடல்,

**“அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி**
**எற்மட மாற்கு வல்சி ஆகும்”**[99]

இப்பாடல் இடம்பெற்றுள்ள குமிழ மரத்தின் வளைந்த மூக்கை உடைய முதிர்ந்த பழங்கள் அங்கு விளையாடும் மான்களுக்குச் சிறந்த உணவாகப் பயன்படுகிறது. இக்குமிழம் பழங்கள் பாலை நிலத்திற்குரிய பழமாகும். குறிஞ்சித்திணையில் மயங்கி வந்துள்ளது. எனவே பாலை நிலத்திற்குரிய கருப்பொருள் குறிஞ்சி நிலத்தில் மயங்கி வந்துள்ளமைக்கு மேற்கண்ட பாடல் சான்றாகும்.

இயற்கைப் புணர்ச்சியின் இறுதியில் தலைமகளை ஆயமகளிரரோடு கண்ட தலைவன் அவளது அழகினையும், சிறப்புகளை வருணிப்பதாக அமைந்த பாடல்,

**“தண்சேறு தாஅய மதனுடை நோன்தாள்**
**கண்போல் நெய்தல் போர்வில் பூக்கும்”**[100]

இப்பாடலில் குறிஞ்சி நிலத்தில் உள்ள வயல்களில் விளைந்த அரியப்பட்ட நெல்கதிர்களை உடைய பெரிய நெற்போரில் மலர்ந்த நெய்தல் மலரைப் போன்ற கண்களையுடையவள் என்று தலைவன் கூறுவதாக அமைந்துள்ளது. இப்பாடலில் உள்ள ‘நெய்தல் மலர்’ நெய்தல் நிலத்தில் பூப்பதாகும். இருப்பினும் குறிஞ்சி நிலத்தில் நெல் பயிரோடு மலர்ந்துள்ளதாக புலவர் குறிப்பிட்டுள்ளார்.

தலைவி இற்செறிப்பினால் துயரம் அடைந்தாள். அவளது உடல் நலம் சிதைந்ததை தோழி தலைவனிடம் கூறி வரைவுக் கடாயது என்ற துறையில் அமைந்த பாடல்,

**“முத்துப்படு பரப்பின் கொற்கை முன்துறைச்**
**சிறுபா சடைய செப்புஊர் நெய்தல்**
**தெள்நீர் மலரின் தொலைந்த**
**கண்ணே காமம் கரப்பு அரி யவ்வே”**[101]

முத்துக்கள் தோன்றுகின்ற கொற்கைத் துறையில் இருக்கும் சிறிய பசுமையான இலைகளைக் கொண்ட அழகான நெய்தல் மலர் போன்ற இவள் கண்கள் அழகு குலைந்தன என்பது இப்பாடலின் பொருளாகும். நெய்தல் நிலத்தில் பூக்கும் மலரை குறிஞ்சி நில தலைவியின் கண்களுக்கு புலவர் உவமைப்படுத்தியுள்ளார்.

முல்லை நிலத்திற்குரிய தெய்வம் திருமாலாகும். திருமால் கரிய நிறக்கடவுள். இவரது அண்ணன் பலதேவனோ வெண்மை நிறத்தில் காணப்படுகிறான்.

**“மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்**
**வாலியோன் அன்ன வயங்குவெள் அருவி”**[102]

என்ற இப்பாடலில் குறிஞ்சி நில மலைக்கு திருமாலையும் அதிலிருந்து விழும் வெண்மையான அருவிக்கு அண்ணன் பலதேவனையும் புலவர் உவமையாகக் கூறியுள்ளார்.

முல்லை நிலத்திற்குரிய பெரும் பொழுது கார்காலமாகும். கார்காலத்தில் மலர்கின்ற கடம்பமாலையை பூசாரி சூடி வெறியாடினார் என்பதை,

**"கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி**
**வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்"**[103]

என்ற பாடல் சுட்டுகிறது.

தலைவியைப் பிரிந்த தலைவனிடம் தோழி அவளது நிலையை உரைப்பதாக அமைந்த பாடல்,

**"நெய்தல் பாசடை புரையும் அஞ்செவிப்**
**பைதல் அங் குழவி தழீஇ ஒய்யென"**[104]

புலி பெரிய ஆண் யானையைக் கொன்றது. இதனால் பெண் யானை வாடிய துன்பத்தோடு, இயங்க இயலாமல் நெய்தலின் பசுமையான இலைகளைப் போன்ற அழகான செவியை உடைய கன்றினை அணைத்துக் கொண்டது என்று நல்வெள்ளியார் கூறுகிறார். அதாவது நெய்தலின் பசுமையான இலையை போன்று இளங்கன்றின் செவி இருக்கிறது என்று இதில் உவமிக்கப்பட்டுள்ளது.

தலைவனின் நாட்டைத் தோழி சிறப்பிக்கும் வகையில் அமைந்த பாடல் வரி,

**"படுமழை பொழந்த பாறை மருங்கில்**
**சிரல்வாய் உள்ள தளவின், பரல் அவல்"**[105]

மீன்கொத்திப் பறவையின் வாய் போன்ற அரும்புகளையுடைய முல்லைக் கொடியையும், பரற் கற்கள் நிரம்பிய பள்ளங்களை உடையது தலைவனின் காடாகும் என்று பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. குறிஞ்சிப் பாறைகளின் நடுவே முல்லைக் கொடிகள் வளர்ந்துள்ளதை இங்கு சுட்டப்பட்டுள்ளது.

சிறைப்புறமாக தலைவன் நிற்க, தோழி தலைவிக்கு உரைப்பதாக அமைந்த பாடல்,

**"..................... எழுமதி புணர்திரைக்**

**கடல் விளை அமுதம் பெயற்குஏற் றாஅங்கு**

**உருகு உகுதல் அஞ்சுவல்"**[106]

தோழியே ! அலைகளுடன் கூடிய கடலின் நீரால் விளைந்த உப்புக் குவியல் மழை பெய்கையில் கரைந்து போவது போல் உன் உள்ளம் வருந்துவதனைக் கண்டு நானும் அஞ்சுகிறேன் என்று தோழி கூறுகிறாள். நெய்தல் நிலத்தில் விளையும் உப்பு பற்றி செய்தி குறிஞ்சித் திணையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

எருதுகளைக் கொண்டு கதிர் அடிக்கும் மருத நிலத்தவர்களின் களம் செம்மை செய்தது போன்று கற்பாறையிடத்து விழும் வேங்கை மலர்களைக் கதிரடிக்கும் குறவர் மாலையாக சூடுவர் என்பதை,

**"வேங்கைக் கண்ணியர் எருதுஎறி களமர்**

**நிலம் கண்டன்ன"**[107]

என்ற வரிகள் கூறுகின்றன. மருத நில பரதவர்கள் குறிஞ்சிப் பாடலில் உவமிக்கப்பட்டுள்ளதை அறியலாம்.

அழிசி என்ற மன்னனின் நாட்டில் நெய்தல் பூக்களைச் சுற்றி வண்டுகள் மொய்க்க அதிலிருந்து தேன் வடிந்தது என்பதை,

**"வண்டுமூசு நெய்தல் நெல்லிடை மலரும்**

**அரியல்ஆம் கழனி ஆர்க்காடு அன்ன"**[108]

என்ற பாடலில் அறியலாம். நெய்தல் பூ குறிஞ்சித் திணைப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பரத்தை ஒழுக்கம் மருத நிலத்திற்கே உரியது. இருப்பினும் குறிஞ்சி நிலத்திலும் விரவும் என்ற செய்தியை கபிலர் புலப்படுத்துகிறார்.

**“சாந்தம் நாறும் நறியோன்**

**கூந்தல் நாறும்நின் மார்பே தெய்யோ”**[109]

குறிஞ்சி நிலத் தலைவன் பரத்தையரோடு உறவு கொண்டு உள்ளான். அதை தலைவியிடம் மறைக்க, தோழி இடித்துரைக்கிறாள். உனக்குப் பிறபெண்டிரோடு உறவு உள்ளமை எங்களுக்குத் தெரியாமல் இல்லை தெரியும். உன் காதலியின் கூந்தல் மணம் உன் மார்பில் மணக்கிறதே என்கிறாள்.

தோழி வாயில் மறுக்கவும், தலைமகனின் ஆற்றாமைக் கண்டு தலைமகள் வாயில் நேர்கிறாள். தலைவனிடம் தோழி,

**“பெரிய கூறி நீப்பினும்**

**பொய்வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே”**[110]

என்கிறாள். அதாவது தலைவன் பரத்தையொழுக்கத்தை மறைக்கிறான். பொய்யுரைக்கிறான் இதை, காதலர் கூறுகின்ற பொய்மொழிகளாகிய வலையின்கண் சிக்கித் தவிப்பது பெண்டிரின் இயல்பு என்கிறாள்.

தலைவியின் அழகு நலத்தை தலைவன் நெஞ்சுக்குக் கூறுவதாக அமைந்த பாடல் வரி.

**“முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்”**[111]

அதாவது வண்டினம் விரும்பும் முல்லையரும்புகளை வரிசையாக வைத்ததுபோல வெண்மையான பற்களையுடையவள் தலைவி என்கிறான்.

வேர்கள் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்து இருக்கும் மூங்கில்களில் காற்று மோதுவதால் உண்டாகும் ஓசை தறியிலே கட்டப்பட்ட யானை வருந்தி பெருமூச்சு விடுவதுபோல இருக்கும். அத்தகைய காட்டில் கோடைக்காலம் நிலை பெற்றிருக்கிறது என்று தலைவன் கூறுகிறான்.

**"வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரல்இசை**
**கந்துடிணி யானை அயர் உயிர்த் தன்ன**
**என்றூழ் நீடிய வேய்பயில் அழுவத்து"**[112]

என்ற பாடலில் 'என்றூழ்' என்னும் சொல் கோடை காலத்தை (இலையுதிர்காலம்) உணர்த்தும். இது பாலை நிலத்திற்குரிய பெரும்பொழுதாகும்.

இவ்வாறு ஒரு திணைக்குரிய உரிப்பொருள், கருப்பொருள், முதற்பொருள் வேறொரு திணையில் மயங்கி வந்திருப்பதை நோக்கும் பொழுது புலவர்கள் தாம் கூறவந்த கருத்தை உறுதிப்படுத்திக் கூறுவதற்கும், பொருள் புலப்படுத்துவதற்கும் உவமையாகக் கையாளும் பொழுது இவ்வாறு முதல், கரு, உரிப்பொருள்கள் கலந்து விளக்குவது இயல்பு என்பது புலனாகின்றது.

## தொகுப்புரை

திணை என்ற சொல் நிலத்தையும், நிலத்தில் வாழும் மக்கள் மற்றும் பிறப் பொருள்களையும் குறித்து வருகிறது. மேலும் கால வளர்ச்சியில் மக்களின் உயர்ந்த ஒழுக்கத்தையும் அகப்புற ஒழுகலாற்றையும் உணர்த்தி வருகிறது என்பது தெரிகின்றது.

உயிரும், பயிரும் வளர்வதற்கும் ஒழுக்கம் நிலவுவதற்கும் நாகரிகப் பண்பாடுகள் மலர்வதற்கும் நிலமே முழுமுதலாக அமைவதால் ‘குறிஞ்சி’ என்பது நிலத்தால் பெற்ற பெயர் ஆகும் என்ற உண்மை அறிய முடிகின்றது.

இலக்கியம் மக்களின் அன்றாட வாழ்க்கை நடைமுறைகளை வெளிப்படுத்தும் காலப் பெட்டகமாக திகழ்கிறது.

ஐவகை நிலங்களுக்கான முதல், கரு, உரிப்பொருள்கள் விளக்கப்பட்டுள்ளது. ஐவகை நிலங்களுக்கானப் பெயர்கள் அந்தந்த நிலங்களில் உள்ள மலர்களால் உண்டானது என்பது பெறப்படுகின்றது.

மலையும் மலையும் சார்ந்த இடமே குறிஞ்சி நிலமாகும். அதன் முதல், கரு, உரிப்பொருள்கள் எட்டுத் தொகை குறிஞ்சிப் பாடல்களில் இடம் பெற்றிருப்பதை ஆராயப்பட்டுள்ளது.

திணை மயக்கம் என்பது ஒரு திணைக்குரிய முதல், கரு மற்றொரு திணையின்கண் கலந்து வருவது திணை மயக்கம் ஆகும். முதற்பொருளில் நிலம் தவிர பொழுதும், கருப்பொருளும் வேறொரு திணையில் மயங்கி வரும். சில இடங்களில் உரிப்பொருளும் மயங்கும். இவை எட்டுத் தொகை குறிஞ்சிப்பாடல்களில் மயங்கி வரும் தன்மையை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. புறம். 2
2. பரி. 3
3. மணிமேகலை. 11
4. பொருந. 220, 221
5. மதுரைக்காஞ்சி. 326
6. பரி. 16
7. பட்டினப். 263 – 264
8. சிவத்தம்பி. கா, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, ப. 42
9. புறம். 27
10. புறம். 373
11. குறிஞ். 205-206
12. மேலது. 25
13. நச்சினார்க்கினியர் உரை. ப. 30
14. தொல். 1002
15. திருமுருகு. 267
16. பரி. 9
17. சிறுபாண். 267
18. தொல். 951
19. சிலம்பு. 11
20. புறம். 374
21. நற். 268
22. நற். 301
23. குறுந். 3

24. அகம். 308
25. ம.காஞ்சி. 300
26. மேலது. 613
27. குறிஞ். 63
28. திருமுருகு. 238-239
29. பெரும்பாண். 182
30. தொல். 952
31. தொல். 1002
32. L. Dudley Stamp, The World, P. 110
33. இளம்பூரணர் உரை. தொல். பொருள். அகத். நூற். 4
34. Will and Arial Durant, The Lessions of History, P.5
35. மு.வை. அரவிந்தன், உரையாசிரியர்கள், ப. 54
36. இரா. இளங்குமரன், இலக்கண வரலாறு, ப. 46
37. மேலது, ப. 46
38. மேலது, ப. 47
39. முனைவர். கா.கோ. வேங்கடராமன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 99
40. கா.சு. பிள்ளை, தமிழ் இலக்கிய வரலாறு, ப. 25
41. மேலது, ப. 11
42. கா.கோ. வேங்கடராமன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 48
43. ப. கொழந்தசாமி, தமிழ்ப் புதுக் கவிதைகளில் அகப்பொருள் மரபுக் கூறுகள், ப. 1
44. மு.வை. அரவிந்தன், உரையாசிரியர், ப. 54
45. தொல். அகத். 56
46. தொல். பொருள். 3

47. சுப்பிரமணியப்பிள்ளை. கா. பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியக் கருத்து, ப. 174
48. தொல். அகத். 3
49. குருசாமி, ம.ரா.போ. சங்க காலம், ப. 105
50. தொல். அகத். 3, நச். உரை
51. தொல். அகத். 3, நச். உரை
52. நாகு.இரா.கு. சங்க இலக்கியம், பொருள். ப. 4
53. வரதராசன். மு, பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக். 15-16
54. தொல். அகத். 5
55. மேலது, 2 : 1
56. மேலது, 2 : 2
57. சிலம்பு. காடு காண் காதை, 61-62
58. நம்மாழ்வார், திருவிருத்தம், 26
59. தொல். அகத். 5, இளம். உரை
60. மேலது, 5. இளம்.உரை
61. தொல்.அகத்.நச்.உரை
62. வரதராசன். மு., பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 418
63. தொல்.அகத். 5, நச்.உரை
64. இறை. அகப்.1, நக்கீரர் உரை
65. மாணிக்கம், வ.சுப. தமிழ்க்காதல், ப. 37
66. நம்பி. 10
67. தொல். அகத். 6-12
68. பெ. மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக் கவிதை மரபும், ப. 30
69. தொல். அகத். 18
70. நம்பியகப்பொருள். 19 உரை

71. சு. பாலசுந்தரம், அகத்திணைக் கோட்பாடுகள், ப. 38
72. கா.சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்று புரிதலை நோக்கி, ப. 103
73. தொல்.அகத். நூ. 16
74. மேலது. 9
75. ஆடிய பாதம்,ந.சங்க இலக்கியத்தில் குறிஞ்சித் திணை, பக்.10-11
76. குறுந். 18
77. நற். 144
78. வி. நாகராசன். அ, ஐங்குறுநூறு, பா. 214
79. குறிஞ்சிக்கலி. 38
80. தொல். அகத். 15
81. மேலது. 14
82. மேலது. 19
83. அருணாசலம். ப, தொல்காப்பியம். ப. 69
84. தொல். அகத். 12
85. இளம்.உரை, தொல். பொருள். ப. 177
86. சிவலிங்கனார். ஆ. தொல்காப்பிய உரை வளம், ப. 161
87. குறுந். 336
88. இளம். உரை.தொல்.பொருள். அகத். 41
89. நற். 341
90. குறுந். 47
91. நச்.உரை, தொல்.பொருள்.அகத். 16
92. Dr. R.M.Periyakaruppan (Thamizhennal), Tradition and Talent in Cankam Poetry, P. 22
93. ஐங். 265

94. குறுந். 261

95. அகம். 298

96. மேலது. 378

97. ஐங். 215

98. நற். 112

99. நற். 6

100. மேலது. 8

101. மேலது. 23

102. மேலது. 32

103. மேலது. 34

104. மேலது. 47

105. மேலது. 61

106. மேலது. 88

107. மேலது. 125

108. மேலது. 190

109. ஐங். 240

110. மேலது. 283

111. அகம். 162

112. குறுந். 62

## இயல் – 2

## உளவியல் நோக்கில் அகத்திணை மாந்தர்கள்

எள்ளிலிருந்து எண்ணெய் எடுப்பதுபோல் இலக்கியமும் மனித உணர்வின் மீட்டுருவாக்கமே ஆகும். மனித உணர்வின் வெளிப்பாடே இலக்கியம். இலக்கிய வகைகளும் வடிவங்களும் படைப்பாளரின் உளவியலையும், காலச்சூழ்நிலையையும் பொறுத்ததே. எனவே உணர்வின்றி உள்ளம் இல்லை, உள்ள உணர்வின்றி படைப்பாளனும் இல்லை. இலக்கியமும் இல்லை.

உலக வாழ்வானது அன்பால் பிணைக்கப்பட்டது. அன்பினை, மனிதனின் மனத்தினை புரிந்து கொள்வதன் மூலம் அறிய முடியும். மனித மனத்தினை அறிந்து கொள்வதற்கு இலக்கியம் பயன்படுகிறது. மேலும் உள்ளத்தினை அறியப்படும் ஒரு உளவியல் ஆய்வு முறையே உளவியல் எனப்படுகிறது. இலக்கியம், உளவியல் என்னும் இரண்டுமே மனிதனுடைய அகநிலையைச் சார்ந்து உள்ளது.

இலக்கியத்திற்கும் உளவியலுக்கும் இடையே உள்ள தொடர்பு காலச்சூழ்நிலைகளைப் பொறுத்தே வெவ்வேறு கருத்துப் பொருளைப் பெறுகின்றன. குறிப்பாக படைப்பு உருவாக்கத்திற்கான காரணங்கள் பல்வேறுபட்ட ஒத்த, முரண்பட்ட கருத்துக்களைப் பெறுகின்றன.

### உளவியல் – விளக்கம்

‘உளவியல்’ என்ற சொல் கிரேக்க மொழியில் இருந்து உருவான சொல் ஆகும். ‘சைக்கி’ என்பது ஒரு உயிரையும் ‘லோகஸ்’ என்பது அறிவியலையும் குறிக்கும். இவ்வித இருசொற்களும் இணைந்து உருவானதே (சைக்காலஜி) உளவியல்.

மனிதனின் வெளிப்படையான செயல்பாடுகளை ஆராய்ந்து அதன்பின் மனித நடத்தைகளை உற்று நோக்கி ஆராய்ந்து பகுத்துக் கூறுவதே 'உளவியல்' ஆகும்.

'உளவியல் என்பது மனித நடத்தையை ஆராயும் அறிவியல்' என்பர். 'நடத்தை' (Bahaviour) என்ற சொல் உளவியலில் எப்பொருளில் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதைத் தெளிதல் வேண்டும். அவ்வாறு தெரிந்துக்கொண்டால் 'உளவியல்' என்பதன் உண்மையான பொருளையும் அதன் அடிப்படையான நோக்கத்தையும் உணர முடியும்.

"உலகில் எல்லாச் செயலும் நோக்கம் குறித்தே நிகழ்கின்றன. காரணமின்றிக் காரியமில்லாததால் நோக்கமின்றிச் செயலில்லை. விலங்குகளின் செயலாக இருப்பினும் பறவைகளின் செயலாக இருப்பினும், பண்பட்ட மக்களின் செயலாக இருப்பினும், வேறு எவ்வுயிரின் எவ்செயலாக அமையினும், எல்லாச் செயல்களுக்கும் அடிப்படையான நோக்கம் அமையினும், எல்லாச் செயல்களுக்கும் அடிப்படையான நோக்கம் உண்டு. நோக்கம் குறித்து வருகின்ற செயல் அல்லது செயல் உண்டு. நோக்கம் குறித்து வருகின்ற செயல் அல்லது செயல்களின் தொடர்ச்சியை உளவியலார் நடத்தை என்று கருதுவர்"[2]

நோக்கம் குறித்த செயல் நடத்தை என்றால் அது புறச்செயலை மட்டும் குறிக்குமா, அகச் செயலையும் உள்ளடக்குமா எனில் 'நடத்தை' என்பது அகப்புறச் செயல்கள் யாவற்றையும் குறிக்கும் பொதுச் சொல்லாய் விரிந்த பொருளில் உளவியலில் கையாளப்பட்டுள்ளது.

"நடத்தை என்பது ஓடுதல், பேசுதல், கடுதல் என்னும் புறச் செயல்களை மட்டுமின்றிச் சிந்தித்தல், கற்பனை செய்தல், உணர்தல், கற்றல் என்னும் அகச் செயல்களையும் குறிப்பதாகும். இதை ஆராயுமிடத்து, உளவியல் என்பது உள்ளத்தையும் அதன் அகவழிச் செயலையும், அதன் தூண்டுதலிற் செயல்படும் புறச்செயல்களையும்,

இவற்றின் விளைவால் ஒருவனிடம் ஏற்படும் நடத்தையையும் விவரிப்பது என்பது புலனாகும்”[3]

அவனது வெளித்தோற்றத்தை மையமாக கொண்டது. அகநடத்தை மனித மனம், ஆன்மா, அவன் உள் மனதில் ஏற்படும் மாற்றத்தைக் கண்டறிவதாகும். மனிதனின் மன அழுத்தம், மனச் சிதைவு ஆகியவற்றைக் கொண்டு அகமனச் செயலினை நாம் அறிய முடியும்.

ஒரு நடத்தையை நாம் கட்டுப்படுத்தி, பிற நடத்தையுடனும், பிற செயலோடும் ஒப்பிட்டு நடத்தையை மாற்றி அமைத்துக் கொள்ள முடியும்.

**உளவியல் – வரையறை**

உயிரினத்தின் நடத்தையைக் கட்டுப்படுத்தவும் நன்கு புரிந்து கொள்ளும் செயலே உளவியல் ஆகும். ஒரு உயிரினம் சமூகத்தில் அறிவியல் கூற்றுப்படி, உண்மையான செய்திகளைத் தொகுத்து முறைப்படுத்தி விருப்பு வெறுப்பின்றி நடுநிலைமையுடன் ஆராய்ந்து உண்மையைக் கண்டறிந்து முடிவுகளை அனைவருக்கும் முன்வெளியிடுதல் வேண்டும். விதிவரும் முறை, விதிவிலக்கு முறை என பின்வரும் ஐந்திணை வகைப்படுத்தலாம். அவையாவன,

1. ஆராய்ச்சி
2. மன உறுதி
3. கடுமுயற்சி
4. கற்பனை
5. புறவயத் தன்மை

மேற்கண்ட ஐந்தினையும் கொண்டு கருத்தினை திரட்டி அதன்பின் தொகுத்து ஒன்றன்பின் ஒன்றாக வரிசைப்படுத்தி சுட்டிக் காட்டுவது உளவியல் ஆகும்.

**உளவியல் தன்மைகளின் வகைகள்**

உளவியல் அறிஞர்கள் மனிதனது பல நடத்தையைப் பல கூறுகளில் ஆராய்ந்தனர். மனித நடத்தையில் ஒரு காரணத்தை எடுத்துக் கொண்டு ஒரு செயலை உற்று நோக்கும் முறை ‘உளவியல் தன்மை’ ஆகும் என்று அறிஞர் உளவியலுக்கு விளக்கம் தந்துள்ளமை காணத்தகும். இவ்விளக்கம் மிகவும் ஏற்புடையதாக அமைகின்றது.

“உளவியல், ஆன்மாவில் என்றும் மனித மனதில் புதைந்த செயல்களைக் கண்டறிந்து மனிதனின் வளர்ச்சிக்கும் உதவும் துறையாகும்”[4] மேலும் மனித மனம் பற்றி ஆராயும் துறையாகவும் விளங்குகிறது. மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை அவனுடைய செயல்பாட்டைக் கண்டு ஆராயும் துறை என்றும் கூறலாம்.

**மனவியல்**

உளவியலுக்கும் மனவியலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. உளவியல் மனிதமனம் பற்றியும் மனித நடத்தைகளைப் பற்றியும் ஆராயும் துறையாகவும், பிற உயிரினங்களின் மனம் பற்றி ஆராயும் துறையாகவும் விளங்குகிறது. மனிதனின் ஆன்மாவைக் கண்ணால் காண இயலாது. புலன்களின் உணரவும் முடியாது. மனிதனின் மனம் இருக்கும் இடத்தையும் அறிய முடியாது. மனித மனம் பூட்டினைப் போன்றது. இதற்கு திறவுகோல் அவர்களின் நடத்தைகளே ஆகும்.

ஓர் உயிர் இருக்கும்வரை அதற்கு எப்போது என்ன நடக்கும் எனத் தெரியாது. அந்த உயிர் அப்போதைய சூழ்நிலைக்கு ஏற்றவாறு நடத்தை கொள்ளும். மனம், எந்த செயலை செய்ய வேண்டும் என விருப்பது கொண்டுள்ளதோ, அதன் மீது நாட்டம் செலுத்தி, மனிதனை இயக்கும் ஓர் கருவியாக செயல்படுகிறது. ஒரு செயலை நம்மால் செய்ய முடியும் என்று

மனம் முடிவு செய்த பின்னால் தான் அச்செயலை செய்ய முடியும், முடியாது என்று மனம் ஒப்புக் கொண்டால், அச்செயலை நம்மால் செய்ய இயலாது.

**நடத்தையியல்**

மனிதனின் நடத்தைகளை விரிவாக விளக்கும் துறை உளவியல் ஆகும். அவன் வாழும் சூழலில் வாழ்க்கை முறையில் எந்த நடத்தையை அவன் நடைமுறைப்படுத்துகிறான் என்பதை ஆராயும் செயற்பாட்டிற்கு நடத்தையியல் என்று பெயர். மனிதனின் புறநடத்தை மனித மனத்தில் ஏற்படும் மாற்றங்களுக்கு ஒரு விடையினைக் கண்டறிவதும், பிறா் மனத்தில் என்ன இருக்கிறது என்பதைக் கண்டறியவும் முயல்வது இதன் தன்மை ஆகும். மனித மனதில் ஏற்படும் மாற்றத்திற்கு ‘உளப்பகுப்பாய்வு’ என்று பெயர்.

“உளப்பகுப்பு என்பது மனித மனத்தில் ஏற்படும் மன அழுத்த நோய் ஆகும். மனதில் ஏற்படும் அழுத்தமாவது இன்பம், துன்பம், வெறுப்பு, கோபம், வெறி போன்றவை ஆகும். இவற்றை மனதில் புதைத்து வைப்பதால் மனஅழுத்தம் ஏற்படுகிறது”[5] என்பா். இவற்றை ஒருவனின் நடத்தையை வைத்து கண்டறிய முடியும்.

மனதில் ஏற்படும் மாற்றம், சூழ்நிலைகள், மன அழுத்தத்தை ஏற்படுத்தக்கூடிய ஒரு தூண்டுதலாகும். “உள்ளம் என்பது உடம்பின் ஓர் உறுப்பாக அமையவில்லை. ஆன்மாவைப் போல இதுவும் கண்டறிய முடியாமல் இருக்கிறது. ஒருவன் உறங்கும் போது எந்த செயல்பாட்டையும் நினைத்துப் பார்ப்பதில்லை. அவன் முற்றிலும் நினைவுகளை இழந்துவிடுகிறான். உறங்கும் போது நினைவுகள் முற்றிலும் அழிவு பெறுகின்றது. அவன் விழித்த இன்ப நினைவுகள் படிப்படியாக உருவ நிலையை அடைகின்றது”[6]

## உளவியல் பிரிவுகள்

உளவியல் இன்று அனைத்துத் துறைகளிலும் பயனுள்ள அறிவியலாக விளங்குகின்றது. இன்றைய காலகட்டத்திற்கு ஏற்ப மனித நடத்தைகளைப் பிரித்து உணர்த்துவது உளவியல் துறைகள் ஆகும். இன்று உளவியலைப் பல பிரிவுகளாக பிரித்துள்ளனர். அவை, 1. பொது உளவியல், 2. இயல்பு நிலை உளவியல், 3. சமூக உளவியல், 4. பரிசோதனை உளவியல், 5. செயல் உளவியல், 6. இன உளவியல், 7. புவி உளவியல், 8. மருத்துவ உளவியல், 9. தொழில் உளவியல், 10. சட்ட உளவியல், 11. அரசியல் உளவியல் என உளவியல் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது.

## இலக்கியத்தில் உளவியல்

"இலக்கியத்திற்கும் உளவியலுக்கும் இடையே உள்ள தொடர்பைப் பெரும்பாலும் நான்கு வகைகளாகப் பிரிப்பர்"[7] உளவியல்,

1. படைப்பாளர் உளவியல்
2. படைப்பாக்க உளவியல்
3. பாத்திரங்களின் உளவியல்
4. வாசகரின் உளவியல் என்பனவாகும்.

பல்வேறு சூழ்நிலை காரணிகளான இந்நான்கு நிலைகளிலே இலக்கியத்திற்கும், உளவியலுக்கும் இடையே உள்ள தொடர்பை விளக்க முடியும்.

### 1. படைப்பாளரின் உளவியல்

இலக்கியத்திற்கும் படைப்பாளரின் உளவியலுக்கும் ஆழ்ந்த உண்மை இருப்பது வெளிப்பாடே, படைப்பாளருக்கும் உளவியலுக்கும் பல்வேறு நிலைபாடுகள் இருக்கும். அந்நிலை படைப்பாளன் தான் பல்வேறு நிலையில் பெறும் பல்வேறு உணர்வோட்டத்தைப் பொறுத்து அமையும். இந்தப் படைப்பாளரின் உளவியல் என்ற நிலை படைப்பிற்கும்

படைப்பாளரின் உளவியலுக்கும் உள்ள தொடர்பை ஆய்கிறது. கவிஞனின் படைப்பில் அவனது உளவியல் பெரும்பங்கு வகிக்கிறது என்பது பண்டைய கிரேக்கர் காலத்திலிருந்தே நிலவுகிறது.

படைப்பாளனின் உளவியலைப் பற்றி ‘சிக்மண்ட் பிராய்டு’ கூறுகையில், படைப்பாளர்கள் நரம்பு நோய் உடையவர்கள் என்கிறார். ஏதேனும் ஒரு வகையில் குறைபட்டுப் போனவர்களாய் ஒரு இழப்பிற்கு ஆட்பட்டவர்களாய் இருப்பர். அவர்களது படைப்பாகத்திறன், தனிச்சிறப்பு போன்றவை அவர்களின் குறைகளையும், இழப்புகளையும் ஈடுசெய்யும் ஒரு உத்தியே ஆகும். உண்மையில் இக்குறைகளால், இழப்புகளால் தாம் அடைந்த தாழ்வுணர்ச்சியை வெல்ல அவர்கள் மேற்கொள்ளும் உத்தியே படைப்புகள் எனலாம் என்கிறார். அதாவது தம் குறைகளையும் மீறித் தாம் சமுதாயத்தில் தமக்கென ஒரு அடையாளத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற மனப்பான்மையும் இதற்கு முதன்மையாகிறது.

**2. படைப்பாக்க உளவியல்**

இந்தப் படைப்பாக்க உளவியல் என்ற இரண்டாம் நிலை, படைப்பாளன் படைப்பை உருவாக்கக் காரணங்களையும் படைப்புச் செயலக்கும், அப்படைப்பாளனின் உளவியல் பண்புகளுக்கும் இடையே உள்ள தொடர்பை விளக்குகிறது.

இந்த படைப்பாக்க உளவியலைப் பற்றிக் கூறும்போது படைப்பாளனின் மனத்தினை ஐந்து நிலைகளாகப் பிரிப்பர்.

1. நினைவு மனம்
2. நினைவிலி மனம்
3. முதன்மையாக்கும் மனம்
4. ஈகோ
5. கனவு

இவ்வைந்தும் மனிதமன படிநிலைகளின் மோதல் மற்றும் ஒன்றுபோதல் போன்ற காரணம் படைப்பாளனின் உளவியலைப் படைப்பிலிருந்து எடுத்துக் காணலாம்.

**3. பாத்திரங்களின் உளவியல்**

பாத்திரங்களின் உளவியலைக் கொண்டு படைப்பாசிரியரின் உளவியலையே நிர்ணயிக்கும் நிலை இன்றைய உளவியல் உள்ளது.

**4. வாசகரின் உளவியல்**

இலக்கியத்தின் மீதான வாசகனின் உளவியல் எவ்வாறு அமைகின்றது என்ற நிலையை இலக்கியம் எவ்வெவ் நிலைகளில் வாசகனைச் சென்றடைகிறது என்பதையும் இவ்விலக்கிய உணர்வுகள் வாசகனின் உணர்வின் மீது எவ்வகை விளைவை ஏற்படுத்துகிறது என்பதையும் இந்நிலை விளக்குகிறது.

வாசகனுக்கும் இலக்கியத்திற்குமான உளவியலின் பயன் படைப்பாளனின் உளவியலை அறிய முடியாமல் போனாலும், வாசகன் தன் மனநிலையையே தான் அறிந்து கொள்ளும் பொருட்டு அமைதல் வேண்டும்.

இன்றைய திரைப்படங்கள், நாவல்கள் போன்றவற்றில் வரும் கதாபாத்திரங்கள் யாவும் வெற்றி பெறக் காரணம் இவ்வாறு வாசகனும், பார்வையாளர்களும் தலைமைப் பாத்திரத்தில் தங்களை வைத்துப் பார்த்து திருப்தி அடைவதுதான். இது ஒரு வகையில் சமூகத்தில் நன்மையே பயக்கிறது.

## இலக்கியமும் உளப்பகுப்பும்

கருத்து ஒன்றினை வெளிப்படுத்தும்போது கணப்பொழுதிலே தோன்றும் தற்காப்பு இயங்கு முறையில் எந்த ஒரு மனமும், 1. உள்ள முறிவு, 2. உள்ளப்போராட்டம், 3. உள்ள இறுக்கம் போன்ற மூன்று நிலைகளையும் தன் நிலைக்களனாகக் கொண்டு அமையும்.

1. உள்ள முறிவு

விரும்பிய இலக்கினை அடைவதில் நேரும் தடைகளாலோ, குறுக்கீடுகளாலோ, குறிக்கோள் ஒன்று இன்மையாலோ விளைவது உள்ள முறிவாகும். இதனை,

"ஓர் அழுத்தமான தேவையும் அதனை எய்தி நிறைவுற இயலாத உணர்வும் உடனியையும்போது நேரும் அனுபவமே உள்ள முறிவு"[8] என்பர்.

எப்போதும் மகிழ்வையே எதிர்நோக்கி வாழும் மனிதன் துன்பம் வரும்போது உள்ள முறிவை அடைகிறான். அத்துன்பம் தான் எதிர்பார்த்து வந்தாலும், எதிர்பாராமல் வந்தாலும் முறிவு என்பது மனித மனத்திற்கு பொதுவேயாகும். அவற்றின் தன்மை மட்டுமே வேறு. அவ்வாறான தன்மைகளைப் பல்வேறு வகையாகப் பகுக்கலாம். அவை சூழ்நிலையையும் உடனிலையையும் பொறுத்தே அமையும்.

உள்ள முறிவின் பிரிவுகள்

1. இயல்பான உள்ள முறிவு
2. உடல் - உள்ள குறையால் ஏற்படும் முறிவு
3. சூழ்நிலைத் தடை முறிவு
4. பொருள் நிலை முறிவு
5. சமூக நிலையிலான முறிவு என்பனவாகும்.

இதனை அடிப்படையாகக் கொண்டு உளவியலார் மூன்றாக வகைப்படுத்துகிறார்கள். அவை,

1. நிராசை
2. இடையூறு (அ) கட்டுப்பாடு
3. புறத்தே அமைந்த தாக்கு

போன்றவையாகும்.

2. உள்ளப் போராட்டம்

மனித மனம் பல்வேறு காரணங்களால் உள்ளப் போராட்டத்தினைச் சந்திக்கிறது. இரு வேறுபட்ட எண்ண நிலைகள் தன்னுள் ஒன்றை ஒன்று எதிர்த்த நிலையில் பெரும்பான்மை உள்ளப் போராட்டம் நடைபெறுகின்றது.

“இரண்டு சம வலிமையுடைய யூக்கிகள் பூர்த்தி பெற இயலாது, ஒன்று மற்றொன்றுக்குத் தடையாக இருப்பதின் காரணமாக ஏற்படும் உளநிலையையே உள்ளப் போராட்டம் என்று உளவியல் அறிஞர்கள் உள்ளப் போராட்டத்தினை வரையறுப்பர்”[9]

உள்ளப் போராட்டத்தை உளவியல் அறிஞர் ‘கர்ட் லீவின்’ என்பவர் மூவகையாகப் பாகுபடுத்துகிறார். அவை,

1. அணுகுதல் – அணுதல் போராட்டம்
2. ஆணுகுதல் – விலகுதல் போராட்டம்
3. விலகுதல் – விலகுதல் போராட்டம்

போன்றவைகளாகும். இவை சங்க இலக்கியங்களில் அகமாந்தர் மூலமாக பெரும்பாலும் காணலாம். இவை மட்டுமின்றி நடைமுறையில் ஒரு உணர்வு பல்வேறு நிலையில் போராட்டத்தினைச் சந்திக்கிறது. அவை,

1. பலமுனைப் போராட்டம் என்பனவாகும்.

3. உள்ள இறுக்கம்

எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் உள்ள முறிவு தொடருமானால் உணர்வியல் சார்ந்த முற்றிய விறைப்பு நிறையே உள்ள இறுக்கம் ஆகும்.

உள்ளத்தின் முறிவாலும் போராட்டத்தாலும் மனம் கலக்கம் அடைகின்றது. இக்கலக்கத்தின் விளைவே கவலை ஆகும்.

“மனமுறிவுள்ள ஒரு மனிதனும் சரி அல்லது மனப் போராட்டத்தில் உள்ள ஒரு மனிதனும் சரி, ஒரு கலக்கமடைந்த இறுக்கமான

நிலைமையிலிருக்கிறான். அவனுடைய மூல ஊக்கியன் தூண்டல் நிலை சிறிதும் குறையாமலிருக்கிறது. மேலும், அவனுடைய மன இறுக்கம் போராட்டத்திலிருந்து எழுந்த மனவெழுச்சித் துலங்கலினால் வலிமையூட்டப்பட்டிருக்கிறது"[10] என்பர். இந்நிலையே கவலை என்று உளவியலார் கூறுகிறார்கள். இக்கருத்தைச் சங்க இலக்கியச் சூழலில் இணைந்து காணும் போது இதன் நிலை புலப்படும்.

அறிஞர்கள் மேலே கூறிய உள்ள இறுக்கம் தோன்ற காரணமாகும். 'கவலை' பல்வேறு நிலைகளில் சங்க இலக்கியத்தில் சுட்டப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் வரும் 'நோதல்' எனும் சொல் உள்ளத்தின் முறிவு, போராட்டம், விறைப்பு நிலை, மன அழுத்தம், மன இறுக்கம் ஆகியவற்றை உணர்த்தும் பொதுச் சொல்லாகவே பயின்று வருகிறது.

## சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாக்களில் உளவியல்

சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் அகம் சார்ந்த பாடல்களாகவே உள்ளன. இப்பாடல்களின் மூலம் அகத்திணை மாந்தர்களின் மனவியல்புகள், உளவியல் போக்குகள் போன்றவற்றை பகுத்தாராய்ந்து தெளிய முடிகிறது.

## உளவியலும் அகப்பாடலும்

மனித உள்ளத்தையும், அதன் அகவழிச் செயல்களையும் அவற்றால் உருவாகும் மக்கள் நடத்தையையும் மையமாகக் கொண்டே பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் அகத்திணைப் பாடல்களைப் படைத்துள்ளனர். 'அகம்' என்ற சொல்லுக்கு 'உள்ளம்' என்னும் அடிப்படைப் பொருள் இயல்பாகவே அமைந்துள்ளது.

**"நல்லகம் நயந்தான் உயங்கிச்**
**சொல்லவு மாகா தஃஇ யோனே"**[11]

என்ற குறுந்தொகைக் குறிஞ்சிப் பாடற் பகுதியால் அறியலாம்.

**“மெல்லிய அரிவைநின் நல்லகம் புலம்பு”**[12]

என்ற வரிகளில் ‘அகம்’ என்ற சொல் ‘உள்ளம்’ என்ற பொருளில் இயல்பாக ஆட்சி பெற்றுள்ளமையை அறியமுடிகிறது.

உள்ளத்து உணர்வே பொருளாகக் கொண்டு உருவான இலக்கியங்களாகையால் சங்க அகப்பாடல்களை ‘உளவியல் இலக்கியங்கள்’ என்று கூறினும் தகும். அகம் பாடிய சான்றோர் மக்கள் உள்ளத்தை ஊடுருவி அவர்தம் அகப்புறச் செயற்பாடுகளாகிய நடத்தையைத் திறம்படக் காட்டியுள்ளனர். நடத்தைக்குத் தூண்டுகோளாக அமையும் நோக்கங்கள், உணர்ச்சிகள், சூழ்நிலைகள் முதலியவற்றை நுட்பமாக வெளிப்படுத்தியுள்ளனர். இவ்வகைப் பாடல்கள் யாவும் உளவியல் ஆய்வாளர்க்கு அரியதோர் ஆய்வுப் பெட்டகமாக அமையும் எனலாம்.

“மதி நுட்பம் வாய்ந்த உளவியலார் இலக்கியத்தை மனித அனுபவம் செய்திகள் நிறைந்த பெரிய சேமிப்பாகக் கருதுவர். அதைப் புறக்கணிக்கமாட்டார், இலக்கியத்தினின்றும் முடிந்த அளவு செய்திகளை அவர் எடுத்துக் கொள்வர்”[13] என்று உளவியல் பேரறிஞர் மிக்டுகல் குறித்திருப்பது இங்கு நோக்கத்தக்கதாகும்.

உளவியல் சேமிப்பகமாகத் திகழும் சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களை ஆழ்ந்து நோக்கி அவற்றில் புதையுண்டு கிடக்கும் உளவியல் மற்றும் உளப்பகுப்பாய்வியல் (Psychoanalysis) கருத்துக்களை வெளிக் கொணர்வதே இவ்விரண்டாவது இயலின் அடிப்படை நோக்கமாகக் கருதலாம்.

### நடத்தைக் கொள்கை

சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களை உளவியலார் காட்டும் நடத்தைக் கொள்கைநோக்கில் ஊன்றி ஆராய்தல் பயனளிக்கும். இவ்வாய்பு முறையால் அகத்திணைப் பாடல்களில் புதையுண்டு கிடக்கும்

உளவியல் உண்மைகளை வெளிக் கொணரலாம். சங்கத்து சான்றோரின் உளவியல் நுட்பத்தை மதிப்பிடுவதற்கும் இவ்வாராய்ச்சி முறை பெரிதும் துணை நிற்கும்.

நடத்தையை இயல்பு நடத்தை (Normal behaviour) பிறழ்வு நடத்தை (Abnormal behaviour) என்று இரு கூறாக்கி அவற்றை அறிவியல் முறையில் கூர்ந்து நோக்கி ஆராய்தல் உளவியலின் தலையாய அடிப்படை நோக்கமாகக் கருதப்படுகிறது. பொது உளவியலில் (General Psychology) இயல்பு நடத்தை பற்றியும், பிறழ்வு உளவியலில் (Abnormal Psychology) பிறழ்வு நடத்தை பற்றியும் உளவியலார் ஆராய்கின்றனர். குறிப்பாகப் பாலியல் பற்றி வரும் பிறழ்வு நடத்தை இங்கு ஆராயப்பட்டுள்ளது. மேலும் விலங்குகளின் நடத்தையைக் குறிஞ்சிப் புலவர் பார்வையில் ஆழ்ந்து ஆராய்ந்து தெரிவிக்கப்படுகின்றது.

## பிறழ்வு நடத்தை

உள்ளத் தவிப்பே (Anxiety) பிறழ்வு நடத்தைக்குப் பெரிதும் காரணமாக அமைகின்றது என்பதை அறிஞர் ஆராய்ந்து நிறுவியுள்ளனர். சங்கக் குறிஞ்சிப் புலவர்கள் மக்களின் பிறழ்வு நடத்தைக்குப் பாலியல் தவிப்பு (Sexual Anxiety) பெரிதும் காரணமாக அமைகின்றது என்பதைத் தெளிவாக உணர்ந்து புலப்படுத்தியுள்ளனர். குறிஞ்சிப் பாடல்களை கருத்தூன்றி நோக்கவார்க்கு இவ்வுண்மை விளங்கும். இதை கீழ்க்காணும் சான்றுகளால் உறுதிப்படுத்தலாம்.

மடலூர்தலும் பிறழ்வு நடத்தையும்,

**“மதவென மடலும் பூவெனக்**
**குவிழ்முகை எருக்கக் கண்ணியும் சூடுப**
**மறுகி னார்க்கவும் படுப**
**பிறிது மாகுப காமங்காழ் கொளினே”**[15]

என்று பேரெயின் முறுவலார் காமத் தவிப்புடையாரின் பிறழ்வு நடத்தைத் திறம்படக் காட்டியுள்ளார்.

“ஏறிய மடல்திறம்” – பெருந்திணைக்குரியதாகக் குறிப்பிடுவார் தொல்காப்பியர்[16]

காமம் மிகும்போது உள்ளத்திலே தவிப்பு (Anxiety) மீதூர்ந்து நிற்கும். அப்பொழுது உருவாகும் நடத்தை அறிவொடு பொருந்தாமல் பிறழ்வு நிலையில் அமையும் என்று பேரெயின் முறுவலார் கூறியுள்ளார்.

காமத் தவிப்பு மீதூரப் பெற்றவர் குதிரையல்லாத பனைமடலைக் குதிரையென்று எண்ணி அதில் ஊர்தலும், உலகத்தார் குடி கொள்ளாது ஒதுக்கும் எருக்கம் பூவினை மாலையாகத் தொகுத்து அணிந்து கொள்ளுதலும், பலரும் காணுமாறு தெருவில் நின்று ஆராவரித்தலும் மேற்கொள்வரென்று காட்டி அவர்தம் நடத்தை உலகியலுக்கும் சமுதாய மரபிற்கும் முற்றிலும் மாறுபட்ட பிறழ்வு நடத்தை என்பதை விளங்க வைத்துள்ளார் புலவர்.

இப்பாடலில் ‘பிறிதுமாகுப’ எனும் சொல் வந்ததால் காமத் தவிப்புடையோர் வரைபாய்தல்-நஞ்சுண்டல்-தூக்கில் தொங்குதல் முதலிய உயிர்க்கு அழிவு பயக்கும் பிறழ்வு நடத்தைகளிலும் ஈடுபடுவர் என்பது உய்த்துணர முடிகிறது.

‘பாலியல் தவிப்பு’ (Sexual Axniety) மக்களின் பிறழ்வு நடத்தைக்குப் பெரிதும் காரணமாக அமைகின்றது என்பதைச் சங்கக் குறிஞ்சிப் புலவர் தெளிவாக அறிந்து புலப்படுத்தியுள்ளார். இதனை,

**“ஆராக் காமம் அடூஉநின் றலைப்ப**
**இறுவரை வீழ்நரின் நடுங்கித் தெறுவரப்**
**பாம்பெறி கோலின் றமின்ய வைகித்**
**தேம்புதி கொல்லோ நெஞ்சே”[17]**

என்று அல்லகுறிப்பட்ட தலைமகன் தம் நெஞ்சிற்கு உரைக்கும் பான்மையில் ஆராக்காதலின் பிறழ்வு நடத்தையினைத் தெளிவுப்படுத்துகின்றார் பாவலர் பரணர்.

காமத்தவிப்புடையோர் ஒடுங்கிக் கிடப்பர் என்பதும், உள்ளத் தவிப்பால் உணர்ச்சி மேலோங்க மலை முகட்டினின்றும் நடுங்கி வீழ்ந்து இறக்கும் மிகைச் செயலிலும் இறங்குவர் என்பதும் பரணர் காட்டும் பிறழ்வு உளவியல் உண்மைகளாகும். அறிஞர் பிராய்டுக்கு எத்தனையோ நூற்றாண்டுக்கட்கு முன்னர் வாழ்ந்த பேரெயின் முறுவலாரும், பரணரும் பாலியல் தவிப்பால் ஏற்படும் பிறழ்வு நடத்தையினைக் கூர்ந்து நோக்கியுள்ளமை பெரிதும் வியப்பாக உள்ளது. இதனை,

**"குறுமுகிழ் எருக்கங் கண்ணி சூடி**

**உண்ணா நல்மாப் பண்ணி"**[18] என்று நற்றிணையும்,

**"மறுத்து இவ்வூர் மன்றத்து மடல் ஏறி"**[19] என்று குறிஞ்சிக் கலியும் உணர்த்துகின்றது.

மேற்கண்ட சான்றுகளால் இரந்து பின்னின்று தோழியால் குறைமறுக்கப்பட்ட தலைமகன் கூற்றாக காமம் கொண்டவர் தம் மிகைச் செயல்களைச் சுட்டுமுகத்தான் மக்களின் பிறழ்வு நடத்தையினை உளவியல் முறையில் குறிஞ்சிப்புலவர் கூர்ந்து நோக்கித் தெளிவுப்படுத்தியுள்ளனர்.

எனவே சமுதாயம் சிறப்புற விளங்க வேண்டுமானால் பிறழ்வு நடத்தை உருவாவதற்குரிய சூழலைத் தவிர்த்தல் வேண்டும். இவ்வுண்மையைச் சங்கக் குறிஞ்சிப் புலவர்கள் நன்குணர்ந்து உலகிற்கு வழிகாட்டியுள்ளனர். குறை மறுக்கப்பட்ட தலைமகளைப் பிறழ்வு நடத்தையில் இறங்கச் செய்யாது அவன் வாய்மொழியாகவும் காமத் தவிர்ப்புடையாரின் பிறழ்வு நடத்தையை எடுத்துக் காட்டி அந்நடத்தை

சமுதாயத்தில் உருவாவதற்குரிய சூழ்நிலையும் மனநிலையும் களையப்பட வேண்டுமென்று வற்புறுத்தும் சங்க குறிஞ்சிப் புலவரின் உயர்ந்த நோக்கமும், மதிநுட்பமும் போற்றுவதற்குரியதாகும்.

## விலங்குகளின் நடத்தை

மனித நடத்தையைக் கூர்ந்து நோக்கித் தெளியும் சமூக அறிவியலாகிய உளவியல் விலங்குகளின் நடத்தை பற்றியும் ஆராயப்படுகிறது.

"விலங்குகளின் நடத்தையை ஆராயும்போது மனிதன் தன் சொந்த வாழ்க்கைச் சிக்கல்களைத் தெளிவுப்படுத்திக் கொள்ளும் பொருட்டே ஆராய்கின்றான் என்பது உளவியலார் கருத்தாகும்"[20]

சங்கத்துச் சான்றோர் விலங்குகளின் நடத்தை பற்றியும் கூர்ந்து ஆராய்ந்துள்ளனர். மக்களுடைய நல்வாழ்விற்கு விலங்குகளின் நடத்தை பற்றிய ஆராய்ச்சி வழிகாட்டியாக அமைதல் வேண்டுமென்பது சங்கத்துச் சான்றோர் கொள்கையாகும். சங்கக் குறிஞ்சிப் பாடல்களால் இவ்வுண்மையைத் தெளிவாக்கலாம்.

## யானைகளின் நடத்தை

"மலைச் சாரலில் வாழையை நுகர வந்த களிற்றுயானை தாழ்ந்த பள்ளத்திலே வீழ்ந்து விட்டதாக அதன் துணையாகிய பிடியானை அதற்குப் படியாக அமையும்படி பெரிய மரங்களை முறித்துப் போட முயன்றபோது, எழுந்த பூசல் விண்தோய் விடரகத்து ஒலிக்குமென்று யானை ஈரினத்தின் நடத்தையைக் காட்டி வாழ்விற்கு வழிகாட்டியுள்ளார் பெருங்குன்றூர் கிழார்"[21]

தலைவனாகிய களிறு புணர்ச்சியின்பமாகிய வாழையை நுகர விரும்பி உணர்ச்சி வேகத்தில் படுகுழியிலே போய் வீழ்ந்து விட்டது.

காதல் வாழ்வில் உணர்ச்சிமீதுரப் பெற்று ஓடும் தலைமகனும் சிக்கலென்னும் குழிலிலே வீழ்ந்து மீளவுமாட்டாது நுகரமாட்டாது தவிர்க்க வேண்டியது வரும். ஊரெல்லாம் அலர் பரவும். அவ்வாறு சிக்கல் உருவாவதைத் தவிர்த்தல் வேண்டும். ஒருவேளை உருவானால் பிடி படியமைப்பதுபோல் தலைமகள் அறத்தொடு நின்று வரைவிற்கு விரைவில் வழிவகுத்தல் வேண்டுமென்ற உண்மையை யானைகளின் நடத்தை வாயிலாக உலகத்தார்க்கு உணர்த்துகின்றார் கவிஞர்.

"முறுவெங்கண்ணனார் என்ற மற்றொரு புலவர் நற்றிணைக் குறிஞ்சிப்பாட்டில் யானை ஈரினத்தின் நடத்தையைக் காட்டி சமுதாய நல்வாழ்விற்கு வழிகாட்டுவதும் இங்கு நோக்குவதற்குரியதாகும்"[22]

**"சோலை வாழை கரிநுகும்பு இனைய**

**அணங்குடை இருந்தலை நீவலின், மதனழிந்து"**[23]

"வேங்கைப் பூவால் மறைப்புண்ட குரும்பையை யானை புலியென்று தவறாக (பிறழ்ந்து) உணர்ந்து அச்சத்தால் தனக்கு உணவாகிய மூங்கினை முறித்துத் தள்ளுவது பிறழ்வு நடத்தைக்குச் சான்றாகும். யானையின் பிறழ்வு நடத்தையைச் சுட்டிக் காட்டிக் கபிலர் மக்களுக்கு வழிகாட்டியுள்ளார். அதாவது பொய்மாயத் தோற்றத்தைக் கண்டு உண்மையென்று பிறழ உணர்ந்து தமக்குத் துணையாயினாரைப் பகையென்று மயங்கி அவர் மனம் முறிந்து நடுங்கும் செயல்களில் ஈடுபடலாகாது என்பதைக் கபிலர் உலகத்தார்க்கு உணர்துகிறார். மலையில் பூத்துக் குலுங்கும் வேங்கை மரத்தை மதம் மிக்க யானை பார்த்து, புலியென்று மாறுபட எண்ணியது. பொறாமைக் கொண்டது, தன்னுடைய கரிய கோடுகளால் வேங்கையின் அடிமரத்தை அழுந்த தாக்கிய கொம்புகளை வாங்க முடியாது கதறியது. அவ்யானையின் கதறல்

மலையகம் முழுவதும் எதிரொலித்தது என்று கலித்தொகையில் யானையின் பிறழ்வு நடத்தையைத் திறம்படக் காட்டினார் கபிலர்”[24]

தனக்கு நிழலாக அமையும் வேங்கையைப் புலியென்று பிறழ உணர்ந்த மதயானை மயங்கித் தவிக்கும் காட்சியைக் காட்டு முகத்தான் உண்மையைப் பொய்யென்று பிறழ உணர்ந்து மயங்கித் தவிக்கலாகாது என்ற உண்மையை உலகத்தார்க்கு உணர்த்துகிறார் என்பது புலப்படுகின்றது.

**புலிகளின் நடத்தை**

புலிகளின் நடத்தையைக் காட்டி மக்கள் வாழ்விற்கு வழிகாட்டுகின்றார் குறிஞ்சிப் புலவர்.

**“ ........................................................... விடர்முகை**

**ஈன்பிணவு ஒடுக்கிய இருங்கோள் வயப்புலி**

**இரைநசைஇப் பரிக்கு மலைமுதற் சிறுநெறி”**[25]

என்றும்,

**“ ........................................................... நடுநாள்**

**இருண்முகைச் சிலம்பின் இறைவேட் டெழுந்து**

**மனைமருள் எருத்தின் பல்வரி இரும்போத்து”**[26] என்றும்

வருகின்ற பாடற்பகுதிகளில் கர்ப்பமுடைய பெண்புலியின் பசியைப் போக்குவதற்காக ஆண்புலி இரைதேடிச் செல்லும் நடத்தை சுட்டப்படுகின்றது. அஃறிணைப் பொருளாகிய ஆண் புலி தம் துணையிடத்தே காட்டும் ஆழ்ந்த பேரன்பு உயர்திணைப் பொருள்களாகிய ஆண் மக்களிடத்தும் அமைதல் வேண்டுமென்பது இதன் மூலம் புலனாகும். அன்புடைய பெண்மைக்கு ஆண்மை ஆதரவாகவும், பாதுகாப்பாகவும் விளங்க வேண்டுமென்ற உண்மையை ஆண் புலியின்

நடத்தை வாயிலாகச் சங்கத்துச் சான்றோர் சமுதாயத்திற்கு அறிவுறுத்துகின்றார் என்பது அறியலாகின்றது.

**கரடிகளின் நடத்தை**

"புற்றாஞ் சோற்றை விரும்பிய கரடி சிதலையின் காப்பமைந்த செம்புற்றை உடைத்து இரைதேடும் செயல் சங்கக் குறிஞ்சிப் பாடல்களில் பலவிடங்களிடல் குறிக்கப் பெற்றுள்ளது"[27]

தலைவியின் தாய் தந்தையர் உருவாக்கிய கட்டுக்காவலை உடைத்து விட்டுத் தலைமகன் களவுக்காதலில் கூடி இன்புற எண்ணுகின்றான். அவனையும் அறியாமல் அவன் நடத்தையால் தலைவிக்கு நேரும் துன்பத்தையும் அறிவுடைத் தலைவன் எண்ணிப் பார்த்தல் வேண்டும். இழிந்த புற்றாஞ் சோற்றை நச்சிக் கட்டுக் கோப்பை உடைக்கும் கரடி போல் கடமை சான்ற தலைவன் செயல்படலாகாது என்பது இச்செயல் உணர்த்துகின்றது. கரடியின் நடத்தையைக் காட்டி சமுதாயத்திற்குக் கருத்துரை வழங்கியுள்ளார்கள் புலவர்கள்.

**குரங்குகளின் நடத்தை**

"குரங்குகளின் நடத்தையைக் காட்டி உலகத்திற்கு அறிவுரையும் அறவுரையும் கூற விழைகின்றனர் குறிஞ்சிப் புலவர்கள்"[28]

**"கான மஞ்ஞை யறையீன்ற முட்டை**
**வெயிலாடு முசுவின் குருளை உருட்டும்"**

முட்டையிலுள்ள உயிரின் துன்பத்தைக் கூர்ந்து பார்க்காமலும் அதற்கு இரங்காமலும் குறும்புத்தனமுள்ள குரங்குக் குட்டி செயற்படுவது போன்று காதல் வாழ்வில் தலைமகள் படும் துன்பத்தை உணராமலும் அவளுக்கு இரங்காமலும் மன வளர்ச்சி பெறாத குறும்புத்தனமுள்ள ஊரார் சிலர் அலர் தூற்றித் திரிகின்றனர். சமுதாயத்தில் மற்றவரின் நோயையும் தன்னோய் போல் பேணும் பேற்றினை வளர்த்தல் வேண்டுமென்றும்

குறும்புச் செயல்கள் தளர்தல் வேண்டுமென்பதும் கவிஞர் இங்கு விளக்குகிறார். இதன் மூலம் பிறர்க்கு வந்துற்ற துன்பத்தை தனக்கு வந்துற்ற துன்பம் போல் எண்ணும் மனப்போக்கு ஆறறிவு படைத்த மனிதனுக்கு இருக்க வேண்டும் என்ற உண்மை உணர்த்தப்படுவது கருதுதற்கு உரியது.

பெண் குரங்கு தன் துணைக்கு அழிவு ஏற்படும் போது உயிர் வாழ விரும்பவில்லை என்பதால் ஆருயிர்த் தலைவனுக்கு ஆபத்து ஏற்படின் தலைவி உயிர் வாழாள் என்ற உயர்ந்த அன்புடைமையையும் தமிழ் மரபையும் கவிஞர் சுட்டுகிறார்.

**“பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்**

**அறியா துண்ட கடுவன் அயலது.......”**[29]

என்ற வரிகளில் தோழி தலைவனுக்கு நன்னெறி காட்டி வரைவு கடாவுகின்றாள். தேறலுண்ட மயக்கத்தில் மரமேறும் தொழிலை மறந்து குறிக்கோளற்றுக் காட்டு மல்லிகைப் பூப்படுக்கையில் தன்னை மறந்து தூங்கும் கடுவன்போல, ஐம்புல இன்பங்களிலே மயங்கிக் கடமை மறந்து குறிக்கோளில்லாத வாழ்க்கை வாழலாகாது என்று கபிலர் உலகத்தார்க்கு அறநெறி காட்டியுள்ளார்.

“கறிவளர் அடுக்கத்துப் களவுப் புணர்ச்சியில் கடுவனால் முயங்கப் பெற்றுச் செம்முக மந்தி அப்புணர்ச்சி வேறுபாட்டால் உண்டாகிய குறியைத் தன் சுற்றம் அறியுமென்று அஞ்சிக் கருங்கால் வேங்கை மரத்தின் கிளை மீதிருந்து ஆழமான சுனை நீரை நோக்கித் தலை கவிழ்ந்து தன் பாறுமயிர் திருத்தும் மலைநாடு தலைவன் நாடு என்கிறார் இளநாகனார்”[30]

மேற்கண்ட சான்றுகளின் மூலம் தலைமகளின் உணர்வையும் செயலையும் மந்தியின் நடத்தை வாயிலாக காட்டிச் சமுதாயத்திற்கு அஞ்சி

வாழ வேண்டிய வழி அஞ்சி வாழ வேண்டுமென்று அறிவுறுத்துகின்றார்கள் சங்கச் சான்றோர்கள் என்பது தெளிவாகின்றது.

**பிற விலங்குகளின் நடத்தை**

"வருடைமான் மறி தீம்பாலுண்ணங்கால் அரவுண்டு பின்னா் மலை நிழலிலே இளைப்பாரும் என்கிறாா் குறிஞ்சிப் புலவா்"[31] இல்வாழ்விற்குரிய இன்றியமையாத பொருளை ஈட்டுங்கால் வேண்டிய அளவு நிறைய ஈட்டிக் கொண்டு வந்து, இல்லின் கண்ணிருந்து மகிழ்ந்து இன்பந்துய்த்தல் சிறப்புடையதாகும் என்ற உள்குறிப்பினைச் புலவா் உலகத்தார்க்கு உணா்த்துகின்றாா்.

**"வாா்கோட்டு வயத்தகா் வாராது மாறினும்**

**குரூஉமயிா்ப் புருவை ஆசையின் நல்கும்"**[32]

என்ற ஐங்குறுநூறு பாடலில் ஆட்டுக்கிடாய் பிற மறிகணை மருவி ஆட்டை மறப்பினும் கிடாய் வரும் வரும் என்பதோா் துணிவால் ஆடு உயிா் வாழ்கின்றது. தன்னைத் தலைவன், மறந்தாலும் தான் மறக்காத நிலையில் தலைவி உயா்ந்து நிற்க வேண்டும் என்ற உண்மை புலப்படுத்துகிறது.

"வேட்டைக்கு வந்த வேடுவா்கள் அலைத்து எழுப்புதலினாலே மருண்டு ஓடிய காட்டுப்பசுவின் கன்று தன் இனத்தினின்றும் பிரிந்து போய்ச் சிறுகுடி ஒன்றில் சோ்ந்தது. அச்சிறு குடியின் கண் வாழ்ந்த இளமகளிா் அக்கன்றைப் பேணி வளா்த்தனா். அப்பசுவின் கன்று காட்டு வாழ்க்கையை விட்டு வீட்டில் வாழும் பழக்கத்தைப் பெற்று மருவி இனிது வாழத் தொடங்கியது என்று குறுந்தொகைக் குறிஞ்சிப் பாடல் கூறுகிறது"[33]

காட்டுப் பசுவின் கன்று சோ்ந்த இடத்தில் மருவி இனிதே வாழக் கற்றுக் கொண்டதைப் போன்று சமுதாயத்தில் அலைப்புண்டு ஓடும்

மக்கள் சேர்ந்த இடத்தின் சூழலுக்கேற்ப ஒன்றிக் கலந்து வாழத் தொடங்கி விடுவர். வாழத் தொடங்குவதே நன்று, ஒன்றினார் வாழ்க்கையை வாழ்க்கை என்பது உயர்ந்தோர் கூறும் உளவியல் உண்மையாகும்.

பிறந்த சூழலை விட்டு வேற்றுச் சூழலில் வாழும் நிலை உருவாகும் போது சேர்ந்த இனத்துச் சூழலோடு கலந்து பழகி வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். அதுவே சீரிய இனிய வாழ்வு என்ற தத்துவத்தைக் காட்டுப் பசுவின் கன்று ஒன்றின் நடத்தை கொண்டு நாட்டுக்குணர்த்திய குறிஞ்சிப் புலவரின் உளவியல் நுட்பம் வியந்து போற்றுவதற்குரியதாகும்.

**உளப்பகுப்பாய்வியல் – பார்வை**

“உளப்பகுப்பாய்வியல் (Psycholxnalysis) கொள்கை நிலையிலும் நடைமுறை அளவிலும் உளவியலாக வளர்ந்து வலுப்பெறத் தொடங்கிய கால முதலே கலை இலக்கியத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது”[34] இலக்கியத்தோடு தொடக்க முதல் தொடர்பு கொண்ட துறையாக மட்டுமல்லாது. இலக்கியத்திறனாய்வு கொள்கையின் வளர்ச்சிக்கும், எழுச்சிக்கும் உளப்பகுப்பாய்வியல் பெரிதும் துணை நின்றது. சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களை உளப் பகுப்பாய்வியல் பார்வையில் ஊன்றி ஆராய்ந்து அப்பாடல்களின் அமைந்துள்ள உளவியல் நுட்பங்களை வெளிக்கொணர்ந்து மதிப்பிடுதல் இவ்வுட்பிரிவின் நோக்கமாகும்.

“கடலில் மிதக்கும் பனிக்கட்டி பத்தில் ஒரு பங்குதான் மேலே தெரிகிறது. பத்தில் ஒன்பது பங்கு தண்ணீரில் மறைந்துள்ளது. இதே போன்று மனித மனத்தில் மிகச் சிறிய பகுதியாகிய நனவு நிலை (Conscious Level) தெரிதற்பாலதாயும் மிகப்பெரிய பகுதியாகிய நனவிலி நிலை (Unvonseious Level) மறைந்துள்ளதாயும் அறிஞர் சிக்மன் பிராய்டு கருதுவாராயினர்”[35]

பிராய்டின் கருத்தை ஊன்றி நோக்கில் ஓர் உண்மை புலனாகும். அதாவது நம்மையும் அறியாமல் நம் அகப்புறச் செயல்களை ஆட்டிப்படைக்கும் மனவெழுச்சிகளும் உணர்ச்சிகளும் நம் உள்ளத்தின் அடித்தளத்தில் மறைபொருளாகப் புதையுண்டு கிடக்கின்றன என்பதேயாகும்.

மறைபொருளாகிய மனித மனம் சமுதாயக் கட்டுப்பாட்டிற்கு அஞ்சி மறைத்து வைக்கப்பட்ட உணர்வாக இருக்கலாம் அல்லது நிறைவேறாத ஆசைகளின் உறைவிடமாக அமையலாம், இன்னும் அது ஆளுமையை உருவாக்கும் உந்து சக்திகளின் பிறப்பிடமாகவும் தோன்றலாம். ஐம்புல நுகர்ச்சி கற்பனை, சிந்தனை, அனுபவ அறிவு ஆகியவற்றின் இருப்பிடமாகவும் எவ்வுருவில் தோன்றினும் மனித மனம் ஆய்விற்குரிய மறைபொருளாக புதையுண்டு கிடக்கின்றது என்பது மட்டும் புலனாகிறது.

மனித உள்ளத்தன் அடித்தளத்தில் மறையுண்டு கிடக்கும் உணர்வுகளையும் ஆசைகளையும் எண்ணங்களையும் ஆழ்ந்து நோக்கி வெளிக்கொணரும் அரியதோர் அறிவியல் உளப்பகுப்பாய்வியல் எனப்படும். புகையுண்டு கிடைக்கும் மனப்பூசல்களைப் பகுத்தாய்ந்து வெளிக் கொணர்தலும் உண்மை காண்டலும் தீர்வு காண்டலும் உளப்பகுப்பாய்வியலின் தலையாய அடிப்படை நோக்கமாக கொள்ளலாம்.

“கண்ணுக்குப் புலனாகும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளாகிய மனித நடத்தையைப் பற்றி ஆராயும் பரந்துபட்ட அறிவியலாம் உளவியல் போலல்லாமலும், பெரும்பாலும் ஆபத்தான மனக்குலைவுகளுக்குச் சிசிக்சை செய்யும் உளமருத்துவம் போலல்லாமலும் ஒவ்வொருவர் உள்ளத்திலும் புதையுண்டு கிடக்கும் பொதுவான மனப்பூசல்களை அறிந்து கொள்ள உளப்பகுப்பாய்வியல் முயல்கின்றது”[36] என்று பகுப்பாய்வின் உள்ளார்ந்த நோக்கத்தை அறிஞர் புலப்படுத்துகிறார்.

## குறிஞ்சிப் புலவர்களின் உளப்பகுப்பாய்வுத் திறன்

மனித மனத்தைப் பகுத்தாய்ந்து மறைபொருளை வெளிக்கொணரும் உளப்பகுப்பாய்வு ஓர் அரிய ஆராய்ச்சிக்கலை. இக்கலையில் தேர்ச்சிப் பெறுவதற்குக் கல்வியறிவு மட்டும் கொடுக்காது, இயற்கையான நுண்ணறிவும் முதிர்ந்த அனுபவமும் பண்பட்ட பயிற்சியும் தேவை. சங்க காலப் புலவர்களிடம் இத்தகுதி மிகுதியாக இருப்பதைக் காணலாம்.

சங்கக் குறிஞ்சிப் புலவர்கள் இயற்கைப் பேரறிவாகிய நுண்ணறிவு கைவரப் பெற்றவர்களாய் வாழ்க்கையிலும் இயற்கையிலும் தோய்ந்து செறிந்த அனுபவமிக்கவர்களாய், தலைமகன், தலைமகள், தோழி, பாங்கன் முதலிய பாத்திரங்களைப் படைத்த போது மனித உள்ளங்களிலே மூழ்கி ஆழங்காண முயன்ற வித்தர்களாய் விளங்கினார்கள். மதிநுட்பமே கருவியாக அனுபவமே துணையாகக் கொண்டு, நிலத்தின் அடித்தளத்தில் அமைந்துள்ள நீருற்றையும், அதன் தன்மையையும், ஓட்டத்தையும் தெளிவாக கண்டறிந்து கூறும் நீரோட்டம் சார்க்கும் வித்தகர்கள் போலச் சங்கக் குறிஞ்சிப் புலவர்கள் மக்கள் உள்ளத்தின் அடித்தளத்தில் அமைந்த அபிலாசை உணர்வுகளாகிய நீருற்றுக்களையும் அதன் தன்மைகளையும் ஓட்டங்களையும் திறம்படப் பகுத்தாய்ந்த உளவியல் நீரோட்டம் பார்க்கும் வல்லுநர்களாய் திகழ்ந்தனர். இப்புலவர்கள் பாத்திரங்களின் உணர்ச்சி மோதல்களை எடுத்துக் காட்டும் முகத்தான் மனித உள்ளத்தில் மறையுண்டு கிடக்கும் மனப்பூசல்களை வெளிக்கொணர்ந்துள்ளனர். நனவிலி மனத்தில் புதையுண்டு கிடக்கும் மக்களின் அபிலாசைகளை ஆழ்ந்து பகுப்பாய்வு செய்துள்ளனர். இவ்வுண்மையைக் குறிஞ்சிப் பாடல்கள் மூலம் நிறுவிக் காட்டலாம்.

## ஔவையாரின் பகுப்பாய்வுத் திறன்

இரவுக்குறி மறுக்கப்பட்ட தலைமகன் உள்ளத்தின் அடித்தளத்தில் உருவாகிய உணர்ச்சிப்பூசலை ஔவையார் குறுந்தொகைக் குறிஞ்சிப் பாட்டில் பகுத்தாய்ந்து வெளிக்கொணர்ந்துள்ளார்.

‘இனிமேல் இரவில் வந்து தலைவியைச் சந்திக்காதீர்’ என்று தோழி தலைவனிடம் கண்டிப்பாகச் சொல்லி விட்டாள். ஆனால் தலைமகளோடு கலந்து பழகி உறவாட வேண்டுமென்ற ஆசை தலைவன் உள்ளத்தின் அடித்தளத்தில் கிடந்து அலைமோதியது. அதை அவனால் தடுத்து நிறுத்த முடியவில்லை. சமுதாயக் கட்டுப்பாட்டிற்கு அஞ்சித் தோழி விதித்த தடையை மீறவும் முடியவில்லை. இதனால் தலைமகன் உள்ளத்தில் உணர்ச்சி பூசல் உருவாகியது. அப்பூசலைக் குறைமறுக்கப்பட்ட தலைமகளின் நெஞ்சொடு கிளத்தலாகத் திறம்படக் காட்டியுள்ளார் ஔவையார். இதை,

**“நல்லுரை யிகந்து புல்லுரை தாஅய்ப்**
**பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல**
**உள்ளம் தூங்கா வெள்ளம் நீந்தி....”**[37]

என்ற பாடலில் அறியலாம். அடித்தளத்தில் மேலோங்கி நிற்கும் ஆசைக்குப் பெயல் நீரையும், அதை தாங்க மாட்டாது நைந்து அழியும் மனநிலைக்குப் பசுமட் கலத்தையும் உவமையாக்கி அவள் உள்ளப் பூசலைப் பகுத்தாய்ந்து தெளிவித்துள்ளார் ஔவையார்.

‘அரிதவா உற்றனை நெஞ்சே’ என்ற வரியில் நனவலி மனத்தின் அடித்தளத்தில் புதையுண்டு கிடக்கும் ஆசையைப் புலவர் புலப்படுத்துகிறார். மேலும் ‘பெரிதால் அம்மநின் பூசல்’ என்ற வரியில் தலைமகனின் உளப்பூசலைக் குறிப்பிடுகிறார்.

“பிரிவிடை ஆற்றாது காதலனைக் காணத் துடித்த தலைவியின் உளநிலையைப் பகுத்தாய்ந்து அவளுடைய உணர்ச்சி மோதலை பரணர் தெளிவுறக் காட்டியுள்ளார். காதலரை பல கால் கண்டு இன்புற வேண்டும் என்ற ஆசை தலைவியின் உள்ளத்தில் புதையுண்டு கிடந்தது. தலைமகளின் மனப்பூசலைப் பகுத்தாய்ந்து ஓர் அரிய உண்மையால் தெளிவுறுத்தினர் பரணர். நிற்கவோ, நடக்கவோ இருக்கவோ இயலாத இருக்கை முடவன் ஒருவன், உயர்ந்த மலையுச்சியிலிருந்த பெரிய தேனிறாலைக் கண்டு, அதைச் சுவைக்க ஆசை கொண்டு உள்ளங்கை ஒன்றைக் குடையாகக் கோலிப் பிறிதோர் கைவிரலால் தேனினை சுட்டிக் காட்டிக் கோலிய வெறுங்கையை நக்கியாங்கிப் பிரிந்த தலைவனைக் காணவு மாட்டாது, காண வேண்டுமென்று ஆசையை அகற்றவுமாட்டாது தலைவன் நினைப்பிலேயே தவித்தாள் தலைவி”[38]

தம்மை மறந்தாரைத் தாம் மறக்க மாட்டாது தவிக்கும் தலைவியர் உள்ளத்தில் மறையுண்டு கிடக்கு அபிலாசை உணர்வைக் காட்டு முகத்தான் மகளிரின் மனவியல்பையும் உளப்பூசலையும் கற்புக் கடம் பூண்ட பெண்டிர் அவர்தம் தலைவியரை மறக்கவும் மாட்டாது வாழ்க்கையைத் துறக்கவு மாட்டாது மனப்பூசலில் சிக்கித் தவிக்கின்றனர். இந்த அவல நிலை நீங்கிச் சமுதாய வாழ்வு சிறக்கத் தலைவியர்க்கு அருளாளராய், அன்புடையராய், ஆடவர் பண்புடன் ஒழுக வேண்டுமென்று பரணர் இச்சிக்கலுக்குத் தீர்வும் குறிப்பாகக் காட்டுகிறார்.

**மள்ளனாரின் பகுப்பாய்வு**

இரந்து பின்னின்ற தலைமகன் ஆற்றானாய்த் தோழி கேட்பத் தன்னுடைய நெஞ்சிற்கு உரைப்பான் போன்று சமுதாயத்திற்கு அஞ்சி மறைத்து வைக்கப்பட்ட தனது வேட்கையை வெளிப்படுத்துவதாகக் குறிஞ்சிப் புலவர் மள்ளனார் காட்டியுள்ளார். இதை,

**“இன்சொல் மேவலைப் பட்டவென் நெஞ்சனக்**

**..................................................................**

**..................................................................**

**விடுத்த நெஞ்சம் விடலோல் லாதே”[39]**

நற்றிணைப் பாடலினால் அறியலாம். இப்பகுதியில் ‘அலைப்பட்ட நெஞ்சு’ என்ற தொடரால் தலைமகனின் மனப்பூசலையும், ‘விடலொல்லாதே’ என்ற தொடரால் தலைமகன் உள்ளத்தில் புதையுண்ட ஆசையையும் புலவர் மள்ளனார் புலப்படுத்தியுள்ளார்.

‘கையகப்பட்ட பொருளை விடலாகாது’ என்ற தொடரில் வேட்கை. மனக்குறைவு நிறைவேறாது தவிக்கும் அடிமனத்தே குடிகொண்ட பாங்கைக் குறையிரந்து நிற்கும் தலைமகன் கூற்றாகச் சமுதாயத்திற்குச் சுட்டிக் காட்டித் தோழி போன்ற பொறுப்பு மிக்கவர்கள் இதனைக் களைவதற்கு வழிவகுக்க வேண்டுமென்பதையும் மள்ளனார் மறைமுகமாக அறிவுறுத்தியுள்ளார்.

**கபிலரின் பகுப்பாய்வு**

நனவிலி மனத்தின் அடித்தளத்தில் ஆசைகள் புதையுண்டு கிடப்பதைப் போன்று அச்சவுணர்வும் மறைந்துள்ளது. குறிஞ்சிப் புலவர் இதையும் பகுத்தாய்ந்துள்ளனர்.

“தலைமகள் சிறுமியாக இருந்தபோது குன்றக்கூகை குழறும் ஒலிகேட்டு நெஞ்சம் அஞ்சும் பயவுணர்வு படைத்தவளாயிருந்தாள். வீட்டு முற்றத்தே இரவில் பலாமரக் கிளைகளில் குரங்கு பாயும்போது ஏற்பட்ட ஒலியைக் கேட்டு அவள் நெஞ்சமானது அஞ்சியது. இளமை முதலே தலைமகள் உள்ளத்தே உறைந்து விட்ட இவ்வச்ச உணர்வு அத்தலைவி வளர்ந்து பெரியவளானதும் கூட அகல்வதாயில்லை, அவள் வளர வளர அச்சமும் வளர்ந்து வந்தது. தலைவி உள்ளத்தின் அடித்தில்

மறைப்புண்டு கிடந்த அச்சத்தைக் கூர்ந்து நோக்கிப் பகுத்தாய்கின்றார் கபிலர்”[40]

இளமை முதலே தலைவியின் உள்ளத்தில் கிடந்த அச்சவுணர்வு தலைவியை எதிலும் பயங்கொளச் செய்தது. தலைவன் இரவின்கண் வரும் ஏதமிக்க வழியினை நினைத்ததும் தலைவியின் இயற்கையான அச்சவுணர்வு அங்குச் செல்லத் துடித்துத் தடுமாறுகிறது. அஞ்சத் தகாதவற்றிற்கு அஞ்சுதல் அறியாமை என்பதால் இளமை முதலே அச்சமகற்றி நல்வாழ்விற்கு வழிகோல வேண்டுமென்று குறிஞ்சிக் கபிலர் குறிப்பாக அறிவுறுத்துகிறார்.

**கச்சிப்பேட்டுப் பெருஞ்சாத்தனார் பகுப்பாய்வு**

**“பெருங்களிறு உழுவை தாக்கலின் இரும்பிடிக்**
**கருவிமா உண்கண் கலுழ வும் ஏதில்**
**பேதை நெஞ்சம் கவலை கவற்ற**
**ஈங்கா கின்றாள் தோழி”**[41]

என்று கச்சிப்பேட்டுப் பெருஞ்சாத்தனார் ஆற்றலை ஏதத்திற்கு அஞ்சிக் கவன்ற தலைவியின் மனநிலையை ஆழ்ந்து நோக்கிப் பகுப்பாய்வு செய்துள்ளார். புலி பெரிய களிற்று யானையைத் தாக்கக் கண்ட பிடியானை புலம்பும் காட்சியைக் காட்டி, அக்காட்சியால் தலைமகனுக்கு ஆபத்து வருமோ என்ற அச்சத்தால் துடிக்கும் தலைமகளின் மனப்பூசலைப் புலப்படுத்தியுள்ளார் புலவர்.

இதுகாறும் எடுத்துக்காட்டிய சான்றுகளால் சங்கக் குறிஞ்சிப் புலவர்கள் மனித மனத்தின் ஆழத்தில் மறையுண்டு கிடக்கும் ஆசாபாச உணர்வுகளையும் அச்சவுணர்ச்சியையும் பகுத்தாய்ந்து அவற்றால் உருவாகும் பொதுவான மனப்பூசல்களைத் திறம்படக் காட்டியதோடு உள்ளப்பூசலை அகற்றவும் வழிகாட்டியுள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

## கனவுப் பகுப்பாய்வு

உளப்பகுப்பாய்வியலை ஒரு கட்டிடமாகப் பாவித்துக் கொண்டால் அக்கட்டிடத்தின் அடித்தளமாக அமைவது கனவுப்பகுப்பாய்வு அடித்தளமில்லாத கட்டிடத்தை நினைத்துப் பார்க்க முடியுமா? முடியாது. அதுபோலக் கனவுப் பகுப்பாய்வியல் இல்லாத உளப்பகுப்பாய்வியலை எண்ணிப் பார்க்கவும் இயலாது.

"ஆழ்ந்து கிடக்கும் உள்ளத்தின் செயற்பாட்டைத் துருவிக் காண்டதற்குக் கனவு பற்றிய ஆய்வினை மிகவும் நம்பகமான அணுகுமுறையாகக் கருதலாம்"[42] என்று உளப்பகுப்பாய்வியலின் தந்தை டாக்டர். சிக்மன் பிராய்டு கருத்து இங்குக் காணத்தக்கது.

பிராய்டின் கருத்துரையால் ஓர் உண்மை விளங்கும். 'நனவிலி மனத்தின்' (Unconscious minel) அடித்தளத்தில் அமைந்துகிடக்கும் எண்ணங்களையும் உணர்வுகளையும் உள்ளவாறு உணர்ந்து தெளிதற்குக் 'கனவுப் பகுப்பாய்வு' ஓர் தலைசிறந்த கருவியாகப் பயன்படுகிறது என்பதே அவ்வுண்மையாகும்.

## தொல்காப்பியர் காட்டும் கனவு

காதல் உணர்வோட்டத்திற்கு இடையீடு ஏற்படும்போது கனவு காண்டல் தலைமகன் தலைமகள் ஆகிய இருவருக்கும் உரித்து என்று தொல்காப்பியர் இலக்கணம் கூறுகிறார். இதனை,

**"கனவும் உரித்தால் அவ்விடத் தான"[42]**

என்ற நூற்பாவில் விளக்குகிறார்.

**"தாய்க்கும் உரித்தாற் போக்குடன் உரித்தென்றவாறு"**

என்ற நூற்பாவில் உடன்போக்கில் உணர்ச்சி மீதுரப் பெற்ற செவிலித்தாய் கானாக்காண்டலும் அகப்பொருட்கொள்கையாகக் கொள்ளத்தகும் என்றும் தொல்காப்பியர் விதி கூறுவது இங்கு காணத்தக்கதாகும்.

மேலும் 'கனவு' என்பது உள்ளத்தின் செயற்பாடே என்பதும் கனவை ஓர் இலக்கிய உத்தியாகப் பயன்படுத்தி மக்கள் மனத்தே மறையுண்டு கிடக்கும் உளப்பூசல்களை வெளிக்கொணரலாம் என்பது தொல்காப்பியர் காட்டும் 'கனவுப் பகுப்பாய்வு' நெறியாகும்.

## குறிஞ்சிப் பாடல்களில் கனவு

சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் கனவு பற்றிய செய்திகள் ஐந்து இடங்களில் நேரடியாக வந்துள்ளது. அவை ஐங்குறுநூறு 234வது பாடல், கலித்தொகை 49வது பாடல், அகநானூற்றில் இரண்டிடங்களில் (158, 132) இடம் பெற்றுள்ளது சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவன் நெஞ்சினை நெருங்கி முயங்கிக் கொண்டதாகக் கனாக்கண்ட தலைவி தூக்கம் கலைந்து விழித்துப் பார்த்தபோது தலைவனைக் காணாமல் தவித்துக் கனவில் கண்டதை நனவிலும் காணத் துடித்து, அது கைகூடாமையின் மின்னல் போன்று ஒளிவீசும் இழைகள் நெகிழ்ந்து விழுமாறு உடல் மெலிந்தும் பசந்தும் காணப்பட்டாள்.

தலைவியின் மெலிவிற்கும் பசப்பிற்கும் காரணங்கேட்ட தலைமகனுக்குத் தோழி தலைமகள் கண்ட கனவினைக் கூறினாள். இதை,

**"மின்னவிர் வயங்கிழை நெகிழச் சாஅய்**
**நன்னுதல் பசத்த லாவது துன்னிக்**
**கனவிற் காணு மிவளே**
**நனவிற் காணானின் மார்பின் தெய்யோ"**[42]

என்ற சங்கப் பாடல் விளக்குகிறது. இப்பாட்டில் தலைவி கண்டதாக வந்துள்ள கனவினை உளப்பகுப்பாய்வியல் நோக்கில் தவிப்புக் கனவு (Anxiety Dream) என்று கூறுவர்.

'நனவிலி மனத்தின்' அடித்தளத்தில் ஆழமாகப் புதையுண்டு கிடக்கும் அச்சவுணர்வுகள் சில நேரங்களில் – குறிப்பாக தூங்கும்போது நனவு நிலைக்கு நழுவி வருதலுண்டு. அப்பொழுது சிலருக்குக் கனவு பயங்கரமாகத் தோன்றலாம். கனவுக் காண்பவர் அதைத் தாங்கிக் கொள்ளும் சக்தியின்றித் தவிப்பர், நடுங்கவும் செய்வர் ஒடுக்கி வைக்கப்பட்ட அச்சவுணர்ச்சி நிறைவேற்றிக் கொள்ளப்படுவதற்கு முன்னால் தவிப்பின் காரணமாக விழிப்பு நிலை தோன்றி விடும். இத்தகைய கனவுகளை அச்சத்தால் உருவான 'தவிப்புக் கனவு' என்று அழைக்கலாம். தூங்குவோரை விழிப்பிக்கச் செய்வதால் இதுவும் தவிப்புக் கனவின் ஒரு வகையாகவே கொள்ளப்படும்.

## அணுகுதல் – விலகுதல் போரட்டம்

தலைவன் தலைவியோடு களவில் கூடி இன்புறுகிறான் வரைவை நீட்டிக்கிறான். தலைவி மிகவும் வருத்தப்படுகிறாள். இதை தலைவனிடம் தோழி எடுத்துரைக்கிறாள். அதாவது வெண்மையான அருவி வீழ்கின்ற மலைக்குத் தலைவனே ! நீ தலைவியிடம் முதலில் நட்பு செய்து விட்டு இப்போது வரைவை நீட்டித்து விலக நினைக்கிறாயே ! சான்றோர்கள் கூட இச்செயலை செய்ய மாட்டார்கள். ஆனால் நீ செய்ய நினைக்கிறாயே என்று குறை நயப்பக் கூறுகிறாள். இதை,

**"நாடி நட்டின் அல்லது**
**நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே"[43]**

என்ற நற்றிணைப் பாடல் விளக்குகிறது. அதாவது தலைவன் தலைவியிடம் நட்பு கொண்டபிறகு அவளை விட்டு விலக நினைக்கும்

மனத்தைக் கொண்டவராக இருப்பதை தோழி வாயிலாக தெளிவுறுத்தப்படுகிறது.

தலைவனை இல்லற வாழ்விற்கு வற்புறுத்தல் என்ற எண்ணமும் அதேவேளை, தலைவனின் மனமும் புண்படக்கூடாது என்ற இருவேறுபட்ட இன்ப, துன்ப நிலைகளுக்கிடையே நடைபெறும் அணுகுதல் – விலகுதல் போராட்டமாக இந்நிலை அமைகிறது.

கருப்பொருளின் செயல் உள்ளப் பதிவில் இருந்து புத்துயிர் பெற்று, நல்வழிப்படுத்தல் என்ற நிலையை எட்டும் முயற்சியாக இப்பாடல் அமைகிறது. ஆழ்மன எண்ணத்திற்கும், தற்காப்பு இயங்கு முறையில் அமைந்தத் தாக்கினைக் கூறுவது கீழ்க்கண்ட குறுந்தொகைப் பாடலாகும்.

தலைவனின் பிரிவைத் தலைவியிடம் உணர்த்த சென்ற தோழியிடம், ஏற்கனவே தலைவனின் பிரிவை அறிந்த தலைவி தோழியிடம் கூறியதாக கிள்ளிமங்கிலங்கிழார்,

**“காந்தள் வேலி ஓங்குமலை நன்னாட்டுச்**
**செல்ப என்பவோ கல்வரை மார்பர்**
**சிலம்பில் சேம்பின் அலங்கல் வள்ளிலை**
**பெருங்களிற்றுச் செவியின் மானத்தை இத்**
**தன்வரல் வாடைத் தூக்கும்**
**கடும்பனி அச்சிரம் நடுங்குஞர் உறவே”**[44]

என்று பாடியுள்ளார். காந்தலாகிய வேலியினைக் கொண்ட உயர்ந்த மலையினையுடைய நல்ல காட்டில் செல்வத்தையுடையவனும், உயர்ந்த மலை போன்ற மார்பினை உடையவனுமான நம் தலைமகன் மலையிடத்து சேம்பினது அசையும் அகன்ற இலை, பெரிய களிற்றனது காதினை நிகர்க்கும்படிக் தைத்திங்களில் குளிர்ச்சி தருதலையுடைய வாடை

அசைந்துலாவும் முன்பனிக் காலத்து, நடுங்குமாறு நாம் பிரிதல் எதற்கு? என்று தலைவி தோழியை நோக்கிக் கேட்பதாக அமைந்துள்ளது.

**எதிர்பார்ப்புப் போராட்டம்**

இருவேறுபட்ட எதிர்பார்ப்புகளுக்கிடையே நடைபெறும் போராட்டம். அதன் வலியையைப் பொறுத்து மட்டும் அமையாது எதிர்பார்ப்பைப் பொறுத்தும் அமையும்.

தான் தலைவனின் பிரிவை ஏற்கனவே அறிந்திருந்த போதும் தலைவன் எக்காரணத்திற்காகப் பிரிகிறான். பிரிவு எவ்வளவு காலம் நீடிக்கும் என்ற எதிர்பார்ப்பு தலைவியின் மனதில் தோன்றி, அதைத் தோழி அறிந்திருப்பாளே, அதற்கு விடை கிடைக்குமே என்ற எதிர்பார்ப்பு இங்குச் சுட்டப்படுகிறது.

தலைவன் குறித்த பருவத்தில் வராததை எண்ணி அழிந்த தலைமகளை நோக்கித் தோழி தலைவன் வருவாரென்று கூற, தலைவி கூறியதாகக் கடுவன் மள்ளனார்,

**“வாருறு வணர்கதுப் புளரிப் புறம்சேர்**
**அழாஅல் என்றுநம் அழுதகண் துடைப்பாக**
**யாராகுவ கொல்தோழி சாரல்”**

என்று பாடியுள்ளார். நீட்சி பொருந்திய கடைக்குழன்றுள்ள கூந்தலைக் கோதி முதுகிடத்தே சேர்த்து ‘அழாதே’ என்று அழுத கண்ணீரை துடைப்பவர் யார்? என்று தலைவி கூறுகிறாள்.

**“..............................................**
**ஐதுவந்து இசைக்கும் அருள்கில் மாலை**
**ஆள்வினைக்கு அகன்றோர் சென்ற நாட்டும்**
**இனைய வாகித் தோன்றின்**
**வினை வலித்து அமைதல் ஆற்றலர் மன்னே”**[45]

என்ற நற்றிணைப் பாடலில் நமக்குத் துன்பம் தருகின்ற இந்த மாலைப் பொழுது அவர் நாட்டில் தோன்றுமானால் அங்கே அவர் தங்கியிருக்க மாட்டார். உடனே வந்து விடுவார் என்று தலைவி தலைவனின் வருகையை எதிர்பார்ப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

**“எழுதரு மழையின் குழுமும்**

**பெருங்கல் நாடன் வருங்கொல்? அன்னாய்”**[46]

என்ற ஐங்குறுநூறு பாடலில் தோழி தலைவன் தலைவியை மணக்க வருவான் என்றும் அதற்கான நிமித்தங்கள் காணப்படுகின்றன என்றும் கூறுகிறாள்.

**“கொன்னாளன் நாட்டு மலை**

**கூறுநோய் ஏய்ப்ப விடுவானோ? தன்மலை**

**நீரினும் சாயல் உடையன்”**[47]

என்ற குறிஞ்சிக் கலிப்பாடலிலும் காணலாம்.

### உள்ளப் போராட்டம்

தலைவனின் உள்ளப் போராட்டம் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. மலையில் கொல்லிப்பாவை போன்று தலைவி காணப்பட்டாள். அவளை கண்டவுடன் தலைவனின் மனம் தடுமாறுகிறது. அழகு அவனை கவர்ந்து மீளாத துயரத்தில் ஆட்படுகிறான். அவளிடம் சேர வேண்டும் என்று மனம் எண்ணுகிறது. அழகு என்னும் சூழ்ச்சியால் என்னை கவர்ந்து அவளை விட மனம் மறுக்கிறது. அவளது அழகு என்னைக் கொல்லுகிறது. எப்படியாவது தன்னை அவளிடம் கூட்டுவிக்குமாறு பாங்கனிடம் வேண்டுகிறான். இதனை,

**“தேனுடை நெடுவரை தெய்வம் எழுதிய**

**வினைமாண் பாவை அன்னோள்**

**கொலைசூழ்க் தன்னால் நோகோ யானே”**[48]

என்ற நற்றிணைப் பாடல் வெளிப்படுத்துகிறது. அதாவது தலைவன் தலைவியின் அழகால் மயங்கி, அவளிடம் சேர உள்ளம் துடிக்கும் நிலையை அறியமுடிகிறது.

தலைவன் களவின்பத்தையே நாடுகிறான். இதனால் தலைவியின் நலம் அழிகிறது. அவன் வரைதல் செய்தால் மட்டுமே தலைவியின் உடல் நலம் முன்போல் தோற்றமளிக்கும். ஆகையால் தலைவனை மணக்க தலைவியின் உள்ளமான துடிக்கிறது. என் நலம் அழிந்தும் நான் இன்னும் உயிருடம் இருக்கின்றேன் என்று தலைவி உள்ளக் குமுறலோடு தோழியிடம் கூறுகிறாள்.

**“............................................ என்**

**உரம் செத்தும் உளனே தோழி என்**

**நலம்புதிது உண்ட புலம்பி னானே”[49]**

என்ற குறுந்தொகைப் பாடலில் அறியலாம்.

தலைவனின் களவொழுக்கம் சேரிமக்களுக்கு தெரிந்தால் தலைவனை பண்பற்றவன் என்று தவறாக கூறி விடுவார்களே என்று தலைவி எண்ணுகிறாள். அதனை அக்களவொழுக்கத்தை சேரி மக்களிடமும், தோழியரிடமும் தலைவி மறைக்கிறாள். இவ்வொழுக்கம் இவர்களுக்கு வெளிப்பாடா முன்பு தலைவன் வரைந்து கொள்ள வேண்டுமே என்று தலைவி தவிர்க்கிறாள். இத்தவிப்பு,

**“நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூறல்தான் நாணி**

**கூரு நோய் சிறப்பவும் நீ செய்த அருளின்மை**

**சேரியும் மறைத்தாள் என்தோழி**

**............................................**

**அருந்துயர் ஆரஞர் தீர்க்கும்**

**மருந்தாகிச் செல்கம் பெருக ! நாம் வரைந்தே”[50]**

என்று தலைவிக்காக தோழி தலைவனிடம் எடுத்துரைக்கிறாள். தலைவியின் உள்ளத் தவிப்பை தோழியின் மூலம் அறியலாகிறது.

**அச்சம்**

இரவுக்குறியில் தலைவன் தலைவியை சந்தித்து விட்டு செல்கிறான். இது தலைவிக்கு மிகவும் வருத்தத்தோடு அச்சமும் ஏற்படுகிறது. தலைவன் வரும் வழியில் ஏற்படும் ஏதங்களை நினைத்து தோழி அச்சப்படுகிறாள். இரவுக்குறியில் தலைவன் வந்தான். அவன் தன் ஊருக்கு அச்சமின்றி சென்று சேர்ந்தானோ? மூங்கில் நிறைந்த காட்டில் கரடி புற்றாஞ்சோற்றை எடுக்கும் போது பாம்பு இருக்கும். அத்தகைய செல்லுதற்கரிய வழியில் தலைவன் அச்சமின்றி தன் ஊர் சேர்ந்தானா? என்று தோழியும் தலைவியும் அச்சப்படுகிறார்கள்.

**“காம்புஅமல் இறும்பில் பாம்புபடக் துவன்றிக்**
**கொடுவிரல் உறியம் கொண்டும்**
**வடுசூழ் புற்றின வழக்குஅரு நெறியே”**[51]

என்ற பாடலில் இதை அறியலாம்.

இரவில் தலைவன் வரும் வழியின் கொடுமை கண்டு அச்சத்தால் தலைவி வருந்துவதாக அமைந்த பாடல்.

**“பூம்பொறி உழுவைப் பேழ்வாய் ஏற்றை**
**தேம்கமழ் சிலம்பின் கறிற்றொரு பொரினே”**[52]

என்று பேரிசாத்தனார் கூறுகிறார். இரவுப்பொழுதில் கொடிய காட்டு வழியில் தலைவன் வருவதால், வரிகளை உடம்பில் கொண்ட பெரிய வாயினை உடைய ஆண் புலியானது ஆண் யானையோடு போர் புரியும் தன்மையுடையது. அதனைக் கண்ட குறவரின் சிறுவர்கள் பெரிய பாறையின் மீது இருந்து கொண்டு தொண்டகப் பறையை முழக்குவார்கள். பறை ஓசையால் திணைகளை உண்ண வரும் கிளிக்கூட்டங்கள் பறந்து

செல்லும். வளமுள்ள மலை நாடனது, வரும் வழியின் இடையூறுகளை எண்ணி வருந்த நான் ஒருத்தி மட்டுமே உள்ளேன். வேறு யாருமில்லை எனத் தோழியிடம் கூறுகிறாள்.

"சீழ்க்கை ஒலியோடு செல்லும் இளைஞன் ஒருவன் வேட்டை நாய்கள் பின் வரச் சென்றான். அப்போது முள்ளம் பன்றி ஒன்று மல்லிகைப் புதரின் கீழே மறைந்து நின்றது. அப்பன்றியை அவன் கொன்றான். அத்தகைய மலைநாட்டைச் சார்ந்தவன் தலைவியை சந்திப்பதற்காக இரவு நேரத்தில் வருகிறான். அப்போது தோழி, இடி மின்னலடன் கூடிய பெருமழை பொழியும் போது தனித்து வருகின்றாய். வழியில் உனக்கு என்ன துன்பம் நேருமோ? என்று அச்சப்பட்டு ஒவ்வொரு நாளும் தலைவி அழுகின்றாள் என்று தலைவனிடம் கூறுகிறாள்."[53] இதன் மூலம் தலைவி தலைவன் மீது கொண்டுள்ள அன்பும் அவன் வரும் வழியில் ஏற்படும். ஏதம் காரணமாக மனத்தே தோன்றும் அச்சமும் வெளிப்படுவதை அறியமுடிகின்றது.

**அதீத எண்ணம்**

தலைவன், தன்னை இனி சேர மாட்டான் என்ற எண்ணம் தலைவிக்குத் துளிர்விட்டாலும் "மறுகால் கொழுங்கொடி அவரைப் பூக்கும்" என்று குறவன் நிலத்தின் நீர்வளத்தால் மட்டுமின்றி பனிக்காலத்தின் காரணத்தாலும் மீண்டும் பூக்கும் அவரையைப் போல், தலைவன் குளிர்காலத்தில் தலைவியின் எண்ணம் பெற்று வந்திடுவானோ என்ற அதீத எண்ணம் இங்கு நோக்கத்தக்கதாகிறது.

தலைமகள் வரைந்தெய்தல் உணர்த்திய செவிலியைத் தோழி வாழ்த்தியதாக வெண்பூதனார்,

**"அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதமாகப்**
**பெரும்பெயர் உலகம் பெறீ இயரோ அன்னை**

**தம்மில் தமதுதுண் மன்ன சினைதொறும்**

**தீம்பழம் தூங்கும் பலவின்**

**ஓங்குமலை நாடன்ன வருவமென்றோளே”**

என்று பாடியுள்ளார். இனிய பழங்கள் தொங்கும் பலா மரங்களை உடைய உயர்ந்த மலைகள் சூழ்ந்த நாட்டிற்குத் தலைவன், மணந்து கொள்ள வருவான் என்றும், ஆதலில் அவள் அருமையாகப் பெறுதற்கரிய அமிழ்தம் உண்ணும் பெரிய சிறப்பினையுடைய தேவா் உலகைப் பெறுவாளாக என்று கூறி செவிலியைத் தோழி வாழ்த்துவதாக இங்கு இப்பாடல் அமைந்துள்ளது.

**மன ஏக்கம்**

குறித்த நாளில் துறையிடத்து வாராமல் போயினானே என்ற எண்ணத் தோய்வும், இனி தலைவனின்றிச் செல்லும் ஒவ்வொரு நாளும் பல நாட்களைப் போல தோன்றுமே என்ற எதிர்காலத்தைப் பற்றிய வருத்தமும் இணைந்து இங்கு தலைவியின் மனதில் ஓா் ஏக்கத்தை ஏற்படுத்துகிறது.

தலைமகனின் தூதினைக் கண்டு தலைவி தோழிக்கு கூறியதாக கபிலா்,

**“புல்வீழ் இற்றிக் கல்விவர் வெள்வோ்**

**வரையிழி அருவியில் தோன்று நாடன்**

**தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்**

**வந்தன்று வாழ் தோழி நாமும்**

**நெற்பெய் தீயின் எதிர்கொண்டு**

**தாம் அளந்த னையமென விடுகம் தூதே”**[55]

என்று பாடியுள்ளாா். மலைநாடன் குற்றமற்ற மனத்தோடு விடுத்த தூதுவாயிலான கிளவி நம்மிடத்து வந்தது. தோழி நாமும் நெய் பெய்த

தீயைப் போல் எதிர்கொண்டு அன்பின் நிலைமையை அளந்த அத்தகையம் எனத் தூதினை விடுவோம் என்று தலைமகன் விடுத்த தூது கண்டு தலைவி தோழியை நோக்கி வெகுளிப் புலப்படக் கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது.

தலைவன் மேல் தூதின் காரணமாக ஏற்பட்ட ஓர் அதீத எண்ணத்தையும் வெளிப்படுத்துகின்றது இந்நிகழ்வு. இயற்கை புணர்ச்சியில் பிரிந்து சென்ற தலைவனை மீண்டும் சந்தித்தால் என்ன உணர்வு ஏற்படுமோ அதே போன்று இந்தூதின் வாயிலாக தலைவன் மேலுள்ள நம்பகத்தன்மை தலைவிக்கு மேலும் வலுக்கிறது.

**பிரிவுத் துன்பம்**

களவொழுக்கம் ஊராக்கு தெரிந்து தலைவியை வீட்டில் சிறை வைக்கிறார்கள். அப்போது தலைவி, தோழியிடம் தலைவனை இரவில் வரும்படி கூறி அனுப்புகிறாள். தலைவியைக் காண தலைவன் இரவில் வருகிறான். இரவில் தலைவனிடம் இன்புற்று மகிழ்ந்து வரும் தலைவன் இரவுக்குறி முடிந்து பின்பு அவளை விட்டுப் பிரிகிறான். அப்போது அப்பிரிவின் துயரத்தை நினைத்து வருந்துகிறாள். இரவில் தலைவன் என்னுடன் இருக்கும்போது அத்துன்பம் எனக்குத் தெரியவில்லை. பிரிந்த பின்புதான் அத்துன்பம் என் மனதை வாட்டுகிறது என்கிறாள். இதை,

**“நெஞ்சு நடுங் கரும்படர் தீரவந்து**
**குன்றுழை நண்ணிய சீறூர் ஆங்கண்**
**செவீஇய பெயர் போள் வணர்சரி ஐம்பால்**
**நுண்கொல் அகவுநரிப் புரந்த பேரிசைச்”**[56]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

தலைவன் வினைவயிற் காரணமாக தலைவியை விட்டுப் பிரிந்து பாசறையில் தங்கியிருக்கிறான். அப்போது குன்றத்தில் இருக்கும் குறத்திப்

பெண் அருவியில் ஆடினாள். மகிழ்ச்சியில் கள்ளைப் பருகுவாள். கள் மயக்கத்தில் ஓடுவாள். குன்றத்தில் இருக்கும் தன் காதலனாகிய குறவனிடம் கையால் நொடி செய்து காட்டுவாள். இப்படி அவள் தன் துணையோடு இருக்கின்றாள். இதுபோல எமது காதலி கள்ளைப் பருகிக் குறுநொடி செய்து காட்டி மகிழ்விக்க முடியாமல் யாம் தனியே இருக்கின்றோம். மேலும் காலை நேரத்தில் கூதிரோடு கலந்த வாடைக்காற்று வீசித் துன்புறுக்கிறது. இத்துன்பத்தைத் தீர்க்கும் துணையில்லாமல் தனியாகப் பாசறையில் இருக்கின்றோம் என்று தலைவன் புலம்புகிறான்.

**“செம்பொறி அரக்கின் வட்டுநா வடிக்கும்**

**..........................................................................**

**..........................................................................**

**வேறுபுல வாடை அலைப்பத்**

**துணையிலேம் தமியேம் பாசறை யேமே”**[57]

என்ற பாடலில் மருதனிளநாகனார் விளக்குகிறார்.

தலைவனை விட்டுப் பிரிந்த தலைவி தனிமையில் வாழ்ந்த நாட்களில் கண்ணீர் விட்டு அழுத நிலையை சங்கப்பாடல் படம்பிடித்துக் காட்டுகிறது.

**“போதார் கூந்தல் இயலணி அழுங்க**

**ஏதி லாட்டியை நீபிரிந் ததற்கே**

**அழலவிர் மணிப்பூண் நனையப்**

**பெயல்ஆ னாஎன் கண்ணே தெய்யோ!”**[58]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலில் நீ அவளை அயலவள் போலப் பிரிந்ததற்கே அவள் மார்பிலணிந்திருந்த அழகிய அணிகள் நனையக்

கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள் என்று தலைவனிடம் தோழி கூறி, தலைவியின் மனநிலையை விளக்குகிறாள்.

“தலைவனின் பிரிவால் தலைவிக்கு வளைகள் நெகிழ்ந்து கழன்று விட்டன. கண்கள் அழுவதை நிறுத்தமுடியவில்லை. உயிர் நீங்கி விடும் நிலைக்கு வந்து விட்டதாக தலைவனிடம் தோழி கூறுகிறாள்”[59]

பிரிவுத் துன்பம் தலைவன் தலைவியை எவ்வாறு வாட்டும் என்பதையும் அந்நிலையில் அவர்களது மனநிலை எப்படி வேறுபட்டு இருக்கும் என்பதையும் மேற்கண்ட சான்றுகளால் அறிய முடிகிறது.

## தலைவியின் அறியாமை

அறியாமையால் மனிதர்கள் பல நிலைகளில் நல்ல வாய்ப்புகளையும், உடைமைகளையும் இழந்து விடுகிறார்கள். அறியாமை குணம் மனிதர்களுக்கு உரித்தானதே. குறிப்பாக பெண்களையே சுட்டிக் கூறலாம். சங்க அகப் பாடல்களில் தலைவியின் அறியாமை பல இடங்களில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

தலைவி பால்பாத்திரத்தை கையில் வைத்திருந்தாள். அப்போது மரக்கிளையின் மீதிருந்த குரங்குக் குட்டி வலிந்து பறித்துக் கொண்டு சென்று விட்டது. இதனால் ஓவியம் போன்ற கண்களையுடைய தலைவி அழுதாள். மேலும் பால்பாத்திரம் பறிக்கப்பட்டதைத் தாங்காமல் தலைவி தன் வயிற்றில் அடித்துக் கொண்டாள். அதனால் அவள் விரல்கள் சிவந்தன என தோழி தலைமகனிடம் தலைவியின் மடமைத் தன்மையைக் கூறுகிறாள்.

**“தேம்பாய் தீம்பால் வெளவலின் கொடிச்சி**
**எழுதெழில் சிதைய அழுத கண்ணே”**[60]

என்ற பாடலில் இதை அறிய முடிகிறது.

**உறுதியான மனநிலை**

மனதில் ஒன்றை நினைத்தால் அதை கூடிய வரையில் மறத்தல் இயலாது. இது பெரும்பாலான மனிதர்களின் இயல்பாகும். தலைவன் வரைவின் காரணமாக தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். அவனது நினைவுகள் தலைவியை வாட்டுகிறது. தோழி தலைவனை சிறிது காலம் மறத்தல் நன்று என்கிறாள். அதற்குத் தலைவி,

**"யான்அவர் மறத்தல் வேண்டுதி ஆயின்**
**கொண்டல் அவரைப்பூவின் அன்ன**
**வெண்தலை மாமழை சூடித்**
**தோன்றல் ஆனாது, அவர் மணிநெடுங் குன்றே"**[61]

என்று கூறுகிறாள். அதாவது நீலமணி போன்ற அவரது மலை என் கண்ணை விட்டு மறையாது எப்போதும் நிற்கின்றது. நான் எவ்வாறு அவரை மறப்பது என்கிறாள் தலைவி.

**பொய் மனம்**

பொய் பேசுவது மனிதனின் இயல்பு. தன் சுயநலத்திற்காக பெரும்பாலான மனிதர்கள் பல நிலைகளில் பொய் பேசுவார்கள். அவை சில நேரங்களில் பின் விளைவுகளைக் கூட ஏற்படுத்தி விடுகிறது.

அகப்பொருள் பாடல்களில் களவொழுக்கத்தில் ஈடுபடும் தலைமக்கள் பொய்பேசி புணர்ச்சியில் ஈடுபடுவது இயல்பான ஒன்றாகும். அவ்வகையில் தலைவன் வரைவை நீட்டித்த வண்ணம் இருந்த நிலையில் தலைவியிடம் பொய்யான சில சொற்களைப் பேசி நம்ப வைக்கிறான். இதை தோழி வாயிலாக தலைவனின் பொய் பேசும் மனநிலையை கபிலா் வெளிகாட்டியுள்ளாா்.

**“ஜவனம் கவரும் குன்ற நாடன்**

**வண்டுபடு கூந்தலைப் பேணிப்**

**பண்புஇல சொல்லும் தேறுதல் செத்தே”[62]**

என்ற பாடல் வரிகளில் இதை அறியலாம். பெண்கள் இப்படி பொய்யான மொழிகளை கேட்டு சிக்கித் தவிப்பது அவர்களின் இயல்பு என்று (ஐங்.284) பாடல் குறிப்பிடுகிறது.

**காம வேட்கை**

தலைவியை மனதில் நினைத்து அன்பு மிகுதியால் மடல் ஏறுவேன் என்று தலைவன் கூறுகிறான். ‘பிறரை கொல்லும் தன்மையுடைய உன் அழகை நீ அறியாது செல்கின்றாய். உன் மீது தவறில்லை. உன்னை அழகு செய்து தம் செல்வ செருக்கால் வெளியே அனுப்பிய உன் வீட்டார் செய்த தவறு என்றே நான் கருதுவேன். என் காதலை நான் சொல்லியும் நீ அதை அறியாது இருக்கிறாய். உன் மேல் தவறில்லை. உன் வீட்டார் தான் தவறிழைத்தவர், உன் மேல் அன்பு மிகுதியால் என்னால் பொறுத்து கொள்ள இயலவில்லை என்றால் இவ்வூர் மன்றத்தில் மடல் ஏறி, உனக்குப் பழி உண்டாக்குவேன்’ என்கிறான்.

**“உளனா, என் உயிரை உண்டு உயவுநோய் கைம்மிக**

**...............................................................**

**...............................................................**

**மறுத்து இவ்வூர் மன்றத்து மடல்ஏறி**

**நிறுக்குவென் போல்வல்யான் நீபடு பழியே”[63]**

என்ற கபிலர் பாடல் இதை தெளிவுறுத்துகிறது. அன்பு வேட்கை தலைவனை மடல் ஏறச் செய்கிறது என்பதை அறியமுடிகிறது.

தலைவனை பிரிந்திருக்கின்றாள் தலைவி. ஆற்றாமையால் வருத்தடைகிறாள். தோழி அவளுக்கு ஆறுதல் கூறுகிறாா். அதற்கு

தலைவி, தலைவன் மீதுள்ள காமத்தை அடக்கி பொறுத்திருந்தாலும் அவனைக் கண்டால் கண்களே அழுது காம வேட்கையை வெளிப்படுத்துகின்றதே என்று கூறுகிறாள்.

**"யாம்எம் காமம் தாங்கவும் தாம்தம்**

**கெழுதகை மையின் அழுதன தோழி !"[64]**

என்ற பாடல் இதை குறிப்பிடுகிறது.

## நினைவு மனம்

நேரில் பார்க்க முடியாத ஒரு நிகழ்வை அதை முன்பு கண்டதை போல் நினைத்து மகிழ்வடையும் மனநிலை ஒவ்வொருவரிடமும் உண்டு. இவ்வாறே தலைவன் மனநிலை அமைந்துள்ளது. தலைவியை நேரில் காண முடியவில்லை. பாங்களின் உதவியை தலைவன் நாடுகிறான். அவனிடம் இரக்கமுடைய கண்களையும் மென்மையான புன்முறுவலோடு கூடிய செருக்கு மிகுந்த பார்வையையும் உடைய தலைவியை நினைத்துப் பார்த்து மகிழ்வேன் என்கிறான்.

**"உள்ளிக் காண்பென் போல்வல் முள்எயிற்று**

**.................................................................**

**............................................... கொடிச்சி**

**மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே"[65]**

என்று எயிற்றியனார் கூறுகிறார்.

## தலைவனின் உள்ளப் புலங்காகிதம்

களவொழுக்கத்தில் ஈடுபடும் காதலர் உள்ளம் எப்பொழுதும் களவொழுக்க இன்பத்தையே நாடும். அவ்வொழுக்கத்தில் நடந்த நிகழ்வுகளை எண்ணி மனம் மகிழ்ச்சியடையும். அதைத் தலைவன் வாயிலாக அகநானூற்றுப் பாடலில் அறியலாம்.

**“முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயக்கிப்**

**..........................................................................**

**..........................................................................**

**அம்தீம் கிளவி வந்த மாரே”**[66]

என்று பரணர் கூறுகிறார்.

அகத்திணை மாந்தர்களின் தன் அடங்கா உணர்வினை மேலும் அதிகப்படுத்தும் விதமாக, தன் உணர்வுக்கு வடிகால் தேடும் நிலையில் மேற்கண்ட சான்றுகள் அமைந்துள்ளன.

## தொகுப்புரை

மனிதனின் உள்ளத்தினை அறியப்படும் ஆய்வு முறையே உளவியல் ஆகும். மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை அவனுடைய செயல்பாட்டை கண்டு ஆராயும் ஒரு துறை உளவியல் என அறியப்படுகிறது. இவை மனம், நடத்தை சார்ந்தது.

இலக்கிய உளவியலை 1. படைப்பாளர் உளவியல், 2. படைப்பாக்க உளவியல், 3. பாத்திரங்களின் உளவியல், 4. வாசகரின் உளவியல் என நான்காகப் பகுக்கப்படுகிறது.

மகிழ்ச்சியோடு வாழும் மனிதன் துன்பம் வரும்போது உள்ள முறிவை அடைகிறான். மனித மனம் பல்வேறு காரணங்களால் உள்ளப் போராட்டத்தினைச் சந்திக்கிறது. உள்ள முறிவாலும் போராட்டத்தினாலும் மன இறுக்கம் அடைகிறான்.

இவ்வியலில் அகத்திணை மாந்தர்களின் மனவியல்புகளும், உளவியல் போக்குகளும், விலங்குகளின் நடத்தைகளும் ஆராயப்பட்டுள்ளது.

அகத்திணை மாந்தர்கள் உள்ளத்தவிப்பால் பிறழ்வு நடத்தை எனும் மடலேறும் நிலைக்கு தள்ளப்படுகிறார்கள்.

மக்களுடைய நல்வாழ்விற்கு விலங்குகளின் நடத்தை பற்றிய ஆராய்ச்சி வழிகாட்டியாக அமைந்துள்ளது. அவை யானை, புலி, கரடி, குரங்கு, மான், ஆடு, பசு போன்றவைகளாகும்.

சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்களில் அகத்திணை மாந்தர்களின் உளப்பகுப்பாய்வில் நோக்கில் அவர்களது கனவு, உள்ளப் போராட்டம், அச்சம், அதீத எண்ணம், மன இறுக்கம் போன்றவற்றை ஆராயப்பட்டுள்ளது.

மேலும் குறிஞ்சிப் புலவர்களான ஔவையார், பரணர், மள்ளனார், கபிலர் போன்றோரின் உளப்பகுப்பாய்வு திறன் சங்க இலக்கிய குறிஞ்சிப் பாடல்கள் வழி வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. S.Stansfeld Sargent,The Basic Teachings of the great Psychologists,P.1
2. William Medougall, An outline of Psychology, P. 8
3. டாக்டர். செ.ரா. பரமேஷ், சமூக உளவியல், ப. 4
4. பேரா. கி. நாகராஜன், கல்வி உளவியல், ப. 2
5. டாக்டர்.ஆரோக்கியசாமி,கற்றலின் உளவியல், மனித வளர்ச்சி, ப. 6
6. மேலது, ப. 16
7. இரா. காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், ப. 25
8. Norman Alexander Cemeron, Psychology-Abnormal, P.749
9. டி.ஈ. சண்முகம்-உளப்போராட்டம் (தொகுதி. 2) ப. 326
10. மு. ராசமாணிக்கம், உளவியல் துறைகள் (தொகுதி. 2), ப. 326
11. குறுந். 346
12. குறுந். 137
13. William Medougall, OP. Cit., P. 8
14. C. Chatterji and others – Effect of Sex, Vol. 20, P. 55
15. குறுந். 17
16. தொல். 997
17. அகம். 322
18. நற். 220
19. கலி. 58
20. William Medougall, OP. Cit., P. 2
21. அகம். 8
22. நற். 232
23. குறுந். 308
24. கலி. 38
25. நற். 332

26. அகம். 238
27. அகம். 73, அகம். 112, அகம். 81, நற். 125
28. குறுந். 38
29. அகம். 2
30. நற். 151
31. குறுந். 1-3
32. ஐங். 238
33. குறுந். 332
34. Hermann Boesc Hestein – Psychoalysis in Modern Literature, P. 651
35. Dr. Vetsyayan-Abnormal Psychology, P. 50
36. Lucy Freeman and Marvin Small, The Story of Psychoanalysis, P. Xil
37. குறுந். 29
38. குறுந். 60
39. நற். 204
40. குறுந். 153
41. நற். 144
42. ஐங். 234
43. நற். 32
44. குறுந். 76
45. நற். 69
46. ஐங். 218
47. கலி. 42
48. நற். 153
49. குறுந். 133
50. கலி. 44
51. அகம். 88

52. நற். 104
53. ஐங். 220
54. குறுந். 83
55. குறுந். 106
56. அகம். 152
57. நற். 341
58. ஐங். 232
59. கலி. 53
60. நற். 379
61. ஐங். 209
62. மேலது. 267
63. கலி. 58
64. குறுந். 241
65. மேலது. 286
66. அகம். 262

## இயல் – 3

## குறிஞ்சிப் பாடல்களில் வாழ்வியலும் பண்பாடும்

இலக்கியங்கள் வாழ்க்கையின் பிரதிபலிப்புகள். அவற்றைக் கொண்டு அக்கால மக்களின் வாழ்க்கை முறை, எண்ணங்கள், பண்பாடுகள், நம்பிக்கைகள், இல்லறம், அறவாழ்வு, விளையாட்டு போன்றவற்றைப் பற்றி அறியலாம்.

வரலாற்றுக்கு முற்பட்ட மக்கள் காட்டுமிராண்டி நிலை, அநாகரிக நிலை ஆகிய நிலைகளில் வாழ்ந்தனர். பின்னர் நாகரிக நிலை உருவாயிற்று. இரும்புக் காலம் நாகரிக நிலைக்கு வழி செய்தது. தென் இந்திய வரலாற்றில் வேறு உலோக காலம் இருந்ததில்லை என்பர். தொல்பொருள் ஆய்வாளர் சங்க காலத்தை இரும்புக் காலம் என்பர். உலகமெங்கும் இந்த நிலைகளில் சமுதாய வளர்ச்சி பரிணாமம் அடைந்து வந்ததைக் 'கார்பன் சைல்டு' என்ற அகழ்வாய்வாளர் சுட்டிக் காட்டியுள்ளனர்.

சங்க காலம் தமிழகத்தில் ஒரு மாறுதல் நிலையைக் குறிப்பதாகும். அது இனக்குழு வாழ்க்கை அழிந்து, நிலவுடையாக மலரும் காலக் கட்டத்தைக் குறிக்கின்றது.

ஆகவே சங்க காலத்திலும் சங்க முதற்காலத்திலும் இனக்குழு வாழ்க்கை தமிழகத்தில் நிலவி வந்தது. இக்காரணத்தாலேயே சங்க இலக்கியங்களில் இனக்குழு வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் பல நிகழ்காலச் செய்திகளைக் காணலாம்.

### வாழ்வியல்

வாழ்வு + இயல் = வாழ்வியல் எனப்படும். வாழ்வு என்பது மனித வாழ்க்கையைக் குறிக்கும் சொல். இயல் என்பது பகுப்பு எனப்

பொருள்படும். எனவே வாழ்வியல் எனப்படுவது மனித வாழ்க்கையைப் பற்றிய ஒரு பகுப்பு எனப் பொருள் கொள்ளலாம்.

மனித வாழ்க்கை நிலையானது. பல்வேறு நெறிகளை உள்ளடக்கியதாகக் காணப்படுகின்றது. இந்த உலகில் நேற்று வாழ்ந்த மனிதனுக்கும் இன்று வாழ்கின்ற மனிதனுக்கும் நாளை வாழ்கின்ற மனிதனுக்கும் அடிப்படையாக அமைவதே வாழ்வியலாகும். மனித உறவுகளால் பிரிக்கமுடியாதபடி அமைவதே வாழ்க்கை. வாழ்க்கையில் ஒருவருக்கொருவர் இடையூறு இல்லாமல் மனிதன் தனித்தும், பிறருடன் சேர்ந்தும் வாழ்வதற்குரிய நெறிமுறைகளே வாழ்வியலாகும்.

சமுதாயத்தின் ஓர் அங்கமாக விளங்குவது வாழ்வியலாகும். அரசியல், தனிமனித இயல்பு, பொருளாதாரம், சமயம், பண்பாடு, குடும்பம், திருமணம், நம்பிக்கைகள் மற்றும் பல்வேறு சடங்குகள் ஆகியவற்றை வெளிப்படுத்துவதே வாழ்வியலாகும்.

**வாழ்வியல் நெறிகள்**

உலகில் எண்ணற்ற உயிர்கள் தோன்றிய வண்ணம் உள்ளன. அவ்வுயிரினங்களுள் மனித உயிரின் தோற்றம் மிகச் சிறப்பானதாகும். மனிதன் சிறப்பு வாய்ந்தவனாகக் கருதப்படுவற்குக் காரணமாக அமைவது அவர்களுடைய வாழ்க்கை முறையாகும். எனவே தான் உலக வாழ்வியல் மனிதர்கள் கடைபிடிக்கும் ஒழுக்கத்தை அக ஒழுக்கம், புற ஒழுக்கம் என வகையாகத் தமிழ்ச் சான்றோர்கள் பிரித்தனர். அவை மனித மேம்பாட்டிற்கு முதன்மையாகவும், மாசற்ற வாழ்வுக்கு வழிகாட்டியாகவும் விளங்குகின்றன. மனித வாழ்வுக்கு அடிப்படை அன்பு ஆகும். அவ்வன்பினை அடிப்படையாகக் கொண்டு வாழ்வதே சிறப்பாக அமையும். அதுவே சிறந்த வாழ்க்கை நெறியுமாகும். தனியொரு மனிதனுக்குச் சமுதாயத்தோடு தொடர்பு ஏற்படுத்தி பிறருக்காக வாழவேண்டும் என்ற

நல்ல உணர்வை உண்டாக்குவது இல்வாழ்க்கைதான். அந்நெறிகளைப் போற்றி நின்றவரே சிறந்த மனிதனாகக் கருதப்படுவர்.

மனிதன் என்பவன் சமூக விலங்கு எனக் கிரேக்க தத்துவஞானி அரிஸ்டாட்டில் கூறியுள்ளார். இந்த விலங்கினை மனிதனாக்குவது இலக்கியம் தான். சிறந்த வாழ்க்கை நெறிமுறைகளை படம் பிடித்துக் காட்டுவது இலக்கியம். அது மனிதனை மேம்படுத்தவே தோன்றியது. இலக்கியம் என்பது இதயத்தை வளர்க்கப் பயன்பட்டது. சமூகத்தைப் பிரதிபலிப்பதோடு மட்டும் நின்றுவிடாமல் பண்படுத்தவும் மனித வாழ்வியலை வளமாக்கவும் இலக்கியம் முயன்றது.

அவ்விலக்கியத்தில் அறவழியில் பொருள் ஈட்டித் தானும் இன்புற்று பிறருக்கும் தந்து அவர்களையும் இன்புறுத்தி வாழ்வதே தமிழரின் வாழ்க்கை நெறியாகக் காட்டுகின்றனர். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து தம்புகழ் நிறுவுவதே வாழ்க்கையின் வெற்றியாகும். இத்தகைய வெற்றியை அடைய உயர்ந்த குறிக்கோள், நல்லெண்ணங்கள், அடக்கம், ஒழுக்கம் போன்ற நற்பண்புகள் தேவையாகும். வாழ்க்கையின் வெற்றிக்கு உதவும் வகையில் தமிழிலக்கியங்களில் அதிக அளவு வாழ்வியல் நெறிகள் கூறப்பட்டுள்ளன. சங்க காலம் தொடங்கி தற்காலம் வரை இச்சிந்தனைகள் இடைவிடாது அந்தந்தக்காலத் தேவைகளுக்கு ஏற்ப உருப்பெற்று, தான் தோன்றிய காலத்தோடு தம்மைத் தன்வயப்படுத்திக் கொண்டிருக்கின்றன. இவையே வாழ்க்கை செம்மையாக மண்ணில் நல்லவண்ணம் வாழ உதவிபுரியும் வழிகாட்டிகளாக விளங்குகின்றன.

மனிதன் காலந்தோறும் உலகத்தோடு இணைந்து வாழும் பண்பினை வளர்ப்பவனாகவும், வழங்குகின்றவனாகவும் உள்ளான்.

சங்க கால மக்கள் பொதுவுடைமையை வளர்க்கும் நாகரீக மக்களாய் வாழ்ந்தனர் என்பதை,

**“யாதும் ஊரே யாவரும் கேளிர்”[1]**

என்ற சங்கப் பாடலின் மூலம் நம்மால் உணர முடிகின்றது.

கம்பராமாயணத்தில் காணும் அற்புதமான செய்திகளைப் பின்பற்றினால் மனிதன் அமைதியாக வாழ முடியும். இன்றைய காலகட்டத்தில் பெற்றோர்களை அவமதிப்பதும், சொத்து தகராறு காரணமாக குடும்பத்தினரே ஒருவரையொருவர் கொலை செய்யக்கூட அஞ்சாத நிலையில் உள்ளனர். ஆனால் தாய், தந்தை சொல்லே உயர் வேதம் என்று எண்ணி அரச பதவி வாய்ப்பினை துறந்த,

**“என்பின்னவன் பெற்றசெல்வம் அடியனேன்**
**பெற்றகன்றே”[2]**

என்று கூறி கானகம் நோக்கிச் சென்ற ராமன் ஒரு காவியத் தலைவன் அன்றோ. அவன் காட்டும் வழி வாழ்க்கை நெறியன்றோ?

**“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப்படும்”[3]**

என்பது வள்ளுவரின் வாக்கு. வையத்துள் வாழ்வாங்கு வாழ வாழ்வியல் நெறிகளைப் பின்பற்ற வேண்டும். வாழ்க்கை அன்புடையதாகவும் பண்புடையதாகவும், பயனுடையதாகவும் விளங்க உயரிய சிந்தனைகளும், உயரிய செயல்களும் அடிப்படையானவை. வாழ்கின்ற மக்களுக்கு வாழ்ந்தவர்கள் பாடமாக அமைய வேண்டும். இதனை நன்குணர்ந்தவர்கள் நம் முன்னோர்களாவர். அவர்களுடைய வாழ்வியல் சிந்தனைகளை நாம் இலக்கியங்களின் வழி நன்கு அறியலாம்.

**மனித வாழ்வியல் – ஒரு பார்வை**

எப்படியும் வாழ்வது வாழ்க்கையாகாது, இப்படித் தான் வாழ வேண்டும் என்று வாழ்வதே வாழ்க்கை. உண்மையும் உழைப்பும், உயர்வும்

வாழ்க்கையின் மூலாதாரங்கள். மனிதனாகப் பிறந்தவன் மனிதனாக வாழ வேண்டும். மனித வாழ்வு உயர்த்திச் சொல்லும் அளவுக்கு இல்லாவிட்டாலும் தாழ்த்திச் சொல்லும் அளவுக்கு இருக்கக் கூடாது.

**"அழகாக வாழ கற்றுக்கொள்**
**முடிந்தால் வாழ்க்கையை அழகுபடுத்து**
**இல்லை என்றால் அசிங்கப்படுத்தாமலாவது இரு"**[4]

என்பர்.

**'போதும் என்ற மனமே பொய் செய்யும் மருந்து'**
**'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்'**
**'சிறுதுளி பெருவெள்ளம்'**
**'அளவறிந்து வாழாதஎன் வாழ்க்கை கழுதை புரண்டகளம்'**

என்ற பழமொழிகள் வாழ்க்கை பற்றியக் கருத்துக்களை நமக்கு உணர்த்துகிறது. பழங்காலத் தமிழர்கள் செம்மையான வாழ்க்கை வாழ்ந்தார்கள். சான்றோர்களின் அறிவுரை அவர்களது வாழ்க்கைக்கு வழிகாட்டியது. ஆனால் இன்றைய நிலை முற்றிலும் மாறுபட்டு காணப்படுகிறது. மூத்தோர் சொல் என்பது வேம்பைப் போல என்று எண்ணுவதாக உள்ளது.

மனித வாழ்க்கையில் முன்னேற்றம் அடைய வேண்டுமானால் அடிப்படை ஆதாரமாக விளங்குவது பொருள்தான். அதனால், இன்றைய காலக்கட்டத்தில் பொருளீட்டுவதையே குறிக்கோளாக வைத்துள்ளனர். ஆனால் அதுவே வாழ்க்கையாகாது என்பதை வள்ளுவப் பெருந்தகையார் குறிப்பிடுகின்றார். பணத்தின் தேவையை பூர்த்தி செய்யாத மனிதர்கள், மற்றவர்களைத் துன்புறுத்தி பணம் பறிக்கும் கயவரைப் பற்றி,

**"அழக்கொண்ட எல்லாம் அடிப்போம் இழப்பினும்**
**பிற்பயக்கும் நற்பா லவை"**[5]

என்கிறார் வள்ளுவர். பிறரைத் துன்புறுத்திப் பொருளைப் பறிப்பவனை அந்தப் பொருளே பின்னாளில் அவனை அழித்து விடும் என்பதை உறுதிபடுத்துகிறார். இவரது இந்த வாழ்வியல் உண்மை இன்றைய சமுதாயத்திற்கு மிக மிக அவசியமானதாகும்.

'தீதும் நன்றும் பிறர் தரவாரா' என்பதைப் போல மனிதர்களாகிய நமக்கு நன்மையும், தீமையும் மற்றவர்களால் வந்து சேர்வதில்லை. அது நமக்கு நாமே ஏற்படுத்திக் கொள்வதாகும். மனிதன் நன்மை அடைகிறபோது அது தன்னால் தான் நடந்தது என்று பெருமைப்பட்டு ஆர்பரிப்பதும் தீமை ஏற்படும்போது பிறர் மீது பழி கூறி ஒதுங்குவதும் நடைமுறை உண்மையாகும்.

மனித வாழ்க்கையானது சக்கரம் போன்றது. சக்கரம் எவ்வாறு சுழன்று கொண்டே இருக்கிறதோ, அதைப் போலத் தான் மனித வாழ்க்கையும் மாறி மாறி தோற்றமளிக்கும். ஒருவன் பணக்காரனாக இருந்து ஏழையாவதும் பின்னர் ஏழை பணக்காரன் ஆவதும், துன்பத்திற்குப் பின் மகிழ்ச்சியும் மகிழ்ச்சிக்குப் பின் துன்பமும் வருவது மனித வாழ்க்கையில் இயல்பாகும். எனவே துன்பம் கண்டு துவண்டு விடுவதும், மகிழ்ச்சி கண்டு தலைகால் தெரியாமல் ஆடுவதும் மனித இயல்புகளாகும். இவையில்லாமல் இயல்பான எதார்த்தமான வாழ்க்கையே சிறந்தது என்று இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

உலகம் நிலையானது, மனிதன் நிலையற்றவன். மனிதர்கள் வாழும் காலம் குறைவு என்பதை உணர்ந்து நாம் அனைவரும் சிறந்த நெறிமுறைகளைப் பின்பற்றி வாழ்வதே வாழ்வியலின் மேன்மையான நோக்கமாகும்.

## தொல்காப்பியர் காட்டும் வாழ்வியல் நெறிகள்

தமிழ்மொழியில் முதன்மையானதும், சிறப்பு மிகுந்ததுமான இலக்கண நூல் தொல்காப்பியமாகும். தொல்காப்பியம் மொழிக்கு இலக்கணம் வகுத்ததோடு நின்றுவிடவில்லை. வாழ்வாங்கு வாழ வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்துள்ளது. மனிதனது எண்ணங்கள் எப்படி அமைய வேண்டும் என்று இலக்கணம் வகுத்தவர் தொல்காப்பியர் ஆவார். மனிதனது அகப்புற வாழ்க்கைக்கு வித்தாக அமைந்த தொல்காப்பியத்தில் அகத்திணையியல், மெய்ப்பாட்டியியல், மரபியல் முதலிய இயல்களில் மக்களின் வாழ்வியல் நெறிகளை வரையறுக்கிறது.

தொல்காப்பியர் வாழ்வியல் நெறிகளை இருபெரும் பிரிவாக உணர்த்துகின்றார். அவை,

1. அக வாழ்க்கை
2. புற வாழ்க்கை

இவை முறையே அகத்திணையியல், புறத்திணையியல் வாயிலாக விளக்கப்படுகிறது.

அன்பின் ஐந்திணையான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை மற்றும் கைக்கிளை, பெருந்திணை முதலியன அக வாழ்வைச் சார்ந்தது.

புற வாழ்க்கை என்பது ஒருவனுடைய புகழ், பெருமை, கொடை, வீரம், வெற்றி முதலியவற்றை எடுத்துணர்த்துவது ஆகும். அகம், புறம் போன்ற இவற்றில் ஒன்று மாறினாலும் வாழ்க்கை இனிமையாக அமையாது என்பதனை உணர்ந்த ஆசிரியர் அக வாழ்க்கைக்கும் புற வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்துள்ளார்.

அக வாழ்க்கையை இரு பிரிவாகத் தொல்காப்பியர் வகுத்துள்ளார். அவை,

1. களவு வாழ்க்கை
2. கற்பு வாழ்க்கை என்பனவாகும்.

## 1. களவு

பெற்றோரும் சமுதாயமும் அறியாமல் ஓர் ஆண், ஒரு பெண்ணுடன் மெல்லிய காதலை நுகர்வது களவு என்கிறோம். இந்தக் களவினைத் திருமணத்திற்கு முன்பாக நிகழும் வாழ்க்கையாகக் கொள்ளலாம். சங்கப் பாடல்களில் களவிலும் கற்பிலும் அலர் ஏற்படுவதையும் அவ்வலர் தலைவியின் உள்ளத்தை உறுதிப்படுத்துவதையும் காண முடிகின்றது.

வடமொழியில் எண்வகை மணங்களுள் ஒன்றான கந்தருவம் கொடுப்போரும், பெறுவோரும் இன்றி, தலைவன் தலைவி தனியிடத்து சந்தித்து புரிந்து கொள்வதாகும்.

“இந்த கனவானது காட்சி, ஐயம், தெளிவு, குறிப்பறிதல் என்ற நான்கு படிநிலைகளைக் கொண்டு, இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற் கூட்டம் என்ற நான்கு நிலைகளில் அமையும் என்பர் தொல்காப்பியர்”[6]

வள்ளுவரும் களவியல், கற்பியல் என்று காமத்துப்பாலில் இரண்டாகப் பிரித்துள்ளார். இவ்வாறு களவு வழிக் கற்பைப் போற்றுவது பெண்ணுரிமையை நிலை நாட்டுவதாகவே அமைகின்றது.

## 2. கற்பு

கற்பாவது தலைவனுக்குத் தலைவியை அவருடைய பெற்றோர்கள் உரிய சடங்குகளோடு திருமணம் புரிந்து கொடுப்பது எனத் தொல்காப்பிய இலக்கணம் கூறுகிறது.

**“கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**

**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**

**விருந்து புறந்தருதலும் சுற்றமும் ஓம்பலும்”[7]**

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

பிற தெய்வங்களைத் தொழாது தன் கணவனையே தெய்வமாக எண்ணித் தொழுது எழுபவள் பெண். வானத்தைப் பார்த்து மழையைப் பெய் என்று சொல்ல மழை பெய்யும் என்பதை,

**“தெய்வந் தொழா அள்கொழுநற் றொழுதெழுவாள்**

**பெய்யெனப் பெய்யும் மழை”[8]**

என்று திருவள்ளுவர் கற்பின் மேன்மையை விளக்குகிறார்.

தமிழ் இலக்கியத்தைப் பொறுத்த வரையில் கற்பு என்பது ‘ஒழுக்கம்’ என்ற பொருளிலேயே பெரும்பாலும் கையாளப்பட்டு வருகிறது. முதன்முதலில் தொல்காப்பியம் தான் கற்பியல் என்றொரு இயல் வகுத்து கற்பு பற்றிய செய்திகளைக் கூறியுள்ளது.

**சங்க இலக்கியம் காட்டும் வாழ்வியல் நெறிகள்**

இலக்கியம் என்பது சமுதாய நிகழ்வுகளை வெளிக்காட்டும் கண்ணாடியாகும். பழங்கால மக்களின் வாழ்க்கை நெறிகளின் மூலம் எதிர்கால மக்களின் நல்வாழ்வினை விளக்கும் நிலையில் இலக்கியம் தலைசிறந்த இடத்தைப் பெறுகிறது. அவ்வகையில் சங்க இலக்கியப் பாடல்கள் ஒவ்வொன்றும் வாழ்வின் பல்வேறு நிலைப்பாடுகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் பின்பற்றப்பட்ட வேண்டியவற்றைத் தெரிவிப்பதால் இலக்கியமும் வாழ்க்கையும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து காணப்படுகிறது.

சங்க இலக்கிய அகப்புறப் பாடல்களில் காணப்படும் கட்டுக்கோப்பான பண்பாட்டுக் கூறுகளும், பழக்கவழக்கங்களும் தமிழருடைய தரத்தை உயர்த்துவதோடு ஏராளமான வாழ்வியல் நெறிகளைக் கொண்ட கருவூலமாக விளங்குகின்றன.

அக்காலத்தில் விருந்தோம்பல் சிறந்த அறமாகவும், இல்லறத்திலிருந்து செய்ய வேண்டிய கடமைகளுள் ஒன்றாகவும் போற்றப்பட்டது. விருந்தோம்பலில் தமிழர்கள் தலைசிறந்தவர்கள் என்பதை,

**“எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்**

**கிளரிழை அரிவை நெற் துழந்து அட்பிளர்ஊன்”**[9]

என்ற வரிகள் உணர்த்துகிறது. இல்லறம் நடத்துவது விருந்து ஓம்பிப் புகழ் அடைதல் பொருட்டே ஆகும் என்பது மேற்கண்ட வரிகள் உணர்த்துகிறது.

குடிமக்கள், உயிரினும் சிறந்தது ஒழுக்கமே என்ற உண்மையை உணர்ந்திருந்தனர். மேலும் “மிகுந்த கோபமும், காமமும், அளவிறந்த கண்ணோட்டமும், பகைவர்க்கு அஞ்சுதலும், பொய் கூறலும், பொருளின் மேல் அளவுக்கு மிஞ்சிய பற்று வைத்தலும், அளவுக்கு மிஞ்சிய தண்டனை அளித்தலும், இவை போன்ற பிறவும் அறவழியில் ஆட்சி செலுத்துவதற்குத் தடையாவன என்பதனைப் பதிற்றுப்பத்து புலப்படுத்துகிறது”[10]

சங்க கால மக்கள் பகுத்துண்டு வாழ்தல், அவரவா் கடமைகளை போற்றுதல், வினையின் பயனை துய்த்தல், கொடையில் ஈடுபடுதல், தீமை செய்யாதிருத்தல் போன்ற வாழ்க்கை நெறிகளில் ஈடுபட்டனா் என்பதை இலக்கியங்கள் மூலம் அறியலாகிறது.

## குறிஞ்சிப் பாடல்களில் வாழ்வியல்

### சமுதாயம்

உலகம் என்பது வெறும் நிலத்தினால் மட்டும் காட்டப்படுவதன்று. மனித எங்கு மாண்புடன் வாழ்கிறதோ, அங்கே இச்சொல் புதிய பொருளைப் பெறுகிறது. “விலங்குகளைப் போல மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருந்த காலத்திலிருந்து விலகி அறிவு வளர்ச்சியினாலும் பண்பாட்டு முதிர்ச்சியினாலும் அவர்கள் முழுமையை நோக்கி நடைபோட முயன்ற காலத்தில் தான் சமுதாயம் என்ற சொல் பிறந்தது”[11]

“சமூகம் அல்லது சமுதாயம் என்ற சொல்லினை ‘சொசைட்டி’ என மேனாட்டவர் அழைப்பர். அச்சொல் ‘சோசியசு’ என்னும் இலத்தீன் சொல்லிலிருந்து பிறந்ததாகும். அதற்குக் ‘கேண்ணம்’ அல்லது ‘ஒன்று கூடுதல்’ என்பது பொருளாம்”[12] என்று விளக்கம் தருவர்.

“கூடி வாழுகிற மனிதர்களின் குழுக்களையே சமுதாயம் என்கிற சொல் குறிப்பிடுகிறது. விலங்குகளைப் போன்ற நிலைகளிலிருந்து விலகிப் பண்பட்ட முதிர்ச்சி நிலையை நோக்கி அவர்கள் நகரத் தொடங்கினர். இதுவே சமுதாயத்தின் அடிப்படை”[13] என்று கூறுகிறார்.

“விலங்குகளைப் போலக் காடுகளிலும், பிறவிடத்தும் அலைந்து திரிந்த மனிதன் மந்தைக் கூட்டங்களாகக் கூடியிருந்த நிலையை விட்டு ஓரிடத்து நிலையாக வாழப் பழகிய நிலையில் சமூக உறவினை வளர்த்துக் கொண்டான். இதனை எண்ணியே மனிதனைச் சமூக விலங்கு”[14] என்றார்.

இவ்வாறு கூட்டமாக வாழத் தொடங்கிய காலத்தில் தான் மனிதனுக்குச் சமூக ஒழுக்கங்களும் பிறந்திருக்கின்றன என்பது உண்மை. இதனால் பிறரோடு அவன் கொள்ளக்கூடிய உறவு விளைந்தது. இந்த

அமைப்புத் தான் அவனுடைய வாழ்க்கை ஒழுக்கங்களை நிலைப்படுத்தக் கற்றுக் கொடுத்தது என்பதனைச் சமுதாய வரலாறு உணர்த்துகின்றது.

பண்டைய குறிஞ்சி நில மாந்தர்கள் ஒன்றாகக் கலந்து வாழ்ந்த வாழ்வே முதன்முதலில் சமுதாயத் தோற்றத்திற்கு வித்திட்டது என்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். அந்த நிலத்தில் வாழ்ந்த மனிதர்கள் தனித்தனி உதிரிப் பூக்களாய்ச் சிதறிக் கிடந்ததால் அவர்களது வாழ்க்கை அழிந்துவிடக் கூடிய அபாயம் ஏற்பட்டது. விலங்குகளிடையே வாழக் கூடிய கட்டாயம் அங்கிருக்கும் மனிதர்களுக்கு உருவானதால் அவர்கள் ஒற்றுமையாக இருந்தால் மட்டுமே அவ்விலங்குகளைக் கொன்று அவற்றை எதிர்த்துத் தங்கள் வாழ்க்கையைக் காப்பாற்றிக் கொள்ள முடியும் என்ற நிலை ஏற்பட்டது. அதனால் கூட்டங்கூட்டமாக வாழ்ந்து விலங்குகளை எதிர்த்துப் போராடினார்கள். எனவே இனக்குழு மக்கள் உருவாவதற்கான அவசியம் நேர்ந்தது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு வகை நிலங்களில் வாழ்ந்த மக்களின் இல்வாழ்க்கை முறைகள் வேறுபட்டு நின்றாலும் அவை அனைத்திலும் இழையோடக் கூடிய ஒரு வகைப் போராட்டத்தைக் காண முடிகிறது. எல்லா நிலங்களிலும் வாழ்ந்த மக்கள் உழைப்பையே முதன்மையான தொழிலாகக் கருதினார்கள்.

“முதன் முதலில் மக்கள் தோன்றிய இடம் மலை உச்சியே என்பர். ஆகவே இங்கு மக்கள் விலங்குகளோடு விலங்குகளாக வாழ்ந்து நாளடைவில் விலங்கு வாழ்வினின்றும் வேறுபட்ட நாகரிக வாழ்வைத் தொடங்கிய இடமும் குறிஞ்சி நிலப்பகுதியே எனலாம். மூங்கில்கள் உரசுவதால் நெருப்பு உண்டாவதைக் கண்டே நெருப்பை உண்டாக்கிக் கொள்வதற்குக் தீக்கடைக் கோலைக் கண்டு பிடித்துக் கொண்டதும் இங்கே தான். தம்மோடு உறைந்த கொடிய விலங்குகளை வேட்டையாடி

அவைகளைக் கொண்டு அவைகளிலும் ஆற்றல் மிகுந்தோராக விளங்கத் தொடங்கியதும் இங்கே தான்”[15]

இச்சமுதாயம் மனிதர்களுக்கு நிரம்பப் பாடத்தை போதிக்கிறது. இவ்வாறு சமூகச் சூழல்களில் அவன் கொள்கிற படிப்பினைகள் அனைத்தும் அவனுடைய புறவாழ்க்கையை மேம்படுத்திக் கொள்வதற்கும், அக வாழ்க்கையின் இன்பங்களை உறுதிப்படுத்திக் கொள்வதற்கும் உதவுகின்றன என்பதில் ஐயமில்லை.

எனவே குறிஞ்சி நிலத்தில் குறவர்களில் வேந்தரும், அறிஞர்களும், உழைக்கும் சாமானியர்களுமான சமூக அமைப்பும் இருந்தன என்பதை அறிய முடிகிறது.

## குடும்பம்

சங்க இலக்கியங்களில் குழு என்னும் சொல்லே குடும்பத்தை குறிக்கும் சொல்லாக ஆட்சி பெற்றுள்ளது. இந்த சொல் குலம், குடிமக்கள், ஊர், குடிமகன், குடியிருப்பு என்னும் பொருட்களுடன் குடும்பம் என்னும் பொருளிலும் ஆட்சி பெற்றுள்ளது.

சமுதாயம் என்பது பல்வேறு அமைப்புகளையும் படிநிலைகளையும் கொண்டது. அரசு, மதம், குடும்பம் என சமுதாயத்தின் அடிப்படைக் கூறுகள் பலவாறாகப் பாகுபடுத்தப்படுகின்றன. இவற்றால் இல்லறமே தொன்மையானது ஆகும். பல்வேறு வகைப்பட்ட பரிணாமங்களைப் பெற்று வளர்ந்து வருவது இல்லற நெறியாகும்.

மனித வாழ்வில் சிறப்பானதும் முழுமையானதும் இல்லறம் என்ற அமைப்பாகும். தனி மனிதனுடைய ஒழுக்கப் பண்புகளின் முழுமை இல்லறம் என்ற அமைப்பில் சீரமைக்கப்படுகிறது. இல்லத்தில் இருந்து அறவாழ்வை மேற்கொள்வது இல்லறம் எனப்படும். அறம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது இல்வாழ்க்கை ஆகும். செயற்கரிய

செயல்களைச் செய்தலே இல்லற வாழ்க்கையின் பயன் ஆகும் என்பது தொல்காப்பியத்தின் வாயிலாக உணரலாம்.

குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்கள் குறவன், நற்றாய், தலைவி, செவிலித்தாய், தோழி என்ற மாந்தர்கள் குடும்ப உறுப்பினர்களாக வாழ்ந்து வந்தனர்.

## இல்ல அமைப்பு

மலையும் மலையும் சார்ந்த இடமாகிய குறிஞ்சி நிலத்தில் தினை முதலிய பயிர்களைத் தின்ன வரும் யானை, பன்றி முதலிய விலங்குகளையும், கிளி முதலிய பறவைகளையும் விரட்டுவதற்காகக் கானவர் உயர்ந்த மரக்கிளைகளில் பரண் கட்டினர். மேலும் குறிஞ்சி நில மக்கள் சிறிய கால்களை நட்டுத் தினையறிந்த தாளால் வேய்ந்த குடிலில் வாழ்ந்தனர். கழிகளை நட்டுச் புல்லால் வேய்ந்த குடில்களில் சவ்வாது மலை மக்கள் வாழ்ந்தார்கள் (நற். 160) என்பதை குறிஞ்சிப் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

**மக்கள்**

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்களுக்குக் குறவர் என்று பெயர். இக்குறவர்களை கானவர், குறவன், புனவர், இறவுளர், கொடிச்சியர், வெற்பன், சிலம்பன் என பல பெயர்களில் அழைப்பர்.

## தொழில்

இந்நில மக்களின் முக்கியத் தொழில் வேட்டையாடுதல், தினை பயிரிடுதல், விலங்குகள் வளர்த்தல் முதலியனவாகும். வேட்டைத் தொழிலின் பழமைச் சிறப்புப் பற்றி,

"விலங்குகள் வளர்த்தல், பயிரிடுதல் முதலியனவற்றை விட வேட்டைத் தொழில் சாலப் பழமையானதாகும்"[16] என்று கலைக்களஞ்சியம் விளக்குகிறது.

## வேட்டையாடல்

மலைநாடன் சீழ்க்கை ஒலியுடன் அம்பினைச் செலுத்தும் வீரர்களுடன் கள்ளினைக் குடித்தான். நாய்கள் பின் தொடர வேட்டையாடச் சென்றான் என்பதை,

**"வீளை அம்பின் இளையரொடு மாந்தி**
**ஒட்டியல் பிழைய வயநாய் பிற்பட**
**வேட்டம் போகிய குறவன் காட்ட"[17]**

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

**"கோடு துவையா கோள் வாய் நாயொடு**
**காடுதேர் நசைஇய வயமான் வேட்டு"[18]**

என்றும் கூறுவர்.

## தேனெடுத்தல்

குறிஞ்சி நிலத்தார் பயன்படுத்திய மற்றொரு சிறந்த தொழில் தேனெடுத்தல் ஆகும். இதை,

**"கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"[19]**

என்ற அடிகளில் அறியலாம். மலைகளிலும் பாறைகளிலும் தேன் கிடைக்கும்.

## பயிரிடும் தொழில்

வேட்டைத் தொழில் இந்நிலத்துப் பொதுமக்களுக்கு அருகிய பயனைத் தரவே மக்கள் பசிக் கொடுமையால் காய், கனி, கீரை, தினை, அவரை, உளுந்து, மிளகு, நெல் போன்றவற்றை பயிர் செய்ய முற்பட்டனர்.

கொல்லைக் காட்டை உழுகின்ற குறவரைத் "தளிபதம் பெற்ற கானுழு குறவர்"[20] என்று நற்றிணை பாராட்டுகிறது.

சந்தன மரங்களை வெட்டி நிலத்தைப் பண்படுத்தி விளைவிக்கும் முறை பழைய கற்காலம் முதலே இருந்து வந்ததை, "பயிரிடுதவற்கு முன் செழித்து வளர்ந்த சந்தனம் முதலிய மரங்களை எரித்து எரித்தவற்றின் சாம்பலையே உரமாகக் கொண்டு பயிரிடும் முறை பழைய கற்கால முறையாகும்"[21]

குறவர்கள் செய்யும் உழவுத் தொழிலுக்கு மலையினின்றும் விழும் அருவி நீரையும், சுனை நீரையும் பயன்படுத்தியதை,

**"மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி**
**அருவியின் விளைவிக்கும்"**[22]

**"அகல்வாய்ப் பைஞ்சுனைப் பயிர்கால் யாப்ப"**[23]

என்ற பாடல் வரிகள் புலப்படுத்தும். இந்நீரைப் பயன்படுத்தி அகில், மூங்கில் முதலியவற்றைப் பயிரிட்டதை,

**"ஒளி கழை நிவந்த வோங்கு மலைச்சாரல்"**[24]

என்ற குறுந்தொகைப் பாடல் வரி புலப்படுத்தும்.

"நிலத்தை உழுவதற்குக் கலப்பையைப் பயன்படுத்தினர்"[25] எருதுகளைப் பயன்படுத்தி ஆழ உழுதனர்"[26]

கேழல் தன் கோட்டால் ஆழமாகக் கீறிய மண்ணில் குறவர் உழாமலே பயிரிட்டனர். இவ்வாறு வேடர்கள் பயிரிட்ட தினை, நெல் முதலான

தானியங்களைக் கிளி முதலான பறவைகள் கடியா வண்ணம் குற மகளிர் காத்ததை,

**"சிறுதினை கவர்தலின் கிளையமல்**

**பெருவரை யடுக்கத்துக் குரீஇ ஒப்பி"**[27]

என்ற பாடலால் அறிய முடிகிறது.

இவ்வாறு நிலத்தைப் பண்படுத்தி உழவுத் தொழில் மூலம் தானியங்களை உற்பத்தி செய்து வந்தனர் என்றும் உணர முடிகிறது.

**உணவு**

சங்க கால மக்களின் அன்றாட வாழ்க்கை முறையில் உணவுப் பொருட்கள் இடத்துக்கு இடம் மாறுபட்டிருந்தது. மக்கள் மா, பலா, வாழை என்ற கனி வகைகளையும், கிழங்குகள், தினை போன்ற தம் நிலத்தில் கிடைத்த உணவுப் பொருட்களையும் உண்டனர்.

குறிஞ்சி நில மக்களும் தம் நிலத்தில் விளைந்த அவரை, உளுந்து, மிளகு, தேன், தினை போன்றவற்றை உணவுப் பொருட்களாகப் பயன்படுத்தினர் என்பதை சங்க இலக்கிய நூல்கள் கூறுகின்றன. இதனை,

**"பெருபுனக் குறவன் சிறுதினை மறுகால்**

**செழுங்கொடி அவரை பூக்கும்"**[28]

என்ற பாடல் மூலம் குறவர்கள் தங்கள் நிலத்தில் தினை. அவரை, உளுந்து போன்ற தானிய வகைகளை விதைத்துள்ளனர் என்ற செய்தியை அறியலாம்.

**"கொடிச்சி காக்கும் அடுக்கல் பைந்திணை"**[29] என்றும்,

**"கிழங்குஅகழ் நெடுங்குழி மல்க வேங்கை"**[30] என்றும்,

**"பாசிலை அமன்ற பயறுஆ புக்கென"**[31] என்றும்,

**“ஐவன வெண்ணெல் அறை உரலுள் பெய்து இருவாம்”**[32] என்றும் சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

**உடைகள்**

மக்களின் வாழ்க்கைத் தரத்தினை உணவு, உடை, உறையுள் என்று மூன்றாக சங்க காலத்தோர் வகுத்துள்ளனர். இதில் உணவு வாழும் இடம் பொறுத்து அமைத்துக் கொண்டனர். கற்கால மக்கள் ஆடைகள் இன்றி விலங்குகளைப் போன்று சுற்றித் திரிந்துள்ளனர். மன்னர் இலைகளையும், மரப்பட்டைகளையும், விலங்கின் தோல்களையும் ஆடையாக அணிந்துள்ளனர் என்பதனை சங்க கால நூல்கள் குறிப்பிடுகின்றன. குறிஞ்சிநில மக்களும் தங்கள் வாழ்க்கையில் இலைகளையும், மரப்பட்டைகளையும் ஆடைகளாகப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை சங்க இலக்கியங்கள் விளக்குகின்றது. இதனை,

**“திருந்து இழை அல்குற்குப் பெருந்தலை உதவிச்**
**செயலை முழுமுகல் ஒழிய அயலது”**[33]

என்ற பாடல் மூலம் குறிஞ்சி நில மக்கள் ஆடையாக அசோகமரத்தின் பெரிய தழைகளையே அணிந்திருந்தனர் என்பதனை அறியலாம்.

மலர்களையும், தழைகளையும் தொகுத்து ஆடையாகத் தரித்துக் கொள்வது பெண்களின் வழக்கமாக இருந்து வந்தது. இதனை,

**“குவளைத் தண் தழை இவள் ஈண்டுவருந்த**
**நயந்தோர் புன்கண் தீர்க்கும்**
**பயம் தலைப்படா அப்பண்பினை, எனினே”**[34]

என்ற பாடல் மூலம் அறியலாம்.

“நகரத்து மக்கள் பஞ்சாலும், பட்டாலும், விலங்குகளின் தோலாலும், மயிராலும் ஆடைகள் நெய்து உடுத்தினர்.”[35]

பண்டைக் காலத்தில் படைவீரர்கள் இடுப்பைச் சுற்றிக் கட்டிய அழகிய ஆடைகளை உடையவர்களாகவும் விளங்கினர் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை தெரிவிக்கிறது. இதனை,

**"கரிகை நுழைந்த கற்றுவீங்கு செறிவு உடைக் கருவில்**
**ஓச்சிய கண் அகன் நுழ்ந்தேள்"**[36]

எனும் அடிகள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

**அணிகலன்கள்**

பழந்தமிழ் மக்கள் ஆடைகளினால் முழுவதும் மறைக்கப் பெறாத தம் உடலை அணிகலன்கள் பூண்டு மறைந்தனர். தங்கள் வாழ்க்கையில் அணிகலன்களை விரும்பாதோரைத் காண இயலாது. சங்க காலத்தில் ஆண்களும் பெண்களும் இணையாக அணிகலன்கள் விரும்பி அணிந்ததை சங்க நூல்கள் சான்றளிக்கின்றன. அரசர் முதல் பாமர மக்கள் வரையில் அணிகலன்களை அணிந்தனர். பெண்கள் தங்கள் கைகளில் சங்கினை அறுத்து வளையல்களாக அணிந்தனர். தங்கள் புதல்வர்கள் கழுத்தில் புலிப்பல்லால் ஆகிய தாலியினை அணிவித்தனர் என்பதை,

**"புலிப்பற்றாலிப் புதல்வற் புல்லி**
**அன்னா வென்னு மன்னையு மன்னோர்"**[37]

என்ற பாடல் வழி அறியலாம்.

குழந்தைகள் அணியும் அணிகலன்கள் கணக்கற்று இருந்தன. மகளிர் தம் கூந்தலைக் கைவிரல்களால் கோதி உலர்த்துவார்கள். அதை இரு தொகுதியாக வகிர்ந்து பின்னி முடித்திருப்பர்.

பழந்தமிழ் மகளிர் கண்ணுக்கு மைதீட்டிக் கொள்ளுவர். மைதீட்டும் குச்சிக்கும் 'கோல்' என்று பெயர். எப்போதும் பெண்களின் கண்கள்

மைதீட்டப் பெற்றிருத்தலால் பெண்களின் கண்ணை ‘உண்கண்’ என்றே கூறி வந்தனர்.

**“நன்றுமண் ! வாழ் தோழி ! உண்கள் !”[38]**

என்று கபிலர் குறிப்பிடுகிறார்.

**“அழலவிர் மணிப்பூண் நனையப்”[39]**

என்ற பாடலடிகளும் சங்க கால பெண்கள் அணிந்திருந்த அணிகலன்களை உணர்த்துகின்றன.

## தெய்வ வழிபாடு

குன்று இருக்குமிடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்பதால் குறிஞ்சி நில மக்கள் முருகனை வணங்கி வந்ததைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

தமிழர்கள் வணங்கிய தெய்வங்களில் மிகவும் தொன்மையான கடவுள் முருகனே. சேயோன் என்னும் முருகன் குறிஞ்சிக் கடவுளாவான்.

மன்னருடைய வீரத்திற்கும், சீற்றத்திற்கும் முருகனை உவமையாக்கப்பட்டமை அறிய முடிகின்றது. முருகன் வீரம் மிக்க கடவுளாக, போர்க் கடவுளாகச் சங்க நூல்களில் புகழப்படுகின்றார்.

“வானோர் தானைத் தலைவன். ஆல்கெழு கடவுட் சிறுவன், கொற்றவை சிறுவன், குறிஞ்சிக் கிழவன் எனப் பலவாறு முருகக் கடவுள் வருணிக்கப்பட்டுள்ளார்”[40]

தமிழர்கள் அன்றைய காலத்திலிருந்து இன்றைய காலம் வரை இறை நம்பிக்கையில் ஆழ்ந்த ஈடுபாடு உடையவர்களாக இருந்துள்ளனர் என்பதை,

**“புனவன் துடவைப் பொன்போல் சிறுதினைக்**
**கடிஉண் கடவுட்கு இட்ட செழுங்குரல்”[41]**

என்ற பாடலில் அறியலாம். தாங்கள் வேண்டுகின்ற செயல் நடக்க கடவுளுக்கு தினைக்கதிரை கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளதை இதன் மூலம் அறியலாம்.

குறவன் தன் உறவினருடன் மழை வேண்டும் எனக் கடவுளை வேண்டுவதாக ஐங். 251 ஆம் பாடல் உணர்த்துகின்றது. மகப்பேறு இல்லாத குறவன் கடவுளை வேண்டி மகனையோ மகளையோ பெற்று மகிழ்ந்தாக ஐங். 257 ஆம் பாடல் குறிப்பிடப்பட்டுள்ளது.

**“நெடுவேட் பேணத் தணிகுவள் இவள் என**

**முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூற”**[42]

என்ற அடிகளில் முருகனை வழிபட்டால் தலைவியின் பிரிவுத் துன்பம் தீரும் என்பதை காமக் கண்ணியார் குறிப்பிடுகிறார். இதனை,

**“நிலைஉயர் கடவுட்குக் கடம்பூண்டு”**[43]

என்ற வரிகளும் உணர்த்துகிறது.

இவ்வாறு குறிஞ்சி நில மக்கள் தெய்வ வழிபாட்டில் பல மரபுகளையும், வழக்கங்களையும் கொண்டிருந்தனர். மேலும் குறிஞ்சி நில மக்கள் கடவுளாக முருகனை வேலன், நெடுவேள், சேய், முருகு என்றெல்லாம் பல பெயர்களில் அழைத்து வந்தனர் என்பதை சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

**காதல்**

காதல் எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. காதலால் சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகள் மறையும். காதல் வயப்படுவது உயிர்களின் இயற்கையாகும் என்பதை,

**“காதல் அடைதல் உயிர் இயற்கை”**[44]

பாரதிதாசன் சுட்டுகிறார். காதல் உயர்ந்தோர்க்கு மட்டும் உரியது என்று இலக்கண நூல்கள் குறிப்பிடுவது தவறான ஒன்றாகும்.

சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை அடியோர்க்கும் வினைவலருக்கும் காதல் உண்டா என்பதைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை இலக்கியங்களைக் கொண்டு கண்டறிய வேண்டுமே தவிர இலக்கணங்களை மட்டும் வைத்துக் கொண்டு கண்டறிய வேண்டுமே தவிர இலக்கணங்களை மட்டும் வைத்துக் கொண்டு கண்டறிவது ஏற்புடையதன்று. காதல் என்பது உலகத்தார்க்கே பொதுவானது. இஃது ஒரு சிலருக்கு மறுத்துரைப்பதென்று எந்த விதமான வாழ்க்கைச் சட்டத்திலும் பொருந்தக் கூடியதன்று மனிதர்களுக்கு மட்டுமன்று விலங்குகளுக்கும் கூட காதல் உண்டு என்று கூறிய மரபு சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. (ஐங். 38)

அகவாழ்க்கையைப் பொறுத்தவரையில் காதலுக்கு அடிப்படை பொருள் வளம் அல்ல. இரு மனங்களின் சேர்க்கையே காதலை உண்டாக்குகிறது. மனவளம் இருப்பின் காதலின்பம் சிறக்கும். ஏழை என்றும், செல்வர் என்றும் காதலில் பிரிவினை செய்வது அகத்திணை வாழ்க்கைக்குப் பொருந்தாது என்பதே உண்மையாகும்.

உண்மைக் காதல் வயப்பட்ட மகளிர் தம் காதலர் அன்பில் மாறுபாடு கண்டாலும் தமது அன்பைக் காட்டுவதில் சிறிதும் குறைபடமாட்டார் என்ற தலைவியின் உள்ளப்பாங்கினை புலவர்கள் நயம்பட விளக்கியுள்ளனர். இதனை,

**“கட்டுபு நக்கியாங்கு காதலர்**
**நல்கார் நயவா ராயினும்**
**பல்காற் காண்டலும் உள்ளத்துக் கினிதே”**[45]

என்ற பாடலில் அறிய முடிகிறது. தலைவன் மீது தலைவி கொண்ட அன்பின் ஆழத்தை,

**“நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**

**நீரினும் ஆர் அளவின்றே சாரல்”**[46]

என்ற பாடலில் அறியலாம். காதல் ஊழ்வினையால் வருவதென்பதை நற்றிணைப் பாடல்,

**“வினைமாண் பாவை அன்னோள்**

**கொலைசூழ்ந் தனளால் நோகோ யானே”**[47]

கூறுகிறது. காதல் வயப்பட்ட தலைவன் தலைவியரை ஊர் மக்கள் பழிச் சொல் கூறினர் என்பதை,

**“.................................... அலர்வாய்**

**ஆம்பல் ஊரும் அவனொடு மொழியும்”**[48]

என்ற பாடல் கூறுகிறது. தலைவன் மீது உள்ள காதலை ஊராருக்கு தெரியாதபடி மறைக்கிறாள் தலைவி. இதனை,

**“இனையன தீமை நினைவனள் காத்து ஆங்கு**

**அனைவரும் பண்பினான் நின்தீமை காத்தவள்”**[49]

என்ற பாடலடிகளில் காணலாம்.

**கல்வி**

சங்க கால மக்கள் உழைப்பிற்கு மட்டுமல்லாது கல்விக்கும் முக்கியத்துவம் கொடுத்தனர்.

**“உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**

**பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே”**[50]

என்ற பாடல் வரிகளில் கல்வியின் சிறப்புகளை அறிய முடிகிறது.

கல்வியில் நன்கு தேர்ச்சிப் பெற்றவனை,

**“கல்வி யென் என்னும் வல் ஆண்சிறாஅன்”**[51]

என்று போற்றப்படுகிறான்.

தலைவன் ஞானநூல் கற்றறிந்தோரைக் குருவாகக் கருதி வழிபட்டு நின்று அந்நூல் தெளிவை அறிந்தவன் போல் சான்றோரைக் கண்டால் அடக்கமாக நடக்கின்றான் என்று தோழி தலைவியிடம் கூறுவதாக அமைந்த பாடல்,

**“வல்லாரை வழிபட்டு ஒன்று அறிந் தான்போல்”**[52]

என்பதாகும்.

சங்க காலத்தில் கல்விக்கும் கல்வி கற்ற புலவர்களுக்கும் பெரும் மதிப்பு இருந்தது. அக்காலத்தில் ஏழை மக்களும், செல்வர்களும், ஆடவரும், பெண்டிரும், கல்வியிற் சிறப்பெய்தியிருந்தனர் என்பதைச் சங்கப் பாடல்களிலிருந்து அறியலாம். சங்க காலத்தில் இலக்கியம், இலக்கணம், வரலாறு, கணிதம், வானநூல், உளவியல், பொருளாதாரம் போன்ற துறைகளில் புலமை பெற்ற அறிஞர்கள் இருந்தார்கள் என்பது புலனாகிறது.

**அரசியல்**

நாட்டையும் நாட்டிலுள்ள குடிகளையும் காத்து வந்தவன் காவலன் எனப் பெயர் பெற்றான். கடமையோடு ஆட்சி செய்யும் மன்னனின் குடை நிழலில் மக்கள் வாழ்ந்தனர் என்ற செய்தியை,

**“கடனறி மன்னர் குடைநிழல் போல”**[53]

என்ற நற்றிணைப் பாடலால் அறியலாம்.

**கலைகள்**

பழந்தமிழர்கள் கூத்திலும், இசையிலும் வல்லவர்களாய் திகழ்ந்தனர் என்பதை நற்றிணைப் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

**“பேழ்வாய்த தண்ணுமை இடம்தொட் டன்ன”[54]**

என்ற நற்றிணைப் பாடல் வழி இசைக் கருவியைப் பற்றி அறியலாம்.

**“தட்டைத் தண்ணுமைப் பின்னர் இயவர்**

**தீங்குழல் ஆம்பலின் இனிய இமிரும்”[55]**

என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது. கூத்துக் கலையும் அக்காலத்தில் சிறந்து விளங்கியது என்பதை,

**“வரையுறை தெய்வம் உவப்ப உவந்து**

**குரவை தழீஇயாம் ஆடக் குரவையுள்”[56]**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. கொடிச்சி குறிஞ்சிப் பண்ணைப் பாடி தினைபுனத்தைக் காத்தான் என்ற செய்தியை,

**“...................................... கொடிச்சி**

**பெருவரை மருங்கில் குறிஞ்சிப் பாட”[57]**

என்ற பாடல் வரி மூலம் அறிய முடிகிறது.

சங்க காலத்தில் ஓவியம் வரையும் கலைஞர்களும் இருந்தனர் என்ற செய்தியை சங்க குறிஞ்சிப் பாடல்கள் உணர்த்துகின்றன. அக்கால மக்கள் சிறந்த ஓவியனைப் பாராட்டினர் என்ற குறிப்பை,

**“நல்லேம் என்றும் கிளவி வல்லோன்**

**எழுதி அன்ன காண்தகு வனப்பின்”[58]**

என்ற பாடலடிகள் மூலம் அறிய முடிகிறது.

“தினைப்புனம் காத்த குற மகளிர் தினையை உண்ணவரும் கிளி முதலிய பறவைகளை ஓட்டுவதற்காக கிளி கடி பாடல் பாடினாள் என்ற செய்தி அகநானூற்றில் இடம் பெற்றுள்ளது”[59]

இவ்வாறு இசைக்கலை, பாட்டுக்கலை, ஓவியக்கலை, கூத்துக்கலை போன்றவைகள் சங்க காலத்தில் போற்ற வளர்க்கப்பட்ட உண்மையை மேற்கண்ட சான்றுகளால் புலப்படுகிறது.

**வணிகம்**

அக்காலத்தில் சிலர் தலைமுறை தலைமுறையாகக் தாம் செய்து வந்த தொழிலை மாற்றிக் கொண்டு வேறு தொழில்களையும் செய்து வந்தனர்.

பண்டைத் தமிழர் ஈடுபட்டிருந்த இரு பெரும் தொழில்கள் உழவும், வாணிகமும் ஆகும். உழவுத் தொழிலை விட வாணிகமே சிறந்து காணப்பட்டது.

குறிஞ்சி நில மக்கள் பசித்தால் ஆண் யானையின் தந்தத்தை விற்று அதனால் கிடைக்கும் பொருளைக் கொண்டு உண்பர் என்ற செய்தியை,

**“காந்தற்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென**
**கருங்கண் வேழத்துக் கோடுநொடுத்து உண்ணும்”**[60]

குறுந்தொகை பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

பண்டைய தமிழர்கள் அளவுக்கு மிஞ்சிக் கொடுக்காமலும், அளவைக் குறைத்துக் கொடுக்காமலும் வணிகர்கள், தத்தம் தொழிலை நடுநிலைமையுடன் நேர்மையாக நடத்தி வந்தனர்.

## பெண்களின் நிலை

பெண்ணுக்கு இல்லத்தில் இல்லாள், வாழ்க்கைத் துணைநலம், மனைவி ஆகிய சொற்களால் குறிக்கப்படுகிறாள்.

சங்க இலக்கியத்தில் காணப்படும் பெண்கள் இல்லறத்தில் சிறப்பான பங்கை ஆற்றியிருக்கிறார்கள்.

“பெண் காதலின் ஊற்றாவாள். அவள் சுதந்திரமும் தனித்துவமும் பெற்றவள். ஆணிற்குச் சமமாக மதிப்போடும், மரியாதையோடும் நடத்தப்

பெற்றாள். அவள் குடும்ப பாராத்தைச் சுமக்கும் மிருகம் அல்லள். அவள் இன்றியமையாதவளும் ஆணின் சரிபாதியானவளும் ஆவள். சங்க காலத்தில் தமிழ் நாட்டில் பெண் மரியாதையாகவும், பொலிவாகவும் நடத்தப்பட்டாள்"[61]

இவ்வாறு பெண்கள் பலவித பெருமைகளோடு வாழ்ந்தனர். பெண் உடலால் மென்மைத் தன்மை பெற்றிருந்த போதிலும் உணர்வுகளால் அவளது வன்மை மதிக்கப்பட்டே இருந்திருக்கிறது. இதை கே.கே.பிள்ளை,

"மகளிர் தம் உடல் மென்மை கருதியும் எதிர்த்து நிற்கும் ஆற்றலின்மை கருதியும், மகளிர் அனுதாபத்தோடு கவனிக்கப்பட்டார்கள்"[62] என்று சுட்டுகிறார். இது உடல் வகையிலான ஆய்வே தவிர அவர்கள் உணர்வுகளைச் சுட்டிக் காட்டுவதன்று.

"பண்டைத் தமிழ்ச் சமுதாய அளவில் நோக்கின் பெண் கற்கும் உரிமையும், கவி பாடும் உரிமையும், காதலுரிமையும், காதற் களவு செய்யும் உரிமையும், காதலனை இடித்துரைக்கும் உரிமையும், இல்லறத் தொழிலுரிமையும் பெருமையும், புகழும் எல்லாம் ஆடவர்க்கு நிகராகப் பெற்றிருந்தாள் என்பது வெளிப்படை"

மலைப்பகுதியான குறிஞ்சி நிலத்தில் குறத்தி குறி சொல்லவும் தினைப்புனம் காக்கவும் உரிமைப் பெற்றிருந்தாள். இந்நிலத்தில் ஆண், பெண் சம உரிமை பெற்று வாழ்ந்ததாகக் காண முடிகிறது. ஆக எந்தச் சமுதாயம் நாகரிக வாழ்வில் வாழ்கிறதோ அச்சமுதாயம் பெண்ணுரிமையை மறுத்திருக்கிறது. சாதாரண உழைப்பு வர்க்கத்தினராக இருந்தவர்கள் பெண்ணுக்கு உரிமை தந்து ஆண், பெண் சமம் என்ற நிலையில் வாழ்ந்திருக்கின்றனர். ஆகவே பெண்ணை அடிமைப்படுத்தியது மருத நிலத்தில் தான். அவளை வீட்டில் அடைத்து வைத்திருந்தனர்.

சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்களில் பெண்ணுக்கு மனைவி என்ற இல்லற நெறியை கடைபிடிக்கும் பெருமை தந்திருப்பதைக் காணலாம். தலைவனிடம் தோழி, தலைவியை மணந்து கொண்டு மலைநாடனின் மனைவி என்ற சிறப்பை பெற்றுத் தருமாறு வேண்டுகிறாள்.

**“நயவாய் ஆயினும் வரைந்தனை சென்மோ**
**கல்முகை வேங்கை மலரும்**
**நல்மலை நாடன் பெண்டுஎனப் படுத்தே”**[63]

என்ற பாடலால் அறியலாம். ஒரு பெண்ணுக்கு சமூகத்தில் மனைவி என்ற சிறப்பினைத் தருவது ஆணால் மட்டுமே முடியும் என்பது புலனாகிறது. ஆனால் கணவன் விருந்திற்கிணங்க வேறொரு பெண்ணை மணம் செய்து வைக்கும் மனப்பக்குவமுடையவளாக பெண் விளங்கியிருக்கிறார்.

**“நின்னினுஞ் சிறந்தனள் எமக்கே நீநயந்து**
**நல்மனை அருங்கடி அயர”**[64]

என்ற பாடலடிகள் இதை உணர்த்துகின்றது. அதாவது மலைநாடனே உன்னைவிட இவள் எனக்கு சிறந்தவளாக உள்ளாள் என்று மனைவி கூறுகின்றாள்.

பெண்களுக்கு நான்கு வித குணங்கள் இருப்பதால் ஆண்களை நம்பி ஏமாறக் கூடியவர்களாக இருக்கிறார்கள். பெண்கள் பேதையர் என்பதை,

**“நாண்அடப் பெயர்த்தல் நமக்குஆங்கு ஒல்லாது”**[65]

என்ற வரி தெளிவுப்படுத்துகின்றது. வெட்கம் சில செயலைச் செய்ய பெண்களைத் தடுக்கிறது.

பெண்கள் ஆண்களின் மாய மொழிகளுக்கு மயங்குவர். மேலும் ஆண்களுக்காக இரக்கப்படக் கூடியவர்களாகவும் இருப்பர் என்பதையும் குறிஞ்சிப்பாடல்கள் வழி அறிய முடிகிறது.

**இல்வாழ்க்கையின் சிறப்பு**

இல்வாழ்க்கை என்பது தலைவன் தன்னை விட்டுச் சென்றாலும் மற்றவர்கள் தவறு கூறாத நிலையில் நடந்து கொள்ள வேண்டும். அதுவே இல்லற மகளிரின் ஒப்பான பண்பாகும்.

சங்க கால மக்களின் இல்லற வாழ்க்கையினை புகழாதோர் இல்லை. நமது நாட்டு மக்களின் பண்பாட்டினை மேலை நாட்டார் புகழ்ந்ததில் நம் நாட்டு மக்களின் இல்லற வாழ்க்கையும் ஒன்று. இதனை,

**"விரிதிரை பெருங்கடல் வளைஇய உலகமும்**
**அரிதுபெறு சிறப்பின் புத்தேள் நாடும்**
**இரண்டும் தூக்கின் சீர்சோலாவே"**[66]

என்ற பாடலில் தலைமகன் தரும் இன்பத்தை ஒரு தட்டிலும் இந்தக் கடல் சூழ்ந்த உலகத்தையும் துறக்க உலகத்தையும் மற்றொரு தட்டிலும் வைத்து நிறுத்தினால் என் தலைவி தரும் இன்பத்திற்கு இணையாக உலகமும், துறக்கமும் ஆகா என தலைமகன் புகழ்கிறான்.

இல்வாழ்க்கையின் தலையாய பயன் மக்கட்பேறு, மக்கட்பேற்றால் இம்மைப் பயனும், மறுமைப் பயனும் கைகூடும். குழந்தை அழுத போது புலியினது வருகையைக் கூற அச்சுறுத்தியும் சந்திரனைக் காட்டியும் அழுகையை மாற்றினாள் என்பதையும் அறிய முடிகின்றது.

மழலை இன்பமே உயர் பேரின்பம். மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம். மக்கட் செல்வமே மகத்தான செல்வம். மக்கட் பேறில்லா வாழ்வு பெருமையடையாது. இதனை,

**"பொழுதும் எல்இன்று பெயலும் ஓவாது**
**கழுது கண்கனிப்ப வீசும் அதன் தலைப"**[67]

என்ற பாடல் இருள் சூழ்ந்த இரவுப் பொழுதில் பயத்தினால் நடுங்கும் சிறு குழந்தை, அச்சம் அகற்றித் தன் குழந்தையை உறங்க வைக்கத் தலைப்படுகிறாள் தாய். இத்தாய்மை உணர்வினை இப்பாடல் வழி அறியலாகிறது.

## பொழுதுபோக்குகள்

ஒவ்வொருவரும் எப்பொழுதும் வேலை செய்து கொண்டே இருப்பதில்லை. ஓரளவு உழைத்தபிறகு ஓய்வுக்கு நேரம் தேவைப்படுகிறது. அவற்றில் உடல் உழைப்பு, அறிவுழைப்பு போன்றவை ஒன்றிற்கு ஒன்று வேறுபட்டவை உழைப்புக்கும் ஓய்வுக்கும் இடையே பொழுதுபோக்கு என்பது மக்கட்கு அடிப்படைத் தேவையாகிறது.

சங்க கால மக்கள் உழைப்பிற்கு எவ்வளவு சிறப்பிடம் தந்தார்களோ, அதே அளவிற்கு விளையாட்டிற்கும் பொழுது போக்கிற்கும் உரிய இடம் தந்தார்கள். இவை உழைப்பின் அயச்சியைப் போக்கிப் புத்துணர்ச்சியை ஏற்படுத்திக் கொள்ள உதவின. இவ்விளையாட்டுக்கூட ஒரு நாட்டின் இயற்கைச் சூழல்களுக்கும், பழக்க வழக்கங்களுக்கும் தக்கவாறே அமையும் என்று கூறுவது எண்ணத்தக்கதாகும்.

சங்க இலக்கியங்கள் ஆடவர்க்கும், பெண்டிர்க்கும் உரியதுமான பல்வேறு விளையாட்டுக்களையும் பொழுதுபோக்கினையும் இனம் பிரித்துக் காட்டுகின்றன.

### சுனையாடல்

குறிஞ்சி நிலப் பெண்டிர் சுனைகளில் குடைந்து விளையாடினர். விருப்பமானவற்றைப் பாடிக் கொண்டு கூந்தலை உலர்த்தினர். அக்கூந்தலில் பலவகைப் பூக்களைச் சூடி மகிழ்ந்தனர் என்ற செய்திகள் குறிஞ்சிப் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

**“நுரைவளை முன்கை நேரிழை மகளிர்**

**இருக்களல் வியலறைச் செந்தினை பரப்பிச்**

**சுனையாய் சோர்விடை நோக்கி”**[68]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. சங்க கால ஆடவரின் விளையாட்டுகள் அவர்தம் வீரத்தை வெளிப்படுத்தும் தனித்தன்மை மிக்கனவாகவும், பெண்டிரின் விளையாட்டுகள் இல்லறம் சார்ந்தனவாகவும் அமைந்துள்ளன.

குரவை என்னும் விளையாட்டை பெண்கள் எழுவர் அல்லது ஒன்பதின்மர் கைகோத்து ஆடும் விளையாட்டாகும்.

### பந்தாடுதல்

சங்க காலத்தில் பெண்கள் பொழுது போக்கான விளையாட்டாக பந்தாடுதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதனை,

**“பந்தாடு மகளிரின் படர்தரும்**

**குன்றுகெழு நாடனொடு சென்றஎன் நெஞ்சே”**[69]

என்ற வரிகள் புலப்படுத்தும். “பந்தொடு பெயம் பரிவிலாட்டி” (நற். 140)

### ஓரை விளையாட்டு

இது மகளிர் விளையாடும் ஒருவகை விளையாட்டு ஆகும். ஓரை எனும் விளையாட்டை விளையாடல் தலைவியை இற்செறிக்கப்பட்டிருப்பது அறமாகாது என்பதை,

**“விளையாடு ஆயமொடு ஓரை ஆடாது**

**இளையோர் இல்லிடத்து இற்செறித் திருத்தல்”**[70]

எனும் பாடலடிகளில் அறியலாம்.

**ஊஞ்சல் விளையாட்டு**

மகளிர் விளையாடும் விளையாட்டு இதுவாகும். தலைவி தினைப்புனம் காக்கும்போது மரத்தில் ஊஞ்சல் கட்டி விளையாடியதை,

**"ஊசல் ஊர்ந்துஆட ஒருஞான்று வந்தானை"**[71]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகிறது.

**வள்ளைப் பாட்டு**

பெண்கள் உரலில் மூங்கில் நெல்லையிட்டு யானை தந்த உலக்கையினால் குற்றி தலைவன் மற்றும் மன்னனின் பெருமைகளைச் சொல்லிப் பாட்டுப் பாடுவர். இதனையே வள்ளைப் பாட்டு என்பர்.

**"பாடுகம் வா வாழி தோழி வயக்களிற்றுக்**
**கோடுஉலக்கை யாக நல்சேம்பின் இலைசுகளகா**
**ஆடுகழை நெல்லை அறைஉரலுள் பெய்து இருவாம்**
**பாடுகம் வா வாழி தோழி"**[72]

என்று குறிஞ்சிக்கலி இதை புலப்படுத்துகிறது.

**திருமண முறை**

சங்க கால மக்களின் திருமண முறைகள் அவர்தம் பண்பட்ட வாழ்க்கைக்கு அடையாளமாகத் தோன்றின.

**"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப"**[73]

என்ற திருமணச் சடங்குகள் தோன்றக் காரணத்தைத் தொல்காப்பியம் சுட்டுகிறது.

பொய்யும் வழுவும் தோன்றியதற்கு காரணம், இளம்பெண்ணின் நலத்தைத் துய்த்தி அவளோடு இரண்டறக் கலந்து பழகிய ஒருவன் எதிர்பாராத விதத்தில் அவளைக் கைவிட்டு விட்டு நழுவிப் போனான்

என்பதையும், அதனால் சினம் கொண்ட சமுதாயம் அவனைக் கண்டித்துத் திருத்த முயன்றதையும் ஏமாற்றிவிட்டு ஓடிய அவ்வாடவனை மரத்தில் கட்டித் தலையில் நீற்றைக் கொட்டி ஊரார் அறியத் தண்டித்ததையும் அகநானூறு கூறுகிறது.

**“தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனிக்**

**..................................................................**

**..................................................................**

**வீறுசால வையத்து ஆர்ப்பினும் பெரிதே”[74]**

என்ற பாடலின் மூலம் அறியலாம். இப்பாடலின் மூலம் பொய்யும் வழுவும் செய்தவர்கள் சமுதாயத்தில் வாழ்ந்திருக்கிறார்கள் என்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது.

பண்டைத் தமிழருடைய திருமணம் எளிமையானது. சடங்குகள் அற்றது. அதில் புரோகிதருக்கோ, தீவலம் வருவதற்கோ இடம் கிடையாது. திருமணத்திற்குரிய நாளையும் பார்த்து நம் முன்னோர் உறுதி செய்தனர். இந்த முறையில் பண்டைத் தமிழருடைய திருமணம் எளிமையும், இனிமையும், அன்பும், பண்பும் நிறைந்ததாக விளங்கியது. இடைக்காலத்திலோ, தற்காலத்திலோ திருமண நிகழ்ச்சியில் மணமகளுக்குத் தாலியினை மணமகன் அணிவதைப் போன்ற சடங்கு அக்காலத்தில் இடம்பெறவில்லை என்பது உண்மை.

மாமுது பார்ப்பன் மறைவழி காட்டிட மணமக்கள் தீவலம் வரும் பழக்கம் நகரங்களில் வாழும் மக்களிடத்தும் புதியதாகப் புகுந்து செல்வாக்குப் பெறத் தொடங்கியது. சங்க காலத்தின் பிற்பகுதியில் இந்த ஆரியச் சடங்கு வழிப்பட்ட இத்திருமண முறையைத் தமிழர்கள் வியப்புடன் நோக்கியமை புலனாகின்றது. இதனை,

**“நெய்பெய் தீயின் எதிர்கொண்டு**

**தான் மணந் தனையும் என விடுகும் தூதே”[75]**

என்று கபிலர் திருமணச் சடங்கில் ஓமம் வளர்த்தலை குறிப்பிட்டுள்ளார்.

சங்க காலத்தில் குறிஞ்சி நில மக்கள் வேங்கை மலர் பூக்கும் காலத்தில் தான் திருமணத்தை நடத்துவார்கள். சிற்றூர் மன்றத்தில் வேங்கை மணநாளை அறிவிப்பது போல பூத்தது என்ற குறிப்பை,

**“குன்ற வேலிச் சிறுகுடி ஆங்கண்**

**மன்ற வேங்கை மணநாட் பூத்த”[76]**

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகளில் காணலாம்.

வேங்கை மலர் பூக்கும் காலத்தில் தினை அறுவடை செய்வார்கள். அதே சமயம் திருமணத்தையும் நிகழ்த்துவார்கள் என்ற செய்தியை,

**“வேங்கை யும்புலி ஈன்றன அருவியும்**

**தேம்படு நெடுவரை மணியின் மானும்”[77]**

என்ற பாடல் வரிகள் தெளிவுப்படுத்துகிறது.

**“விண்தோய் கல்நாடனும் நீயும் வதுவையுள்**

**பண்டு அறியாதீர்போல் படர்கிற்பீர் மன்கொலோ”[78]**

என்று கலித்தொகையும் குறிப்பிடுகின்றது.

**காமம் மிக்க கழிபடர் கிளவி**

குறித்த காலத்தில் தலைவன் வராததால் காமம் மிகுந்து வருந்திய தலைவி கிளியிடம் கூறுவதாக நற்றிணைப் பாடல் அமைந்துள்ளது. கிளியே ! தலைவனின் நாட்டில் உன் சுற்றத்தாரைக் காணச் செல்வாய். அப்போது குறவரின் இளமகள் முன்பு போலவே தினைக் கொல்லையை காவல் காக்கிறாள் என்று தலைவரிடம் சொல்லி என் குறையை தீர்த்து வைப்பாயாக என்று கூறுகிறாள்.

**“நின்குறை முடிந்தபின்றை என்குறை**

**சொல்லல் வேண்டுமால் கைதொழுதுஇரப்பல்”**[79]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகிறது.

காமத்தை வெறுக்க இயலாது. காமமானது தன்னை சிறிதளவேனும் நன்மை தருவதென அறியாத பேதையாரிடத்தும் சென்று இரந்து நிற்கின்ற பேதைமையினை உடையதாகும் என்பதை,

**“...................................... காமம் யாவதும்**

**நன்றுஎன உணரார் மாட்டும்**

**சென்றே நிற்கும் பெரும் பேதைமைத்தே”**[80]

என்ற அடிகள் குறிப்பிடுகிறது. மேலும் குறுந்தொகையில் 101, 136, 199, 204, 206, 225 ஆகிய பாடல்களிலும் காமத்தைப் பற்றிய செய்திகளைக் காணலாம்.

**கற்பின் சிறப்பு**

சங்க இலக்கியங்களில் பெரிதாகச் சொல்லப்படும் வாழ்க்கை மதிப்பு கற்பு என்பதாகும். நிலவுடைமை ஆதிக்கம் தோன்றுகிற காலங்களிளெல்லாம் பெண்கள் ஆடவனின் கட்டுப்பாட்டுக்குள் இருந்திருக்கின்றனர் என்பதை உலக வரலாற்றுப் போக்கு உணர்த்துகிறது. நிலத்திற்கு உடையவனான ஆடவன் பெண்களைத் தனக்குரிய உடைமைப் பொருள்களில் ஒன்றாகக் கருதுகிறான் என்பது உண்மையாகும். தமக்குரிய உடைமைப் பொருள், தமக்குரிய போகப் பொருள் தமக்கு அடங்கி நடக்க வேண்டிய ஓர் உயிர் என்றே பெண்ணை அவன் மதிப்பிட்டான். அதனால் பெண்ணை கட்டுப்பாட்டிற்குள் வைத்திருந்தான்.

**“சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்**

**நிறைகரக்கும் காப்பே தலை”**[81]

என்று வள்ளுவர் சுட்டுகிறார். அதாவது மகளிர் தங்கள் மனக் கட்டுப்பாட்டினால் காத்துக்கொள்வதுதான் சிறப்புடையதே தவிர, சிறையினால் அவர்களைக் காக்க முடியாது என்கிறார்.

“சங்க இலக்கியத்தில் கற்பு என்கிற மிகப்பெரிய பெருமை அவளுக்குப் போதிக்கப்படுகிறது. ஆடவனைப் பற்றி எளிமையாகக் கூறும் சங்க இலக்கியம் பெண்களின் கற்பு பற்றிப் பலவாறாகப் பாராட்டுவது கண்டு”[82] அவள் ஏற்றம் அல்லவா பெறுகிறாள் என்று எண்ணத் தோன்றுகிறது.

சங்க இலக்கியம் தோன்றிய காலத்தில் வாழ்ந்த மக்கள், வாழ்க்கை இயல்புக்கேற்ப கற்பைப் பெரிதுபடுத்தி இலக்கியங்கள் கூறுகிறது.

**“உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று”**[83]

என்று தொல்காப்பியம் சுட்டுகிறது. பெண்களின் கற்புச் சிறப்பே ஆடவரின் வாழ்க்கை மேன்மைகளுக்கெல்லாம் அடித்தளமாகிறது என்பதைச் சங்க இலக்கியங்கள் பல இடங்களில் விளக்குகின்றது.

வேட்டைக்குச் செல்லும் ஆடவன் தான் விரும்புகிற வேட்மையைப் பெற வேண்டுமானால் அவனது மனைவி கற்புடையராக இருத்த வேண்டும் என்பதை,

**“காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ் சிலம்பின்**
**வாங்கமை மென்தோள் குறவர் மடமகளிர்**
**தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலால் தம்மையரும்**
**தாம் பிழையார் தாம்கொடுத்த கோல்”**[84]

என்று கலித்தொகை கூறுகிறது. இவ்வாறு கூறுவதிலிருந்து பெண்களுடைய கற்பு என்பது அவர்கள் தங்களைக் காப்பாற்றிக்

கொள்வதற்கு மட்டுமன்று, ஆடவர்களின் மேன்மையைக் காப்பாற்றுவதற்கும் தான் என்று புலவர்கள் அறிவுறுத்தியிருக்கின்றனர்.

தலைவி தலைவனோடு இல்லறத்தில் ஈடுபடுவதால் அது தலைவிக்கு இன்பத்தையே தருகிறது. இது வாய்மையன்று. மெய்மையே ஆகும் என்று தோழி தலைவியிடம் கூறுகிறார்.

**"சிலம்புடன் கமழுஞ் சாரல்**
**விலங்குமலை நாடன் மலர்ந்த மார்பே"**[85]

என்ற நற்றிணை பாடல் கூறுகிறது.

தலைவி தோழியிடம் நம் காதலா் நாட்டில் உள்ள விலங்குகளால் கலங்கிய கிணற்றை நீர் நம் வீட்டுத் தோட்டத்தில் உள்ள தேன் கலந்த பாலைவிட இனிமையானது என்று கூறுகிறாள்.

**"தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு**
**உவைலக் கூவல் கீழ்**
**மான்உண்டு எஞ்சிய கலிழி நீரே"**[86]

என்ற பாடல் விளக்குகிறது. தலைவி தலைவனோடு வாழும் கற்பின் மேன்மையை இப்பாடல் புலப்படுத்துகின்றது.

**பரத்தமை**

புலவர்கள் கற்பின் பெருமையை விண்ணுக்கு உயர்த்திப் பாடிய போதும் நடைமுறை வாழ்க்கையில் பரத்தமை என்ற அவலம் நிறைந்து இருப்பதைச் சங்க இலக்கியங்கள் பெரிதும் சுட்டுகின்றன.

**"பாணன் கூத்தன் விறலி பரத்தை**
**யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்"**[87]

என்று தொல்காப்பிய நூற்பா சுட்டுகின்றது. இதில் பரத்தையர் சமுதாயத்தில் பெற்றிருந்த இடத்தைத் தெளிவாகச் சுட்டுகிறது. பரத்தமையைத் தொல்காப்பியர் எங்கும் கண்டித்தாகத் தெரியவில்லை.

பரத்தையரில் பலவிதப் பிரிவினர் இருந்திருப்பதை சங்க இலக்கியம் இற்பரத்தை, காமப்பரத்தை, சேரிப்பரத்தை, காதற்பரத்தை என்று வகைப்படுத்துகிறது.

“கிரேக்கத்திலும் பரத்தமை இருந்தது என்று பெர்ணாண்டோ குறிப்பிடுகிறார். அவர்கள் உயர்நிலைப் பரத்தையர், இசைப் பரத்தையர், விலைப்பரத்தையர் எனப்பட்டனர்.”[88]

எனவே கிரேக்கத்திலும் தமிழகத்தைப் போலவே பல பிரிவாகப் பிரிந்து தங்கள் வாழ்க்கையை நடத்தியமையை அறிய முடிகிறது.

சங்க இலக்கியத்தில் மருதத்திணையில் தான் அதிகமாகப் பரத்தமை ஒழுக்கம் பேசப்படுகிறது. இவர்கள் வாழ்க்கையில் பரத்தையராக இருப்பினும் பண்பால் மென்மை வாய்ந்தவர்களாக இருப்பதைச் சங்க இலக்கியங்களில் காண முடிகிறது.

தம்மிடம் கூடியபிறகு தலைவியிடம் தலைவனை அனுப்பி வைக்கிறாள் பரத்தை. விறலியிடம் தலைமகள் என்பால் அன்புடையவளாக இருக்கிறாள். நானும் அவ்வாறே இருக்கிறேன். அதனால் தலைவனை அவளிடம் அனுப்புவதில் என்ன தவறு இருக்கிறது என்று பரத்தை கூறுகிறாள்.

**“எம்நயந்து உறைவி ஆயின் யாம்நயந்து**

**நல்கினம் விட்டதுஎன்? நலத்தோன் அவ்வயின்”**[89]

என்ற நற்றிணைப் பாடல் வரிகள் விளக்குகிறது. இதன் மூலம் அக்காலத்தில் தலைவி – பரத்தை நட்பு பெருமையாகப் பேசப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

தலைவன் பரத்தையரோடு உறவு கொண்டமையை தோழி இடித்துரைப்பதாக ஐங்குறுநூறுபாடல் கூறுகிறது.

**“அறியேம் அல்லேம் அறிந்தனம் மாதோ**

**பொறிவரிச் சிறைய வண்டினம் மொய்ப்பச்**

**சாந்தம் நாறும் நறியோன்**

**கூந்தல் நாறும்நின் மார்பே தெய்யோ”[90]**

என்ற பாடலில் உனக்குப் பிறபெண்டிரோடு உறவு உற்றமை எங்களுக்குத் தெரியாமல் இல்லை. உன் காதலின் கூந்தல் மணம் உன் மார்பில் மணக்குகிறது என்று தோழி தலைவனிடம் வினவுகிறாள்.

தலைவன் பரத்தவரை விட்டு மனைக்கு திரும்ப வருகிறான். தலைவியிடம் வாயில் கேட்க தூது அனுப்புகிறான். தலைவியும் அதை ஏற்கிறாள். இதை,

**“தீதுஇல் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்**

**வந்தன்று வாழி தோழி”[91]**

என்ற பாடலில் அறியலாம்.

**வாழ்வியல் உண்மை**

“செல்வம் இழந்து வறுமையுற்ற சான்றோர் தமது துன்பத்தை நீக்கக் கூடிய உறவினிடம் சென்று இழந்து நிற்பர். தம்மிடம் இரந்தோர்க்கு முகம் சுளிக்காமல் கொடுத்த வேண்டும். அவ்வாறு இயலாமல் போனால் சாதல் நன்று”[92] என்ற வாழ்வியல் தத்துவத்தை கலித்தொகை கூறுகிறது.

“திறமையுள்ளோர் செய்யும் வினை, அறத்தொடு பொருந்தியது ஆகும். சுற்றத்தாரை உடைய மக்கட்கு இவை பற்றக்கோடும் ஆகும்”[93] என்று குறுந்தொகை வலியுறுத்துகிறது.

இவ்வாறு பண்டைய தமிழ் மக்களின் வாழ்க்கை முறை ஒரு சிறந்த பண்பாட்டை உணர்த்தி நிற்கும் தலைசிறந்த நெறிமுறைகளைக் கொண்ட அற்புத ஒளிவிளக்காகும் என்பதை மேற்கண்டவற்றின் மூலம் அறிய முடிகிறது.

**பண்பாடு**

தமிழ் இலக்கியங்கள் சங்க கால மக்களின் வாழ்க்கை, வாணிகம், பண்பாடு, பழக்க வழக்கம் முதலியவற்றை எடுத்துக்காட்டி நம் நினைவில் நிலை நிறுத்துகின்றன. வாழ்க்கையின் வழிகாட்டிகளாகத் திகழ்கின்றன. ஒவ்வொரு இலக்கியமும் தாம் தோன்றிய காலத்து நாட்டின் நிலையையும் மக்களின் வாழ்வியல் முறைகளையும் பழக்க வழக்கங்களையும் எடுத்துக்காட்டும் வகையில் அமைந்துள்ளது.

தமிழ்நாட்டு வரலாறு தொல்காப்பியர் காலம் வரை எட்டி நிற்கிறது. தொல்காப்பியத்திலும், சங்க நூல்களிலும் மனிதன் பண்பாட்டு நெறியோடு வாழ்ந்த வாழ்க்கையின் ஊடாட்டம் காணப் பெறுகிறது.

**தமிழர் பண்பு**

“தமிழர் பண்பு தனிச்சிறப்புடையது. அவர்தம் வரலாறு புகழுடையது. பெருமையுடையது. அடிப்படையானது. உலகப் பண்பாட்டின் உயிர் நாடி எனலாம். அது அக வாழ்வையும் புற வாழ்வையும் பகுத்துக் கொண்டது. மனித வரலாற்றின் மிகப் பழங்காலத்திலேயே முறையான சமூகவியல் நெறியினை பகுத்துக் கொண்ட பெருமையுடையது. அறம் ஒன்றே தலையாயதென உணர்த்துவது”[94] என்று தமிழர்களது பண்புகளையும் சிறப்புகளையும் கூறுவர்.

மனித இனம் எத்துணை கூரிய அறிவு படைக்கப் பெற்றிருப்பினும், பட்டங்களையும் பல்வேறு சிறப்புகளையும் பெற்று உயர்ந்திருப்பினும், செல்வத்தால் செழித்திருப்பினும், பிறவகை உயர்வுகளால்

கொழித்திருப்பினும் பண்பாடு என்ற ஒன்று அவ்வினத்திற்கு இல்லையெனில் அது ஓரறிவுடைய மரத்திற்கும் கீழ்ப்பட்டதாகக் கருதப்பெறும். பண்பாடு என்னும் செல்வம் மனிதனை உயர்த்திக் கொண்டே சென்று நின்று நிலைக்கச் செய்கிறது. பண்பாடு மனித இனத்துடன் இயைந்து காணப்பெறுவது. அது பிரிக்க இயலாதது. பிற உயிரினங்களிடமிருந்து மனித இனத்தை வேறுபடுத்திக் காட்டி இனம் கண்டு கொள்ள உதவுகிறது.

**பண்பாடு – சொற்பொருள் விளக்கம்**

"பண்பாடு (Culture) என்ற சொல் பயிர்த்தொழிலைக் குறிப்பாக உணர்த்துகின்றது என்பர்."[95] நிலம் தானாகப் பண்படுவதில்லை. அதை உழுது, புழுதியாக்கிப் பயிர் வளர்வதற்குப் பண்படுத்துதல் வேண்டும். உயிராகிய பயிர் வளர்தற்கும், நல்வாழ்வாகிய விளைவு பெறுவதற்கும் உளமாகிய வயலைப் பழக்கத்தாலும் ஒழுக்கத்தாலும் பண்படுத்துதல் பொதுவாகப் பண்பாடு எனலாம்.

முதலில் பயிர்த்தொழிலைக் குறிப்பாக உணர்த்திய 'பண்பாடு' என்ற சொல் காலப்போக்கில் நுண்பொருட்பேறு பெற்றது. ஒரு குறிப்பிட்ட சமூக மக்களின் உள்ளத்தைப் பண்படுத்துவதற்குக் காரணமாகிய சமூகப் பழக்கவழக்கங்களையும், பண்புகளையும், கருத்துக்களையும், எண்ணங்களையும் குறிக்கும் பொதுச் சொல்லாக விளங்குவதாயிற்று.

"நான் பண்பாடு என்பதைப் பொதுவாக ஒரு சமூகத்தில் நிலவுகின்ற கருத்துக்கள், எண்ணங்கள், உயர்ந்த பண்புகள், ஒழுங்குபடுத்தப்பட்ட உறவுகள் பண்பான உபசரிப்புகள் ஆகியவற்றின் ஒரு சேர்க்கை என்று வரையறை செய்கிறேன்"[96] என்று பேராசிரியர் பனிக்கர் பண்பாட்டிற்கு இலக்கணம் கூறுகிறார்.

“ஒரு சமூகத்தினர் தம்முடைய முன்னோர்களிடமிருந்து பெற்று பேணி வருகின்ற பண்பட்ட பழக்கவழக்கங்கள் மரபு வழிப்பட்ட குணங்கள் அவை சார்ந்த செயல்கள் ஆகியவற்றைப் ‘பண்பாடு’ என்ற சொல் குறிக்குமென்று டாக்டர். செ.ரா. பரமேஷ் அவர்கள் கருத்துரைக்கிறார்”[97]

ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் தலைமுறை தலைமுறையாக நிலவி வருகின்ற பண்பட்ட கருத்துக்களையும், பழக்கவழக்கங்களையும், நம்பிக்கைகளையும், கொள்கைகளையும், குணங்களையும் ஆழ்ந்து நோக்கி ஆராய்தலை பண்பாட்டு ஆய்வாகக் கருதலாம்.

தனிப்பட்ட ஒருவருடைய மனப்பக்குவ நிலைக்குக் காரணமாகிய கருத்துக்களையும் பழக்கவழக்கங்களையும் குணங்களையும் கொள்கைகளையும் ஆராய்வதில் கவனம் செலுத்தாமல் ஒரு குறிப்பிட்ட சமூகத்தினர் பண்பாட்டை நோக்குவதில் கவனம் செலுத்தப்படுகிறது.

தமக்கென வாழாது பிறர்க்குரியராக வாழ்தலும், அமுதமே கிடைப்பினும் பிறருக்குத் கொடுத்துத் தாம் உண்ணுதலும் பண்பாடு மிக்கவர் இயல்பு எனலாம். பழந்தமிழ் இலக்கியங்கள் வழித் தமிழரின் வாழ்வியல் சார்ந்த பண்பாட்டுக் கூறுகளை அறிய முடிகின்றது. “எளியோரிடத்தும் இனிமையாகப் பேசுவதும், புதிதாக வந்த ஒழுக்கமுள்ள அயலாரை விருந்தோம்புவதும், இரப்போர்க்கு இடுவதும் இயன்றவரை பிறருக்கு உதவும் கொள்கையும், மானம் கெடின் உயிரை விடுவதும் தமிழரின் பண்பாட்டுக் கூறுகளுள் குறிப்பிடத்தக்கன”[98]

பண்பாடு என்ற சொல்லை பண்பு + பாடு எனப் பிரிக்கலாம். ‘பண்பு’ என்பது உயிர் உயிரினாலாகிய பொருட்களின் குணம் எனத் தமிழ் அகராதி கூறுகிறது.

ஆங்கிலத்தில் 'Culture' என்று சுட்டுவதற்கு நேராகவே 'பண்பாடு' என்று ஆளப்படுகிறது. இச்சொல்லை இப்பொருளில் முதன்முதலில் ஆண்ட பெருமை அறிஞர் டி.கே. சிதம்பரநாத முதலியாருக்கே உரியது என்பர்.

சூழ்நிலைக்கும் மனிதனுக்குமுள்ள தொடர்பால் அமைவது பண்பாடாகும். அதற்கு மனிதன் பெறும் அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்கம், சட்டம், வழக்கம் போன்ற பல திறமைகளையும், பழக்கங்களையும் உள்ளடக்கிய முழுமையே பண்பாடு என ஈ.பி.டெயிலர் எனும் மானிடவியலார் இலக்கணம் வகுக்கிறார்.

பண்பாடு ஒன்று இல்லையெனில் உலகம் இல்லை. உயிர்கள் இல்லை. உற்றதொரு செயலில்லை. ஒன்றுமேயில்லை. 'பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்' எனக் கலித்தொகை சங்க காலத்திலேயே பண்பின் தகைமையைக் குறிப்பிடுகின்றது. குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகர் 'பண்புடைமையாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லார் இயல்புகளையும் அறிந்து ஒத்து ஒழுகுதல்' என விளக்கியுள்ளார். இயல்புகளையும் அறிந்து ஒத்து ஒழுகுதல் என விளக்கியுள்ளார். பண்பிற்குப் பொருள் விளக்கம் தரும் சென்னைப் பல்கலைக்கழக அகராதியும் பிறர் இயல்பை அறிந்து நடக்கும் நற்குணம் எனக் குறிப்பிடுகின்றது. எனவே, மனிதனிடம் பண்பு பொருந்துதலே பண்பாடு எனலாம். மேலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப்பாங்கின் வெளிப்பாடே பண்பாடு என்கிறோம். அந்த வெளிப்பாடு சுவையுணர்வாகவும், நடை உடை பாவனைகளாகவும் தோன்றும்.

"உடல், நல்லநிலை, மனம், தூய்மை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும்"[99] என்பர்.

**பண்படுத்தல்**

பண்படுத்தல் என்பது சீர்திருத்தல் எனப்பெறும். எனவே பண்பினைப் பற்றிப் பேசுதல் பண்பாடு எனப்படும். இதனை தொல்காப்பியர் பண்பு என்ற சொல்லிலேயே குறிப்பிடுகிறார். பண்பாடு என்பதற்கு பக்குவப்படுத்துதல் என்று பெயர்.

சங்க காலம் முதற்கொண்டே தமிழ்ப் பண்பாடு மனித நல நோக்குடையதாக இருந்து வருகிறது. மனிதன் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்கும் வழி காட்டுவதற்கும் உதவி செய்வதற்கும் நிறுவப்படும் சமுதாய நிறுவனமாகும் என்பதைச் சங்க காலச் சான்றோர்கள் நன்கு உணர்ந்து இருந்தனர். இதனால் கற்பனை உலகில் மூழ்கிப் பகற் கனவுகளைக் காண்பதில் காலத்தைக் கழிக்காமல், நடைமுறை உலகிற்குப் பொருந்துவனவற்றை ஆராய்ந்து அறிந்து அவற்றை அடைவதற்குரிய வழிவகைகளில் நாட்டமுடையவர்களாகப் பண்டைத் தமிழர் விளங்கினர். எனவே தான் அவர்கள் இலட்சியக் கனவு காணும் கற்பனையாளர்களாக வாழாமல் எதையும் சாதிக்கும் செயல் வீரர்களாகப் புகழ்பெற்றுள்ளனர். இவற்றைக் கருத்தில் கொண்டே பண்டைத் தமிழ்ப் பண்பாட்டினை, “வெப்ப மண்டலக் கிரேக்க பண்பாடு எனவும், தமிழகத்தை கிரேக்கத்திற்கு முற்பட்ட இந்தியக் கிரேக்கம் எனவும் அறிஞர்கள் பாராட்டியுள்ளனர்”[100]

பண்பாடு இன்னது என உணர்த்த எடுத்தியம்ப இயலாவிடினும் பண்பாட்டால் உலகம் சிறக்கிறது என்ற உண்மையை மறுக்க இயலாது.

**“பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்**
**மண்புக்கு மாய்வது மண்”**[101]

என்ற வள்ளுவரின் வரையறைச் சிந்திக்க வேண்டும்.

**பண்பாடும் நாகரிகமும்**

"பண்பாட்டையும் நாகரிகத்தையும் வெவ்வேறு நிலைகளில் பகுத்துக் காண நாம் முயன்றாலும், புறமெல்லாம் அகவளர்ச்சியின் வெளிப்பாடாக உள்ளது என்பர்"[102] உண்டு. ஏனெனில் பண்பாட்டை நாகரிகம் என்றே திருவள்ளுவர் குறித்தார் எனலாம்.

**"பெயர்க் கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்"** (குறள் – 580)

என்ற குறளின் மூலம் அறியலாம்.

**பண்பாட்டு வளர்ச்சி**

பண்பாடு வளர்ச்சியில் பல படிநிலைகள் உள்ளன. மனிதனுடைய உணர்வுகளும் செயல்களும், பழக்கவழக்கங்களும் பண்பாட்டு வளர்ச்சியுறுதல் ஒரு நிலை. தனி மனிதர்கள் ஒன்றாகக் கூடி வாழ்வதால் உருவாகும் சமூகங்களின் பண்பட்ட முன்னேற்றம் மற்றொரு நிலை. சமூகங்கள் பல சேர்ந்து ஒரு சமுதாயமாகப் பின்னிப் பிணைந்து இயங்கும் பொழுது உருவாகும் வாழ்க்கை நெறி, பழக்கவழக்கங்கள், கலையுணர்வு சிந்தனை முதிர்ச்சி ஆகிய அனைத்தும் இணைந்து ஒரு வகை சமுதாய சிந்தனையாக வெளிப்படுவதே பண்பாடு என்பது மூன்றாவது நிலை. இம்மூவகை நிலைகளிலும் முதன்மை இடம் பெறுவது மனிதனுடைய உள்ளத்து உணர்வுகள். அவை பண்பட்டு பதப்படுத்தப்பட்டு, செம்மை நலமுறுவதே பண்பாடாகும்.

ஒரு குறிப்பிட்ட இனத்தின் உயிர் நிலையாக விளங்கும் பண்பாட்டின் உண்மையான தன்மை. அவ்வின இலக்கியங்கள் வாயிலாகவே வெளிப்படுகின்றது. மக்களுடைய உணர்வுகளுக்கும் எண்ணங்களுக்கும் கொள்ளைகளுக்கும் மொழி வழியாக உருக்கொடுக்கும் ஒப்பற்ற கலை

இலக்கியக் கலையாகையால் ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரின் பண்பாட்டை உணர்ந்து தெளிவதற்கு அவ்வந்நாட்டு இலக்கியங்களே அடிப்படை ஆதாரங்களாக அமைகின்றன.

## குறிஞ்சித் திணைப் பாடல்களில் பண்பாடு

பழந்தமிழர் பண்பாட்டை உள்ளவாறு உணர்ந்து தெளிதற்குப் பொய்யாத் தனிக்கருவூலமாகச் சங்கக் குறிஞ்சித் திணைப்பாடல்கள் விளங்குகின்றன. இப்பாடல்களில் புதையுண்டு கிடக்கும் பழந்தமிழ்ப் பண்பாட்டுக் கருத்துக்களையும், கொள்ளைகளையும், நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும், பழந்தமிழ்ப் பண்பாட்டில் அமைந்துள்ள ஆரியப் பண்பாட்டுக் கூறுகளையும் தக்க சான்றுகளாய் கருத்தூன்றி வெளிக்கொணர்ந்து ஆராய்தலும் மதிப்பிடுதலும் இங்கு வேண்டடத்தக்கதாகும்.

### பண்பாட்டின் இலக்கணம்

நம்மை விரும்பி உறைகின்ற உயிர் படுந்துன்பத்தை உணர்ந்து நடத்தலே பண்பெனப்படும் என்று நற்றிணைக் குறிஞ்சிப் பாடல் கூறுகிறது.

**“நன்மலை நாட பண்பெனப் படுமோ**
**நின்னயத் துறைவி இன்னுயிர் உள்ளாய்”**[103]

என்று தோழி தலைமகனை வினவுகிறாள். தோழியின் வினாவால் ஓர் உண்மை இங்குப் புலப்படும். நம்பி அல்லது விரும்பி வாழ்கின்ற ஓர் உயிர் படுந்துன்பத்தை உணர்ந்து அத்துன்பம் எவ்வுயிர்க்கும் ஏற்படாத வகையில் அன்புடனும் அறிவுடனும் செயல்படுதலே பண்பாடு என்று பழந்தமிழர் கருதினர்.

காதல் துறையில் தோழி ஒருத்தி தலைவனுக்குக் கூறுமுகத்தான் உலகத்தார்க்குப் பண்பாட்டின் உயிர்நிலையைக் குறிஞ்சிப் புலவர் தெளிவுப்படுத்தியுள்ளார் என்பதை மேலே காட்டிய நற்றிணைக் கருத்தால் உணரலாம்.

**நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்**

பண்டை காலந்தொட்டே உணர்வோடு ஒன்றிப் பழகிய நண்பர் கண்ணெதிரே நஞ்சு கலந்து உண்பீராக என்று கொடுத்தாலும் அது நண்பரால் நன்மைக்காகவே தரப்பட்டது என்று நஞ்சு கலந்ததை விரும்பி உண்ணும் பெருந்தமைமையாளரை ‘நனிநாகரிகர்’ என்று நற்றிணைக் குறிஞ்சிப்பாடல் சிறப்பிக்கின்றது.

**“முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்**
**நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்”**[104]

என்று நற்றிணைக் குறிஞ்சிப் பாடல் வரிகள் கூறுகிறது. இவ்வரியில் பழந்தமிழர் பண்பாட்டுக் கொள்கை முழுவதும் இதில் விளக்கம் பெறுகின்றது.

கண்ணெதிரே பழகிய நண்பர் நஞ்சு கலந்து கொடுப்பினும் அதை நன்மைக்காகவே தரப்பட்டது என்று கருதுவதும் விரும்பி உண்பதும் பண்பாட்டின் உச்சநிலை அல்லவா? இக்கருத்தின் உயர்வு கண்ட வள்ளுவப் பெருந்தகையார் திருக்குறளில் இதைப் பொன்போல போற்றி எடுத்தாண்டார். இக்கருத்துத் தமிழ்ச்சமுதாயத்திற்கு மட்டுமின்றி உலகம் முழுமைக்கும் ஒப்பப் பொருந்தும் சிறந்ததோர் பண்பாட்டுக் கருத்தாகும்.

## விருந்தோம்பல்

ஒரு சமுதாயத்தின் உயர்ந்த பண்பாட்டிற்கு அளவுகோலாக இருப்பது விருந்தோம்பல் தான். இவ்விருந்தோம்பலில் சிறந்து விளங்கியவர்கள் சங்க கால மக்கள் என்பதை,

**"நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்**

**உண்டி கொடுத்தோ ருயிர் கொடுத்தோரே"**[106]

என்று புறநானூறு கூறும். இதனையே மணிமேகலை,

**"ஆற்றா மக்கள் அரும்பசி களைவோர்**

**மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை**

**மண்டினி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தேரே"**[107]

என்றும் வலியுறுத்தும்.

குறவர் இன மக்கள் விருந்தோம்பல் பண்பாட்டினை இன்றியமையா கடமையாகக் கொண்டிருந்தனர். அவர்கள் இல்லங்கள் தோறும் விருந்தோம்பலை மகிழ்ச்சியுடன் மேற்கொண்டு வாழ்ந்தனர்.

**"வருவழி வன்பலர்ப் பேணிக் கோவலர்**

**மடிவிடைப் பூட்டிய குழா அயதீம்புளி**

**செவியடை தீரத் தேக்கிலைப் பருக்கும்"**[108]

என அகநானூறுப் பாடல் புலப்படுத்துகிறது. விருந்தினர்கள் இரவு நேரத்தில் வந்தால் கூட பெண்கள் மனம் நோகாமல் வரவேற்று உபசரித்தப் பாங்கினை,

**"அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும்"**[109]

என்ற நற்றிணைப் பாடல் வாயிலாக புலப்படுகிறது.

இவ்வாறு சங்க கால மக்கள் உழைப்போராகவும், ஆற வைத்து உண்போராகவும் இருப்பினும் தம் இல்லம் நோக்கி வரும் விருந்தினரை எக்காலத்தும் விருந்தயரும் பண்பாட்டை உணர முடிகிறது. இவர்கள் செல்வம் இன்றி வறுமையில் உழன்றாலும், இல்லறத்தின் கூறாகிய விருந்தோம்பலில் வறுமையிலா உள்ளத்தைக் காண முடிகிறது.

**சான்றோர் இயல்பு**

பண்பாட்டில் உயர்ந்து நின்ற பெரியோர்களைப் பழந்தமிழர் சான்றோர் என்று போற்றி அவர்தம் இயல்பினை விளக்குமுகத்தான் பண்பாடு பற்றிய கருத்துக்களையும் எண்ணங்களையும் வெளியிட்டனர். இக்கருத்தைச் சங்கக் குறிஞ்சிப் பாடல்கள் வழித் தக்க சான்றுகள் காட்டி ஆராயலாம்.

பண்புடைய சான்றோர் தமக்குற்ற துன்பத்தைப் பெரியதாகக் கருதாமல் தாங்கிக் கொள்வர். பிறர்க்குற்ற துன்பத்தையே பெரியதாகக் கருதி அது தமக்கு வந்ததாகக் கொண்டு விலக்க முயல்வர்.

**“பிறருறு விழுமம் பிறரும் நோப**

**தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம்”**[110]

என்று வருகின்ற அகநானூற்றுக் குறிஞ்சிப் பாடல் வரிகளால் இவ்வுண்மை பெறப்படும்.

பழகியவருடைய துன்பங்கண்டு அருள்பாவித்தல் பண்புடைய அன்புச் சான்றோர்க்கு இயைந்ததோர் நல்ல இயல்பு என்பதைத் தங்காற் பொற்கொல்லனார் என்ற குறிஞ்சிப் புலவர் காட்டியுள்ளார்.

**“புணர்ந்தோர் புன்கண் அருளாலும் உணர்ந்தோர்க்**

**கொத்தன்று மன்னால்..................”**[111]

என்ற அகநானூறு வரிகளால் இதை அறியலாம்.

தீமை கண்டார் திறத்தும் பண்பட்டாளராகிய பெரியோர் பொறுத்திருப்பார் என்ற குறிஞ்சிப் புலவர் நற்றிணைக் குறிஞ்சிப்பாட்டில் காட்டியுள்ளார்.

**“தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்**

**தாமறிந் துணர்க வென்ப மாதோ”**[112]

என்ற பாடலில் அறியலாம். தீமை செய்தாரையும் பொறுத்துக் கொள்ளும் மனப்பக்குவமுடைமை பண்பாடு என்ற தமிழ்ச் சமுதாயம் கருதியது. அப்பண்புடைய பெரியோரைப் பண்பாட்டின் உருவமாகக் கொள்ளலாம்.

புகழும் முன்பு நாணுபவர் யாரோ அவரே பண்புடையச் சான்றோர் என்றும் அத்தகையோர் பழிச்சொல்லைப் பொறுத்துக் கொள்வர் என்றும் குறிஞ்சிப் புலவர் குறித்துள்ளார்.

**“........................................ சான்றோர்**

**புகழு முன்னர் நாணுப**

**பழியாங் கொள்பவோ காணுங் காலே”**[113]

என்ற பாடல் புலப்படுத்தும்.

தம் புகழ் கெட்டபோது தலைசாய்ந்து நாணுபவரே பண்புடையச் சான்றோர். அவர் பழிச் சொல்லைப் பொறார் என்பதால் அத்தகைய பண்புடைமையின் வெளிப்பாடே பண்பாடு என்று பழந்தமிழர் கொண்டனர்.

### காதற்களத்தில் பண்புடைமை

காதல் ஒழுக்கத்தில் ஈடுபட்டாலும் சிறந்த பண்புகளை இழந்து விடக்கூடாது என்பதும் உயர்ந்த பண்புகளின் உறைவிடமே பண்பாடு என்பதும் பழந்தமிழர் கருத்தாக இருந்தது.

**“நயனும் நண்பும் நாணும்நன் குடைமையும்**

**பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்**

**நும்மினும் உடையேன்......................”**[114]

என்ற நற்றிணையாலும்,

**“ஒன்று இரப்பான்போல் எளிவந்துஞ் சொல்லும் உலகம்**

**புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்**

**வல்லாரை வழிபட் பொன்றறிந் தான்போல்**

**நல்லார்கட் டோன்றும் அடக்கமுடையன்**

**இல்லார் புன்கண் ஈகையின் தணிக்க**

**வல்லான் போல்வதோர் வன்மையு முடையன்**

**அன்னான் ஒருவன் தனி ஆண்டகை...............”**[115]

என்ற குறிஞ்சிக் கலியாலும்,

**“அமிழ்தத் தன்ன அம்தீம் கிளவி**

**அன்ன இனியோன் குணனும் இன்ன”**[116]

என்ற குறுந்தொகையாலும் அறியலாம்.

காதற் களத்தில் ஆண் - பெண் இரு பாலரும் பண்பின் உறைவிடமாகத் திகழ்தலே பண்பாடு என்று பழந்தமிழ்ச் சான்றோர் கொண்டமை விளங்கும்.

“இற்றை நாளைவிடக் காதற் களத்தில் இருபாலரின் நடத்தையும் மிகவும் பண்புடையதாகப் பழங்காலத் தமிழர்களிடம் காணப்பட்டது என்று அறிஞர் கூறுவர்”[117]

## நட்பும் பண்பாடும்

நண்பர்கள் நம்மை வெறுத்தாலும் நாம் அவர்களை வெறுக்கக் கூடாது என்று பழந்தமிழர் கருதினர். இக்கருத்துத் தமிழர் பண்பாட்டில் பதிந்துவிட்ட ஒன்று.

மனிதன் வாழ்வாங்கு வாழ உதவும் உறவுகளுள் தலையாதது நட்பு. நினைப்பதும், உணர்வதும், நெகிழ்வதும் போல பார்ப்பதும், பழகுவதும், நட்புக் கொள்வதும், படிநிலை வளர்ச்சியாகும். வாழ்க்கையில் வாழ்வாங்கு வாழ்ந்து செயற்கரிய செயலை செய்வதற்கு நட்பே ஆதாரமாகும். எனவே தான் வள்ளுவரும்,

**"செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்**

**வினைக்கரிய லாவுள காப்பு"**

என்று கூறினார். நான் என்னும் பகுதியின் அடியாகப் பிறந்த தொழிற்பெயரே 'நட்பு' என்பதாகும். உள்ளத்தால் ஒன்றுபடுதலே 'நட்பு' என்னும் சொல் குறிக்கின்றது.

தலைமகள் தன் காதலனைக் காணப் பெறாமையால் மெலிவுற்றாள். இதனைக் கண்ட தோழி களவினை வெளிப்படுத்தி தலைவியின் துயரத்தைப் போக்குகிறாள்.

**"நெய்தல் நறுமலர் செருந்தியொரு விரை**

**பெருந் துறைக் கண்டு இவள் அணங்கியோனே"**[118]

என்ற பாடல் தெளிவுப்படுத்துகிறது. இதன் மூலம் தோழியானவள் தலைவியின் மீது மிகுந்த அன்புடையவள் என்பதையும் இருவருக்குள்ள நட்பு எத்தகையது என்பதையும் அறிய முடிகிறது.

**"நட்புணர்வு இல்லா நயனி லோர்நட்பு**

**அன்ன ஆகுக என்னான்................."**[119]

என்ற பாடல் மூலம் பகைவர்களை வெறுக்கக் கூடாது என்ற உண்மைப் புலப்படுகிறது.

நண்பர்கள் நல்காவிடினும் நயனில செய்யினும் அவர்கள் உள்ளமறிந்து நடத்தலே உயர்ந்த பண்பாடு என்று பண்டை தமிழ்ச் சமுதாயம் கருதியது.

**“நல்கா யாயினும் நயனில செய்யினும்**

**நின்வழிப் படூஉமென் தோழி”**[120]

என்று பரணர் தோழி கூற்றாகத் தெரிவிக்கும் கருத்தால் இவ்வுண்மை விளங்கும்.

பெரியோர் ஆராய்ந்து நட்புக் கொள்வர். நட்புக் கொண்டவுடன் நண்பர்களின் குணஞ்செயல்களை ஆராய்ந்து பார்க்கமாட்டார் என்று கபிலர் நற்றிணையில் எடுத்துக்காட்டுவது தமிழர்களின் சிறந்த பண்பாட்டைக் காட்டுவதாகும்.

**“............................ பெரியோர்**

**நாடி நட்பி னல்லது**

**நட்டு நாடார் ஒட்டியோர் திறத்தே”**[121]

என்பதால் இவ்வுண்மை விளங்கும்.

**கடப்பாட்டாளன் உடைப்பொருள்**

நில்லா உலகில் நிலையான புகழை நிலைநாட்ட விழையும் ஒப்புரவாளன் கடப்பாட்டாளன் எனப்பட்டான். இவ்வொப்புரவாளனிடம் பொருள் நிலையாகக் தங்காது. கடப்பாட்டாளனிடம் பொருள் தங்காது மறைவது போன்று தலைவியின் பசலையும் தங்குதற்குரியதன்று என்று தோழி கூறினாள்.

**“நில்லா மையே நிலையிற் றாகலின்**

**நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்**

**கடப்பாட் டாளன் உடைப்பொருள் போலத்**

**தங்குதற் குரிய தன்றுநின்**

**அங்கலுழ் மேனிப் பாய பசப்பே”**[122]

என்று குறுந்தொகை பாடல் கூறுகிறது. இப்பாடலால் ஈந்து இசைபட வாழ்தலே உயர்ந்த வாழ்வு என்ற பழந்தமிழர் பண்பாட்டுக் கொள்கையை

நக்கீரனார் கடப்பாட்டாளன் உடைப்பொருள் கொண்டு உலகிற்கு உணர்த்துவாராயினர் என்பது தெரிகின்றது.

**பகுத்துண்டலே பண்பாடு**

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதலைச் சிறந்த பண்பாகப் பழந்தமிழர் கருதினர். சங்கக் குறிஞ்சிப் பாடல்களில் இக்கொள்கை சிறந்த பண்பாட்டிற்குரிய அடையாளமாகச் சுட்டப்படுகின்றது.

**"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாந் தலை"**

கானவன் முள்ளம் பன்றியின் கொழுவிய தசைகளைக் கொணர்ந்து தேங்கமழ் கதுப்பிற் கொடிச்சியிடம் கொடுத்தான். அதை அவள் மகிழ்ச்சியுடன் வாங்கிக் காந்தளஞ்சிறு குடியினர் பலர்க்கும் பகுத்துக் கொடுத்து மகிழ்ந்தாள்.

**"கானவன் எய்த முழவுமான் கொழுங்குறை**
**தேங்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழந்துகொடு**
**காந்தளஞ் சிறுகுடி பகுக்கும்**
**ஓங்குமலை நாடன்......................."**[123]

என்ற பாடல் மூலம் அறியலாம்.

இப்பகுதியல் நல்விளக்கனார் குறிஞ்சிக் குறவர்களின் பண்பட்ட செயலைக் காட்டிப் பழந்தமிழர் பண்பாட்டுக் கொள்கைக்கு உருவம் கொடுத்துள்ளார். முயல் தீண்டிய பொருளைப் பலர்க்கும் பகுத்துக் கொடுத்து அதனால் மகிழ்வு பெறுதலே தமிழர்தம் பண்பாட்டுக் கொள்கை என்பதை இப்புலவர் நன்கு காட்டியுள்ளார். இதனால்தான் அவர் நல்விளக்கனார் என்ற சிறப்புப் பெயர் பெற்றார் போலும்.

கபிலரும் இக்கொள்கைக்குச் சீரிய முறையில் உருவம் கொடுத்திருக்கிறார். “கானவன் வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றைப் புனையிருங் கதுப்பின் மனைவியிடம் கொடுத்தான் என்றும் அத்தலைவி அப்பன்றியின் ஏற்றை அறுத்துச் சுற்றத்தார் வாழும் குடிகள் தோறும் சென்று பகுத்துக் கொடுத்தான் என்றும் நற்றிணையில் கபிலர் குறிப்பிடுகிறது இங்கு நோக்கத்தக்கதாகும்”[123]

கபிலர் ‘குடி முறை பகுக்கும்’ என்று குறிப்பிட்டிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கதாகும். தாம் பெற்ற பயனைப் பிறர் வந்து வாங்கிக் கொள்வார் என்று நினையாது மற்றவர் இருக்குமிடம் தேடிச் சென்று அவர்களுக்குரிய பங்கைப் பிரித்துக் கொடுத்து, அவர்கள் அதை உண்டு மகிழ அம்மகிழ்ச்சியிலே பேரின்பம் காணுதல் தமிழர்தம் உயர்ந்த பண்பாட்டுக் கொள்கை ஆகும் என்ற உண்மை புலப்படுகிறது.

### சான்றோர் போற்றல்

பலமுறை தாமறிந்த சான்றோரை கண்டபோது அச்சான்றோர் வருவதற்கு முன்னே சென்று அவர்களை எதிர் கொண்டு அழைத்துச் சிறப்புச் செய்தல் மக்களின் கடமையாகும் என்று கருவூர்க்கதப்பிள்ளை என்ற குறிஞ்சிப் புலவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

காந்தள் கொழுமுகை மலர்வதற்கு முன்பு வண்டுகள் தாமே சென்று அவற்றைக் கிண்டி மலரச் செய்யும். அதேபோலச் சான்றோர் பக்கத்தில வரட்டும் என்று காத்திருத்தல் பண்பாடாகாது. அவர்கள் நம் இல்லத்தை நோக்கி வருவதற்கு முன்னரே ஓடோடிச் சென்று எதிர்கொண்டு மகிழ்வுடன் வரவேற்றல் சீரிய பண்பாட்டின் அறிகுறியல்லவா? இதனை,

**“காந்தளங் கொழுமுகை காவல் செல்லாது**
**வண்டுவாய் திறக்கும் பொழுதிற் பண்டும்**
**தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட**
**கடனறி மாக்கள் போல.............”**[124]

என்ற குறுந்தொகைப் பாடல் விளம்புகின்றது.

செம்மைச் சான்றோரை மதித்துப் போற்றுதல் கடமை என்று கருதிய பழந்தமிழர் பண்பாட்டின் உச்சநிலையில் இருந்தனர் என்று கருதுதல் சாலச் சிறந்தது.

## பிற கொள்கைகள்

“சிறியதோர் நன்றி செய்தாரையும் மறவாது மதித்துப் போற்ற வேண்டுமென்ற தமிழர் பண்பாட்டுக் கொள்கை நற்றிணையில் வலியுறுத்தப்பட்டுள்ளது”[125]

மாசற்ற அன்புடையரால் செய்யப்படும் தீமையும் இன்பம் பயக்கவல்லது என்றும் அவ்வின்பத்திற்குப் புத்தேள் நாட்டு இன்பமும் ஈடாகாது என்பதும் தமிழர் பண்பாட்டுக் கொள்கையாக அமைந்திருந்தது.

**“இனிய னாகலி வினத்தி னியன்ற**
**இன்னா மையிறு மினிதோ**
**இனிதெனப் படூஉம் புத்தே னாடே”**[126]

என்று கபிலர் காட்டுதல் காணத்தகும்.

இளைய பெண்கள் விளையாட்டாயமொடு ஓரையாடாது வீட்டில் முடங்கிக் கிடத்தல் அறனுமன்று ஆக்கமும் தேயுமென்பது பழந்தமிழர் கொள்கையாக இருந்தது.

## அரசியலிலும் பண்பாடு போற்றல்

பண்பாடு அருகி நிற்கும் அரசியலிலும் பழந்தமிழா் பண்பாடு போற்றினார் என்பதைக் குறிஞ்சிப் பாடல்கள் காட்டுகின்றன.

அரசியலில் பிணங்கி மாறுபட்டு நிற்கும் பகைவர்களைச் சார்ந்து செய்விக்கும் செயலை பண்பாட்டின் அறிகுறியாகவே பழந்தமிழா் எண்ணினர். அச்செயலை மேற்கொள்ளும் பண்பாளரைச் சான்றோர் என்று கொண்டனர்.

**"இகல்மீக் கடவு மிருபெரு வேந்தர்**

**வினையிடை நின்ற சான்றோர் போல"**[127]

என்றும்,

**"வலிமிகு வெகுளியான் வாளுற்ற மன்னரை**

**நயன்நாடி நட்பாக்கும் வினைவர்போல்"**[128]

என்றும் வருகின்ற பகுதிகள் இவ்வுண்மையை உணர்த்தும்.

**"அறநெறி பிழையாத் திறனறி மன்னர்"**[129]

என்று நாடாளுந் தலைவனுக்கு இலக்கணம் வகுத்துள்ளார் போலும்,

**"கடனறி மாக்கள் குடைநிழல் போலப்**

**பெருந்தண் என்ற மரநிழல்.........."**[130]

என்று நல்லாட்சிக்கு உவமை கூறும் போதும் பழந்தமிழா் அரசியலிலும், பண்பாடு போற்றிய பான்மை இங்குப் புலப்படுகிறது.

## நம்பிக்கைகள்

சமுதாய நோக்கில் பண்பாட்டை ஆராயும் போது மக்கள் மன்றத்தில் நிலவிய சமய சமுதாய நம்பிக்கைகளையும் காய்தல் உவத்தலின்றி ஆராய்தல் கடனாகும்.

மனித வாழ்க்கையில் நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் தவிர்க்கமுடியாத இடத்தைப் பெறுகின்றன. இவையனைத்தும் மனிதன் தோன்றிய காலத்திலேயே தோன்றி விட்டன என்று கூறுவது தவறாகும். வாழ்க்கையிலிருந்து கிடைக்கும் அனுபவங்களே மனிதனுக்குப் பழக்க வழக்கங்களையும், நம்பிக்கைகளையும், சடங்குகளையும் தோற்று வித்திருக்கின்றன.

மனிதன் வானத்தை எண்ணிப் பார்த்து வியப்பில் ஆழ்ந்தான். இடியோசையைக் கேட்டு நடுங்கினான். மின்னலின் ஒளியைக் கண்டு அஞ்சினான். அதிகமான மழையால் அலைக்கழிக்கப்பட்டுத் துன்புற்றான். இவ்வனுபவங்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து அவனுக்குள் ஒரு முடிவை உண்டாக்கின. அம்முடிவுகளின் விளைவாகச் சில பழக்க வழக்கங்களையும், நம்பிக்கைகளையும் அவன் மேற்கொண்டான்.

பழக்கவழக்கங்களின் வெளிப்பாடே சடங்குகளாகக் காட்சியளிக்கின்றன. சடங்குகள் என்பவை நிகழ்ச்சிகள் என்று கொண்டால் அந்த நிகழ்ச்சிகளுக்குப் பின்னால் மனிதனுடைய இலட்சியங்களும், அச்சங்களும், வாழ்க்கை அனுபவங்களும் பொதிந்திருக்கின்றன என்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது.

“நம்பிக்கைகளே காலங்காலமாக தொடர்ந்து வருகிறபோது அவை ஒரு மரபை உருவாக்கி விடுகின்றன. இம்மரபுகளெல்லாம் ஒன்றாகச் சேர்கின்ற போது பண்பாடு என்ற பெரிய தளம் அமைகின்றது”[131] என்பர்.

“இந்தப் பண்பாட்டின் அடிப்படைக் கூறாகிய நம்பிக்கைகள் உணங்கிப் போனால் அது பண்பாட்டின் நலிவிற்கு அறிகுறியாகும்.”[132] என்று இரா. கிருட்டிணன் கூறுவது இங்கு எண்ணத்தக்கதாகும்.

தனி மனித பழக்கவழக்கங்கள் என்பது அடிக்கடி மாறக்கூடிய தன்மையைப் பெற்றிருக்கின்றன. ஆனால் சமுதாயப் பழக்கவழக்கங்களும்,

நம்பிக்கைகளும் அடிக்கடி மாறக்கூடியனவாக இல்லை. காலப்போக்கில் ஏற்பட்ட முதிர்ச்சியால் உருவானவையாகும்.

தனி மனிதனுடைய பண்பாட்டை விடவும் சமுதாயப் பண்பாடு என்பது ஒரு நீண்ட கால மரபைப் பிரதிபலிப்பதாக இருப்பதால் சமுதாயத்தின் தரத்தை நிர்ணயிக்க அது பெரிதும் உதவுகிறது.

எல்லா இனங்களிடத்தும் பல நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. அவற்றைப் பின்பற்றி இன்று வரையில் ஆற்றலோடு வாழ்ந்து வருவது வியப்புக்குரியதாகும். நன்மையின்பால் உள்ள ஆர்வமும் தீமையில்பால் உள்ள அச்சமும் பெரும்பான்மையான நம்பிக்கைகட்கு அடிப்படை எனலாம். பழந்தமிழரிடத்து நிலவிய மூட நம்பிக்கைகளும் அவற்றினடியாகப் பிறந்த பழக்கவழக்கங்களும் சங்க நூல்களுள் விரவிக் கிடக்கின்றன.

தமிழ் மக்கள் தாங்கள் வாழும் இடத்தாலும் பிற சூழ்நிலைகளாலும் சிற்சில வேறுபட்ட பழக்கங்களை கொண்டிருந்தனரேனும், எல்லா மக்களிடத்திலும் பொதுப்படையாகக் காணப்பட்ட நிகழ்ச்சிகளும் பலப்பல. ஒரு சில நிகழ்ச்சிகள் பரம்பரை வழக்கமாக வழிவழி வந்து சடங்குகளாகவும் மாறி விட்டன. “விழுப்புண் படாது இறந்தாரின் மார்பை வாளால் பிளந்து அடக்கம் செய்ததாகத் தெரியவருகின்றது. இங்ஙனமாக வரும் சடங்கு போன்றனவெல்லாம் சமுதாயத்தில் மக்கள்பால் வேரூன்றிவிட்ட சிற்சில நம்பிக்கைகளின் விளைவேயாகும்”[133]

குறிஞ்சி நில மக்களின் வாழ்க்கையில் பல நம்பிக்கைகளும், சடங்குகளும் இடம் பெற்றுள்ளன. காலையில் குணதிசைக்கண் தனது செங்கதிர் பரப்பி உலகத்து இருளையெல்லாம் அகற்றி எழுகின்ற ஞாயிற்றை வணங்கி உள்ளனர். சங்க கால மக்கள் தங்கள் தினைபுனத்தில்

விளைந்த முதல் கதிரை கடவுளுக்கு படைத்த பின்னே உண்பர். அக்கடவுளைக் “கடியன் கடவுள்” என்ற பெயரால் அழைத்தனர்.

சங்கக் குறிஞ்சிப் பாடல்கள் பழந்தமிழ்ச் சமுதாயத்தில் நிலவிய சமய சமுதாய நம்பிக்கைகளைக் கண்ணாடி போல காட்டுகின்றன. இக்குறிஞ்சிப் பாடல்களிலிருந்து தக்க சான்றுகளால் இவ்வுண்மை நிலைநாட்டப்படுகிறது.

மலையிலே மக்களை அச்சுறுத்தும் தெய்வங்கள் உறைகின்றன என்று பண்டைத் தமிழர்கள் மலையில் மழை பெய்ய வேண்டுமென்று அவைகளுக்கு வழிபாடு செய்து, பலி கொடுத்துத் தெய்வங்களுக்குப் படைத்த பொருள்களை நீர்வளாவிய பின்பு உண்டனர். இதற்குக் குறிஞ்சிப் பாக்களின் சான்றுகள் உள்ளன.

“ஆமானின் நெஞ்சிலே அம்பு பாயாது குறிதவறிச் சென்றதற்கு மலையுறை தெய்வமாகிய அணங்கே காரணம் என்று நம்பிய கானவன் தன் சுற்றத்தாருடன் சென்று அத்தெய்வத்தை வணங்கிப் பலி கொடுத்த செய்தி நற்றிணைக் குறிஞ்சிப் பாட்டில் இடம் பெற்றுள்ளது”[134] இதனால் பண்டைத் தமிழர் மலையுறை தெய்வங்களுக்கு அஞ்சி வழிபாடு இயற்றிப் பலி கொடுக்கும் நம்பிக்கையுடையவராக இருந்தனர் என்பதை அறியலாம்.

**“மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉம்**
**அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே”**[135]

என்ற கலித்தொகையாலும் இப்பழக்கத்தை அறியலாம்.

பலிகொள்ளும் அணங்கு நமக்கு ஊறு செய்யுமென்ற அச்சம் மக்கள் மன்றத்தில் நிலவியது என்பதையும் மேலே காட்டிய கலித்தொகை குறிப்பாகக் காட்டுகிறது.

“பாழி என்ற பக்கமலையைக் கடவுள் காத்தலின் அது பிறரால் தெறுதற்கு அரிதாக விளங்கியது என்றும் அச்சம் நிறைந்த அப்பக்க

மலையில் வேற்குடி மக்கள் அருங்கல வெறுகிகையை மறைத்து வைத்திருந்தார்கள் என்றும், மக்கள் மன்றத்தில் நிலவிய நம்பிக்கையை பரணர் அகநானூற்றுக் குறிஞ்சிப் பாடலில் அழகுறக் காட்டுகின்றார்"[136]

"ஆய் நன்னாட்டு அணங்குடைச் சிலம்பில் கவிரம் என்ற பக்கமலை ஒன்று இருந்தது. அம்மலைச் சுனையில் சுரர மகளிர் வாழ்ந்தனர் என்றும், அம்மலை அச்சம் நிலைந்த தாய் இருந்தது என்றும் பண்டைத் தமிழர் நம்பினர்"[137]

கடவுள் காக்கும் கற்சுனையிலிருந்து கொய்யாமல் விடப்பட்டிருந்த குவளை மலரொடு காந்தளின் குருதி ஒண்பூவையுஞ் சூடி மலையருவியையே இனிய வாச்சியமாகக் கொண்டு சூரர மகளிர் ஆடுவர் என்றதோர் நம்பிக்கை பழந்தமிழர் நாட்டில் நிலவியது. இதனை,

**"கடவுட் கற்சுனை அடையிறந் தவிழ்ந்த**
**பறியாக் குவளை மலரொடு காந்தள்**
**பெருவரை யடுக்கம் பொறப்ச் சூர்மகள்**
**அருவி யின்னியத் தாடு நாடன்"**[138]

என்ற பாடலால் அறியலாம்.

மலைநாட்டினைச் 'சுருட வெற்ப'[139] என்றும், மலையை 'அணங்குடை நெடுவரை'[140] என்றும் பண்டை புலவர்கள் பாட்டிசைத் திருப்பதும் மலையில் தெய்வங்கள் வாழ்கின்றன என்ற பழந்தமிழர் நம்பிக்கையை உறுதிப்படுத்தும். மரத்திலும் தெய்வங்கள் உறைந்தவென்று பழந்தமிழர் நம்பினர். இந்நம்பிக்கையைப் பெருந்தேவனார் என்ற குறிஞ்சிப் புலவர் எடுத்துக்காட்டியுள்ளார்.

**"எம்மூர் வாயில் ஒண்டுறைத் தடைஇய**
**கடவுள் முதுமரத்து............"**[141]

என்ற நற்றிணை வரிகளால் இவ்வுண்மை புலப்படும்.

மன்றத்து மரத்தில் உறையும் முருகக் கடவுள் கொடியவரை ஒறுக்கும் என்று பழந்தமிழர் நம்பியதைக் கபிலர் காட்டியுள்ளார்.

**"மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்**

**கொடியோர்த் தெறூஉம் என்ப யாவதும்**

**கொடியர் அல்லரெங் குன்றுகெழு நாடர்"**[142]

என்ற தலைமகள் தெய்வத்திற்குப் பராயதாகக் கபிலர் இந்நம்பிக்கையை எடுத்துக் கூறியுள்ளார்.

மலைகளிலும் மரங்களிலும் அச்சுறுத்தும் தெய்வங்களும் கடவுள்களும் உறைகின்றன என்பதோர் நம்பிக்கை இன்றும் தமிழ்நாட்டுச் சிற்றூர்ப் பகுதிகளில் நிலவி வருகின்றது. இந்நம்பிக்கை வழிவழியாக வருகின்ற ஒன்றாகும்.

இரவில் பேய்கள் கால் கிளர்ந்து திரிதருமென்ற நம்பிக்கையும் பழந்தமிழ் நாட்டிலிருந்ததை ஆலம் பேரிசாத்தனார் என்ற குறிஞ்சிப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

கடவுளை பேணி இரந்தால் மகட்பேறு வாய்க்கப்பெறும் என்றதோர் நம்பிக்கை பழந்தமிழகத்தில் மக்களிடையே நிலவியது.

**"குன்றக் குறவன் கடவுட் பேணி**

**இரந்தனன் பெற்ற வெல்வளைக் குறுமகள்"**[143]

இந்த நம்பிக்கை பண்டுதொட்டு இன்று வரை வழிவழியாகத் தமிழ் மக்களிடம் இருந்து வருகின்றது. பிள்ளைப் பேறு இல்லாவிடில் கடவுளை வேண்டிப் பெறலாம் என்ற நம்பிக்கை மக்கள் மனத்தில் வேரூன்றி விட்டது.

பால்வரை தெய்வம் கூட்டுவிக்கக் காதல் உருவாகின்றது என்ற அசைக்க முடியாத நம்பிக்கை பழந்தமிழகத்தில் வேரூன்றியிருந்தது என்பதைக் குறிஞ்சிப் பாடல்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

**“பால்வரைந் தமைத்த லல்லது அவர்வயிற்**

**சால்பளந் தறிதற்கு யாஅம் யாரோ”**[144]

என்று செவிலிக்குத் தோழி கூறுவதாகப் பேரிசாத்தனார் பழந்தமிழர் கொண்ட பால்வரை தெய்வ நம்பிக்கையைத் தெரிவித்துள்ளார்.

“கயம் நாடு யானைக்கு அருவி தந்த கொறுக்கச்சி கவளமாகப் பயன்படுவதைப் போலப் பால்வரை தெய்வம் தந்த காதற் கேண்மையைச் சுவைத்தாள் தலைவி என்றார் கருவூர்கிழார்”[145]

“கலை தொட்டு இழுக்கிய பூநாறு பலவின் கனியை வரையிழி அருவியானது ஊரார் நீருண்ணும் துறையில் கொண்டு வந்து சேர்த்தது போன்று பால்வரை தெய்வம் தலைவியைத் தலைவனுடன் கூட்டுவித்தது என்று குறுந்தொகைக் குறிஞ்சிப் பாடல் குறிப்பாகக் காட்டுகின்றது”[146]

பால்வரைத் தெய்வம் கூட்டுவிக்க காதல் உறவு உலகமே நிலை பிறழ்ந்தாலும் மாறாது என்று பழந்தமிழர் உறுதியாக நம்பினர் என்பதையும் குறிஞ்சிப் பாடல் காட்டுகின்றது.

**“நிலம்புடை பெயரினும் நீரிதிப் பிறழினும்**

**இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்**

**வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வை அஞ்சிக்**

**கேடெவன் உடைத்தோ................”**[147]

என்ற பாடல் இவ்வுண்மை பெறப்படும்.

பன்றியும் பகுவாய்ப் பல்லியின் நன்னிமித்தம் பார்த்துக் குறுகும் என்றார் ஈழத்துப்பூதந்தேவனார். மக்களைச் பற்றிச் சொல்ல

வேண்டியதில்லை. பழந்தமிழா் பல்லி சொல்லில் நிமித்தம் பாா்ப்பதில் அழுத்தமான நம்பிக்கையுடனிருந்தனா் என்பது விளங்கும்.

**“பகுவாய்ப் பல்லிப் பாபோர்த்துக் குறுகும்**

**புருவைப் பன்றி வருதிறம் நோக்குக்**

**கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீ இய”[148]**

இன்றும் தமிழ் மக்கள் பல்லி சொல்லில் நம்பிக்கை வைத்திருப்பதால் இந்நம்பிக்கை வழிவழியாகத் தமிழரிடம் வந்தது எனலாம்.

“மகளிா்க்கு இடக்கண் துடித்தால் நன்னிமித்தம், வயைல்கள் செறிந்தால் நன்னிமித்தம் என்று பண்டைத் தமிழா்கள் நம்பினா் என்பதை குறிஞ்சிப் பாடல் ஒன்று குறிப்பிடுகின்றன”[149]

இவை மட்டுமின்றி “மனையின் நொச்சியில் உள்ள குயிலின் கூவல், குருக்கள் விசும்பில் எழுந்து பறத்தல், வண்டுகள் புதரில் சூழ்ந்து ஊதுதல், முன்கை வளையும் தோள் வளையும் இறுகுதல், இடக்கண் ஆடுதல், ஆயரது குழல் ஒலி இவையெல்லாம் நன்னிமித்தங்களாகக் கருதப்பட்டன”[150]

**பழக்கவழக்கங்கள்**

“சங்க காலத் தமிழ் மக்களுக்கேயுரிய சிறப்புமிகு பழக்கவழக்கங்கள் நம் கருத்தைக் கவா்கின்றன. அவற்றுள் சில இன்று வரையில் தமிழரிடையே வழக்கில் இருந்து வருகின்றன. அவை பிற இந்திய மக்களிடையே காணப் பெறாதனவாக உள்ளது அல்லது தமிழ் மக்களிடம் இருந்து பிற இந்திய மக்கள் கற்றுக் கொண்டனவாகத் தோன்றுகின்றன”[151]

‘பழக்கம்’ என்ற சொல் பழகுதல் அல்லது பயிற்சி பெறுதல் என்கிற பொருளில் வழங்கப்படுகிறது. ஒன்றைக் கற்றுக் கொள்வதையே பழக்கம் என்று சொல்வதுண்டு. தனி மனிதா்களிடம் இயற்கையாக வந்த இயல்பு

எனலாம். பழக்கத்தினுடைய தொடர்ந்த நிலையையே ‘வழக்கம்’ என்று குறிப்பிடுகிறோம். வழக்கம் தனிமனிதனை விடவும் அதிகமாகச் சமூகத்தைச் சார்ந்ததாக அமைந்து விடுகிறது. இதைத்தான் சமூகவியலார்,

“சமுதாயத்தின் எல்லாத் தரப்பு மக்களாலும் ஒத்துக் கொள்ளப்பட்ட எழுதாச் சட்டங்கள் பழக்கவழக்கங்கள் என்றால் அது மிகையாகாது”[152] என்றும்,

“சமுதாயத்தின் வழி விரும்பப் படுதலும் எண்ணப்படுதலும் நடைபெறும் பொழுது ஆங்குச் செயல்படுகின்றன. சமூகத்தவர்கள், சமுதாயத்தவர் ஆகிறார்கள். இந்த உணர்வுகளே நாளடைவில் பழக்கவழக்கங்களாக மாறுகின்றன. இவை சமூகத்தின் இயல்புகளில் சிறப்பு வாய்ந்தவை. இதில் பழக்கம் சமூகத்தை இயங்கச் செய்யும் சக்கரம்”[153] என்றும் கூறுவர். ஒரு சமூகத்தின் இன்றியமையாத சக்கரமாக பழக்கவழக்கத்தை குறிப்பிடுவது இங்கு நோக்கத்தக்கதாகும்.

தனி மனிதனுடைய செயலைப் ‘பழக்கம்’ என்றும் சமூகத்தினுடைய வழக்கமே நாளடைவில் வளர்ச்சிப் பெற்றுப் ‘பண்பாடு’ என்று வழங்கப்படுகிறது. இதையே,

“பழக்கவழக்கம் பண்பாடுகளின் பொதுமையினுள் சமுதாயம் இயங்குகிறது”[154] என்று உறுதிப்படுத்துவர்.

பழக்கவழக்கத்தின் முக்கியமான தகுதிகளாக சிலவற்றை ஆய்வாளர்கள் கீழ்க்காணுமாறு சுட்டிக் காட்டுகின்றனர்.

1.சரியான வழி முறையில் அமைத்தல்

2.சமுதாயப் பண்பாக நிலை பெறுதல்

3.சரி, தவறு என்று பிரித்துப் பார்த்து உணர்த்துதல்”[155]

ஆகிய மூன்று இயல்புகள் பழக்கவழக்கத்தை உருவாக்குகின்றன என்று மேலை நாட்டார் குறிப்பிடுகின்றனர்.

சங்கக் குறிஞ்சிப் பாடல்களின் வழியாக அறியலாகும் பழந்தமிழர் பழக்கவழக்கங்களைக் கருத்தூன்றி நோக்குவதாக இது அமைகின்றது.

இல்லுறை தெய்வத்தை வணங்குவதும் அதற்குப் பலி கொடுப்பதும் பழந்தமிழர் வழக்கமாயிருந்தது.

**“நல்லிறை மெய்விரல் கூப்பி**

**இல்லுறை கடவுட்கு ஒக்குதும் பலியே”**[156]

என்ற வரிகள் மூலம் மனையுறை தெய்வத்தை வணங்கும் வழக்கம் இருந்ததை அறியலாம்.

“நினைத்தது நிறைவேற வேண்டுமென்று மனையுறை கடவுளாகிய முருகனை பூவிட்டுத் தேன் சொரிந்து மனமுருகி வழிபாடு இயற்றும் பழக்கம் பழந்தமிழகத்தில் வழக்கமாயிருந்தது”[157]

அன்னை முருகனை வழிபடும் வழக்கம் அகநானூற்றிலும், குறிஞ்சிப்பாட்டிலும் சுட்டடப்படுகிறது.

**“உருவச் செந்தினை நீரொடு தூஉய்**

**நெடுவேள் பரவும் அன்னை..........”**[158]

என்ற வரிகளில் இதை அறியலாம்.

“தெய்வத்திற்கு விட்டு வைத்த கதிரை அறியாது உண்ட மஞ்ஞை நடுங்கியது. தேவராட்டியார் வெறியாடுவது போல இருந்ததாம்”[159]

“காதலியரை நம்ப வைக்கத் கடவுள் மீது சத்தியஞ் செய்தலும் அருவி நீரைக் குடித்துச் சூளுரைத்தலும் பண்டைத் தமிழர் தம் பழக்கமாயிருந்தது”[160]

செம்முது பெண்டிராகிய கட்டுவச்சியை அழைத்து வந்து முற்றத்தில் நெல்லைப் பரப்பித் தலைவியை முன்னே நிறுத்திக் குறி கேட்டல் பழந்தமிழர் வழக்காயிருந்தது. இதற்கு 'கட்டு' அல்லது 'கட்டுக்குறி' என்று பெயர்.

கட்டுக்குறி பழந்தமிழர் நாட்டில் பெருவழக்கிலிருந்தது.

**"நன்னுதல் பரந்த பசலைக்கண்டு அன்னை**
**செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்**
**கட்டிற் கேட்குமாயின்...............**"[161]

என்று வருகின்ற தலைவி கூற்றால் இதை அறியலாம்.

**"........................................... முதுவாய்ப்**
**பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ**
**முருகன் ஆரணங் கென்றலின் அதுசெத்து"**[162]

என்று வருகின்ற அகநானூற்றுக் குறிஞ்சிப் பாடற் பகுதியாலும் பழந்தமிழ்நாட்டில் கட்டுக்கறி வழக்கம் நிலவியதை உணரலாம்.

கட்டுவிச்சியிடம் குறி கேட்டல் போன்று வேலனிடம் கழங்குக்குறி பார்த்தலும் பண்டைத்தமிழர் வழக்கமாயிருந்தது.

"வீட்டு முற்றத்திலேயே மணலைப்பரப்பி வெறியாடும் வேலனை அழைத்து வந்து கழங்குக் குறிபார்ப்பது பழக்கமாயிருந்தது என்பதைக் கபிலர் ஐங்குறுநூற்றில் குறிப்பிட்டுள்ளார்"[163]

**"பெய்ம்மணல் முற்றங் கடிகொண்டு**
**மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே"**[164]

என்ற நற்றிணைப் பகுதியாலும் கழங்குக்குறி பார்க்கும் பழக்கம் சுட்டப்பட்டுள்ளது.

கட்டினும் கழங்கினும் குறிபார்க்கும் பழக்கம் பழந்தமிழ்நாட்டில் பண்டுதொட்டே இருந்து வருகிறது. தொல்காப்பியரும் இதைக் குறிப்பிட்டுள்ளார். வீட்டில் ஏதாவது சிக்கல் ஏற்பட்டால் தமிழகத்துக் கிராமப்புற மக்கள் கோடாங்கியை அழைத்து கழங்குக்குறி பார்த்தல் இன்றும் வழக்கிலிருந்து வருகிறது. இதனால் இப்பழக்கம் பரம்பரை பரம்பரையாகத் தமிழகத்தில் நிலவியது எனலாம்.

“தொண்டகப்பறை ஒலிக்கக் குரவையாடுதலும் பழந்தமிழர் பண்பாட்டுப் பழக்கம்”[165] என்று குறிஞ்சிப் பாடல் எடுத்துரைக்கிறது.

“குரவைப் பாட்டும் வள்ளைப் பாட்டும் பாடி முருகனை வழிபடுதலும்”[166] குறிஞ்சிப் பாடல்களில் விளக்கப்படுகிறது.

கைம்மை நோன்பு நோற்கும் பெண்கள் நூல் நூற்று முயன்று பொருளீட்டி வாழ்க்கை நடத்தும் பழக்கமும் பண்டுதொண்டே பழந்தமிழ் நாட்டில் இருந்ததை நற்றிணைப் பாடல் காட்டுகிறது.

**“ஆளிற் பெண்டிர் தாளிற் செய்த**
**நுணங்குநுண் பனுவல்போலக் கணங்கொள**
**ஆடுகழை தவழும் கோடுயர் நெடுவரை”**[167]

என்ற பாடல் மூலம் இதை அறியலாம்.

“பழந்தமிழகத்தில் விறலியர் பொதுமக்களிடம் தங்கள் கலைத்திறன் காட்டி எண்ணெய், வெள்ளிய ஆடைகள் முதலியவற்றைப் பரிசாகப் பெறும் பழக்கம் இருந்ததை நற்றிணைக் குறிஞ்சிப்பாடல் காட்டுகிறது”[168]

“உள்ளி விழாவின் போது இடுப்பில் மணி கட்டிக் கொண்டு கொங்கு நாட்டினர் மணியாடல் ஆடி மக்களை மகிழ்விக்கும் பழக்கமிருந்தது என்பைதயும் அகநானூற்றுக் குறிஞ்சி பாடலால் அறிகிறோம்.”[169]

“நாழிகைக் கணக்கர் இரவில் விண்மீன்களைக் கூர்ந்து நோக்கி ஆராய்ந்து நேரத்தைக் கணக்கிடும் வழக்கம் பழந்தமிழ் நாட்டிலிருந்ததாக தெரிகிறது. இரவில் தூங்காதிருந்த தலைமகள் கணக்காயர் போலக் கண்விழித்துக் காலத்தை எண்ணிக் கொண்டிருந்தாள் என்று கழார்க் கீரனெயிற்றியார் குறிப்பிட்டுள்ளதால் இதை உணரலாம்”[170]

“பழந்தமிழ் நாட்டில் வானநூலறிவு பிற அறிவியல்களை காட்டிலும் சிறப்பாக வளர்ச்சி பெற்றிருந்தது என்றும் அத்துறையறிஞர் “தொலைநோக்காடி”களும் பிற கருவிகளும் இல்லாதிருந்தபோதும் வானத்திலிருந்த விண்மீன்களையும் அவற்றின் கூட்டத்தையும், வடிவத்தையும், வண்ணத்தையும் கண்டறிந்து அவைகளின் இருப்பிடத்தை நிறுவ வல்லவராயிருந்தனர் என்றும் தமிழறிஞர் கருத்து தெரிவித்துள்ளார்”[171] இக்கருத்தும் கணக்காயர் இரவில் விண்மீன்களைக் கூர்ந்து நோக்கி நேரத்தைக் கணக்கிடும் வழக்கத்தை உறுதிப்படுத்துகின்றது.

## குறிஞ்சிப்பாடல்களில் பண்பாட்டு கலப்பு

எந்தவொரு நாட்டின் பண்பாட்டையும் முழுக்க முழுக்கத் தனித்தன்மை வாய்ந்ததாகக் கருதவியலாது. பிறநாட்டு மக்களோடு அரசியல் – சமுதாயம் - வாணிக உறவு கொள்ளும் போது அந்நாட்டாருடைய பழக்கவழக்கங்களும் கருத்துக்களும் கொள்கைகளும் நம்பிக்கைகளும் நம் நாட்டில் வந்து புகுதல் இயற்கையே. அதே போன்று நம்நாட்டுப் பண்பாடு பிற நாட்டில் சென்று பரவுவதும் உண்டு. நாட்டு மக்களே பிற நாட்டார் பண்பாட்டை விரும்பி ஏற்றுக் கொள்ளவும் செய்யலாம் அல்லது பண்பாடு வேற்றவரால் திணிக்கப்படுதலும் உண்டு.

நாட்டுக்கு நாடு தொடர்பும், மொழிக்கு மொழி கூட்டுறவும் ஏற்படும் போது பண்பாட்டுக் கலப்பு உருவாகும். இக்கலப்பு தவிர்க்க முடியாத ஒன்று.

"தமிழ்ப்பண்பாடும் ஆரியப்பண்பாடும் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே ஒன்றோடொன்று கலக்கத் தொடங்கி விட்டன என்றும், இக்கலப்பு அன்று முதல் இன்று வரை ஒழுங்காகவும் சமூகமாகவும் தென்னகமாகிய தமிழகம் முழுவதும் பாய்ந்து வளப்படுத்திக் கொண்டிருக்கிறது என்றும் அறிஞர் கருதுவர்"[172]

ஆரியப் பண்பாடும் தமிழ்ப் பண்பாடும் நீண்ட நெடுங்காலமாகவே கலக்கத் தொடங்கி விட்டன என்றாலும் அவைகளை நெல்லும் உமியும் போல அல்லது வார்ப்பும் வார்ப்புச் சிலையும் போல எளிமையாகப் பிரித்து அறிதல் இயலாத ஒன்று. இவ்விரு பண்பாடுகளும் மலரும் மணமும் போலவும், பழமும் சுவையும் போலவும் கலந்து விட்டன. ஆழ்ந்து நோக்கி ஆராய்ந்தாலன்றி அவற்றின் தன்மைகளை ஓரளவு உணரலாம், விளக்கலாம் முழுக்க முழுக்க உறுதிபடுத்த முடியாது.

சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் ஆரியப்பண்பாட்டுக் கூறுகள் அமைந்துள்ள பாங்கினைக் கருத்தூன்றி ஆராய்ந்து வெளிக்கொணர்தலும் கண்டுணர்ந்து மதிப்பிடுதலும் இப்பகுதியின் நோக்கமாகும்.

## ஆரியப் பண்பாட்டுக் கூறுகள்

பழந்தமிழகத்தில் பார்ப்பனச் சிறுவர்கள் முன்னே உச்சிக் குடுமி வைத்திருந்தனர். இவ்வழக்கத்தை ஐங்குறுநூற்றில் அன்னாய் வாழிப் பத்தில் கபிலர் அழகுறக் காட்டியுள்ளார்.

“வரைதல் வேண்டித் தானே வருகின்ற தலைவன் ஊர்ந்து வருகின்ற குதிரையும் நம்மூர்ப் பார்ப்பனச் சிறுவர் போன்று குடுமித் தலையது என்று உவகையுடன் தோழி கூறினாள்”[173]

குடுமியில் இரண்டு வகையுண்டு, முன் குடுமி, பின் குடுமி இங்குச் சுட்டப்பெற்ற குடுமி முன் குடுமி, குதிரையின் உளைமயிர் குதிரை முகத்திற்கு முன்னே இருகாதுகட்குமிடையே விழும் தன்மையுடைத்து. அதே போன்று பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டில் வாழ்ந்த பார்ப்பனச்சிறுவரும் முன்குடுமி வைத்திருந்தனர்.

“இன்றும் சில வைதீகப் பார்ப்பனரிடத்தே இஃது இருந்து வருவதைத் திருச்சி மாவட்டத்தில் காவிரியின் வடகரை ஊர்களில் காணலாம்”[174] என்று தமிழறிஞர் கூறுவர்.

பண்டைத்தமிழகத்தில் வாழ்ந்த பார்ப்பனர்களின் பிற பழக்கவழக்கங்களும் சங்கக் குறிஞ்சிப் பாடல்களில் சுட்டப்பெற்றுள்ளன.

“பழந்தமிழகத்துப் பார்ப்பனர்கள் முருங்க மரத்தின் பட்டை நீக்கிய தண்டில் கமண்டலத்தைத் தொங்க விட்டிருந்தார்கள். விரத உணவை உண்ணும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தார்கள். எழுத்தாக்கிளவியாகிய வேதமந்திரங்களை ஓதி வந்தார்கள். இவ்வுண்மைகளைக் குறுந்தொகைக் குறிஞ்சிப் பாடல் காட்டுகின்றது”[175]

பார்ப்பனர்கள் கமண்டலம் ஏந்துவதைக் கண்டும் விரத மேற்கொண்டதைக் கண்டும் பார்ப்பனரல்லாத துறவிகள் பிற்காலத்தில் அப்பழக்கத்தைப் பின்பற்றினார்கள் என்பதும் இங்கு எண்ணத்தக்கதாகும்.

**“நூலே கரகம் முக்கோல் மனையே**
**ஆயுங் காலை அந்தணர்க் குரித்தே”**[176]

என்று தொல்காப்பியர் கூறுவர்.

**புராண மரபு கதைகள்**

இவ்வந்தணர்களின் கூட்டுறவால் தமிழகத்தில் பல புராணக் கருத்துக்களும் கொள்கைகளும் கலக்கத் தொடங்கின. இக்கலப்பைக் குறிஞ்சிப் பாடல்கள் தெளிவுறுத்துகின்றன.

உலகத்தைத் திசையானைகள் காவல் செய்கின்றன என்றதோர் புராண நம்பிக்கை குறிஞ்சிக் கலியில் இடம் பெற்றுள்ளது.

**“ஆமிழி அணியமலை அலர்வேங்கைத் தகைபோலத்**
**தேமூசு நனைகவுட் டிசைகாவல் கொளற்கொத்த”**[177]

என்ற வரிகளால் இதை அறியலாம்.

திசை யானைகள் உலகைக் காவல் செய்கின்றன என்ற புராண நம்பிக்கை வடவாரியர் கூட்டுறவால் உருவாகியது எனலாம்.

இராகு என்னும் பாம்பினால் பற்றப்பட்ட திங்கள் போன்று தலைமகள் முகம் ஒளி மழுங்கியது என்று நற்சேந்தனார் என்ற குறிஞ்சிப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

**“பகலெரி சுடரின் மேவி சாயவும்**
**பாம்பூர் மதியம் நுதலொளி கரப்பவும்”**[178]

என்ற பாடல் வரிகளால் இதை அறியலாம்.

மடல் பாடிய மாதங்கீரனாரும் இக்கருத்தை நற்றிணை குறிஞ்சிப் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**“அகலிரு விசும்பின் அரவுக்குறை படுத்த**
**பசுங்கதிர் மதியத்து அகனிலாப் போல**
**அளகஞ் சேர்ந்த சிறுநுதல்.............”**[179]

என்ற பாடலும் குறிப்பிடுகின்றது.

இராகு என்ற பாம்பு சந்திரனை கவ்வி நிற்கின்றது என்ற புராண நம்பிக்கை வடவாரியர் கூட்டுறவால் ஏற்பட்ட பண்பாட்டின் வெளிப்பாடு என்று கோடலே ஏற்புடையதாகும்.

“ஐயிரு தலையின் அரக்கர் கோமான் அம்மையப்பர் எழுந்தருளியிருக்கும் கயிலங்கிரியை எடுத்தற்குத் தம் கைகளைக் கீழே செருகி எடுக்க முடியாமல் தவித்தது போன்று வேங்கை மரத்தின் அடியிலே செருகிய கொம்புகளை எடுக்க முடியாமல் மதயானை வருந்திக் கதறியது என்று கலித் தொகையில் கபிலர் குறிப்பிட்டுள்ளார்”[180]

வடவாரியப் பண்பாட்டுக் கலப்பால் இராவணன் சாமக்கீதம் பாடிய கதை நிகழ்ச்சியை உட்கொண்டு அதன் பிரதிபலிப்பாகக் கபிலர் இப்பகுதியை அமைத்தார் எனலாம். “நூற்றுவர் தலைவனாகிய துரியோதனின் கொடையைக் கீறி உயிர்குடித்த வீமனைப் போல் முறம்போன்ற செவிகளையே மறைவிடமாகக் கொண்டு தன்னைக் கொல்ல வந்த புலியைக் கண்டு சினந்து தன்னுடைய நீண்ட கூர்மையான கோடுகளால் சருமத்தில் பாய்ச்சிப் பகைமுடித்தது என்று கபிலர் குறிஞ்சிக் கலியில் குறித்திருப்பது இங்கு நோக்கத்தக்கதாகும்”[181] இது தமிழகத்தில் ஆரியப் பண்பாட்டுக் கலப்பைக் காட்டுகின்றது.

“மல்லரை மறஞ்சாய்த்த திருமால் போல்”[182] என்ற அதே பாடலில் கபிலர் காட்டுவதும் ஆரியப் பண்பாட்டுக் கூறு என்றே கொள்ளலாம்.

**“கதிர்விரி கணைசுடர்க் கவின்கொண்ட நனஞ்சாரல்**
**எதிரெதி ஓங்கிய மால்வரை யடுக்கத்**
**ததிரிசை யருவிதன் அஞ்சினை மிசைவிழ**
**முதிரினர் ஊழ்கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை**
**வரிநுதழ் எழில்வேழம் பூநீர்மேல் சொரீதரப்**

**புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித்**

**திருநயந் திருந்தன்ன தேங்கமழ் விறல்வெற்ப"**[183]

என்ற இப்பகுதியை கூர்ந்து நோக்குவார்க்கு ஆரியப் பண்பாட்டுக் கலப்பால் கபிலரின் கற்பினை முகிழ்ந்தது என்று தெரிய வருகிறது.

மார்கழி மாதம் முழுவதும் நோன்பிருந்து தைத்திங்கள் முதல் நாளில் நீராடி அன்று சமைக்கப்பட்ட உணவை உண்டு நோன்பு முடிக்கும் பழக்கம் நற்றிணைக் குறிஞ்சிப் பாடலில் சுட்டப்பெற்றுள்ளன.

**"அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்**

**பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை"**[184]

என்ற குறுந்தொகைக் குறிஞ்சிப் பாடல் வரிகளிலும் அமிழ்தத்தை உணவாகப் பெறும் மறுமைப் பயன் சுட்டப்பட்டதை அறியலாம்.

**"இம்மைச் செய்தது மறுமைக் காமென"**[185]

என்று நம்புவதை அறத்தை விலை கூறுவதாகும் என்று பழந்தமிழர் எண்ணியதால் மறுமை பற்றிய கற்பனைக் கதைகள் வடவாரியடமிருந்து தமிழ் மக்களுக்கு வந்திருக்கக் கூடும் என்று கருதப்படுகிறது. குறிஞ்சிப் பாடல்களில் மேலே காட்டிய மறுமைப் பயன் பற்றிய கருத்துக்கள் ஆரியப் பண்பாட்டுக் கலப்பால் வந்த கருத்தாகக் கொள்ள இடமுண்டு.

"பிறர் கருத்தைக் கண்டு அது தனக்குற்றதாக வருந்தும் பண்பு வாரணவாசியுள்ளார் செயலாகும்"[186] அயலார் துன்பத்தைத் தன்மேலிட்டு வருந்தும் பண்பை "வாரண வாசிப்பதம்" என்றனர். இதைக் குறிஞ்சிக் கபிலர் தோழி கூற்றாக எடுத்துக் கூறியுள்ளார்.

**"தெருவின்கண் காரணமின்றிக் கலங்குவார்க் கண்டு நீ**

**வாரணவாசிப் பதம்பெயர்தல் ஏதில்**

**நீ நின்மெற் கொள்வ தெவன்"**[187]

என்றும் குறிஞ்சிப் பாடலில் குறிப்பிட்டுள்ளது.

வாரணவாசியார் போலப் பிறர் துன்பத்தைத் தன் மேலிட்டு வருந்துவது ஏனோ என்பது தோழியின் கேள்வியாகும்.

வடவாரியார் கூட்டுறவால் ‘வாரணவாசிரிப்பதம்’ என்ற தமிழகத்திற்குக் கிடைத்தது என்று கொள்ளலாம். இதைக் கபிலர் கலித்தொகையில் கையாண்டமை ஆரியப் பண்பாட்டுக் கொள்கை தமிழகத்தில் ஊடுருவிய பான்மையைக் காட்டுவதாகும்.

## தொகுப்புரை

சமுதாயத்தின் ஓர் அங்கமாக விளங்குவது வாழ்வியலாகும். அரசியல், தனிமனித இயல்பு, பொருளாதாரம், சமயம், பண்பாடு, குடும்பம், திருமணம், நம்பிக்கைகள் மற்றும் பல்வேறு சடங்குகள் ஆகியவற்றை வெளிப்படுத்துவதே வாழ்வியலாகும்.

தொல்காப்பியர் வாழ்வியலை அகவாழ்வு, புறவாழ்வு என்று இரு கூறாகப் பாகுபடுத்தியுள்ளார்.

சங்க இலக்கியப் பாடல்கள் ஒவ்வொன்றும் வாழ்வின் பல்வேறு நிலைப்பாடுகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

குறிஞ்சி நில மக்களின் குடும்பம், இல்ல அமைப்பு அவர்களது தொழில், உணவு, உடைகள், அணிகலன்கள், தெய்வ வழிபாடு, காதல், கல்வி, அரசியல், கலைகள், வணிகம், பெண்களின் நிலை, இல்வாழ்க்கையின் சிறப்பு, மக்களின் பொழுதுபோக்குகள், பெண்களின் கற்பு சிறப்பு, பரத்தமை போன்ற வாழ்வியல் கூறுகள் சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்களில் இடம் பெற்றுள்ளமையை ஆராய்ந்ததோடு மட்டுமல்லாமல் அம்மக்களின் சமூக நிலைப்பாடும் மதிப்பிடப்பட்டுள்ளது.

சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப்பாங்கின் வெளிப்பாடே பண்பாடு என்ற கருத்து அறியப்பட்டுள்ளது.

சங்கக் குறிஞ்சித்திணைப் பாடல்களில் பழந்தமிழ்ப் பண்பாட்டுக் கருத்துக்கள், கொள்கைகள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் மற்றும் பழந்தமிழ்ப் பண்பாட்டில் கலந்துள்ள ஆரியப் பண்பாட்டுக் கூறுகள் போன்றவற்றை தெளிவாக ஆராயப்பட்டுள்ளது.

வீட்டில் சாளரங்கள் காற்றோட்டத்திற்காகவும், கதிரவன் ஒளி பாய்வதற்காகவும் அமைக்கப்பட்டுள்ளன. தென்றல் வீசும் போது

சாளரங்களைத் திறந்து சுகத்தை அனுபவிக்கிறோம். கடுங்காற்று வீசும் போதும் அதிக அளவு மழை பெய்யும் போதும் சாளரங்களை அடைத்துப் பொருட்களைப் பாதுகாக்கிறோம். நாட்டிலும் பிறநாட்டு அறிவாகிய கதிரவன் ஒளி பாயும் போதும், அயல்நாட்டுப் பண்பாட்டுத் தென்றல் வீசும் போதும், அவை தடையின்றி நுழைவதற்குப் பழந்தமிழ்ச் சான்றோர் இலக்கியமாம் சாளரங்களைத் திறந்து இடம் கொடுத்தனர். நாட்டுப் பண்பாட்டுப் பெருமையையும், தனித்தன்மையையும் கெடுத்து விடும் கருத்துக்களும் வழக்கங்களும் தமிழகத்தில் நுழைய முயன்ற போது இலக்கியச் சாளரங்களை மூடித் தமிழ்ப் பண்பாட்டின் தனித்தன்மையைத் தமிழ்ச் சான்றோர் காத்து நின்றார் என்பதையும் சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. புறம். 192
2. கம்ப. பக். 154
3. குறள். 1130
4. சித்திரப்பாவை. ப. 252
5. குறள். 659
6. தொல். பொருள். நூல். 111
7. மேலது. 1098
8. குறுந். 13
9. ஆய்வாளர் கட்டுரைத் தொகுப்பு நூல். ப. 65
10. மேலது. ப. 98
11. கு. இராசரெத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள், ப. 49
12. A.L. Lrober, Anthropology, P. 7
13. Knopf. The Tree of Culture, P. 29
14. இரா. இரகுநாதன், சங்க இலக்கியத்தில் குறிஞ்சி, ப. 133
15. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப. 27
16. Encyclopaedia of the Social Science, P. 556
17. அகம். 182
18. நற். 276
19. குறுந். 3
20. நற். 209
21. Gorden Child, What happened in History, P. 62
22. குறுந். 371
23. நற். 5
24. குறுந். 253
25. நற். 129

26. மேலது. 399
27. அகம். 388
28. குறுந். 82
29. நற். 22
30. ஐங். 208
31. அகம். 262
32. கலி. 43
33. குறுந். 214
34. மேலது. 342
35. சிலம்பு. 73
36. பெரும். 129
37. குறுந். 161
38. மேலது. 38
39. ஐங். 232
40. அ. தட்சிணாமூர்த்தி, பழந்தமிழர் நாகரிகமும், பண்பாடும், ப. 195
41. குறுந். 156
42. அகம். 22
43. கலி. 46
44. பாரதிதாசன், கவிதைத் தொகுதி – 3
45. குறுந். 60
46. மேலது. 3
47. நற். 185
48. அகம். 282
49. கலி. 44
50. புறம். 183
51. மேலது. 312

52. கலி. 47

53. நற். 146

54. நற். 104

55. ஐங். 215

56. கலி. 39

57. அகம். 102

58. நற். 146

59. அகம். 118

60. குறுந். 100

61. K. Gnambal, Home life among the Tamils in the Sangam age, P. 14

62. K.K.Pillai, Social Histroy of the Tamils, Part I, P. 385

63. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப. 152

64. ஐங். 276

65. மேலது. 292

66. கலி. 47

67. குறுந். 101

68. மேலது. 106

69. மேலது. 335

70. ஐங். 295

71. நற். 68

72. கலி. 37

73. கலி. 40, 41

74. தொல். பொருள். கற்பு. 4

75. அகம். 256

76. ஐங். 206

77. அகம். 232

78. நற். 389

79. கலி. 39

80. நற். 102

81. குறுந். 78

82. குறள். 87

83. நற். 330, 142, புறம். 198, அகம். 273, 314

84. தொல். பொருள். நூ. 111

85. கலி. 39

86. நற். 294

87. ஐங். 203, 248, 280

88. தொல்.பொருள்.நூ. 491

89. Pernondo Henriques, Prostitution and Society, P. 15

90. நற். 176

91. ஐங். 240, 265

92. குறுந். 106

93. கலி. 61, 62, 38, 47

94. குறுந். 247, 252, 83

95. அ. கிருட்டிணன், தமிழர் பண்பாட்டியல், ப. 2

96. Will Durant, The Strory of Civilisation, P. 2

97. K.M. Panikkar, Essential Features of Indian Culture, P. 2

98. செ.ரா. பரமேஷ், ப. 217

99. டாக்டர். இ. சுந்தரமூர்த்தி, இலக்கியமும் பண்பாடும், ப. 5

100. டாக்டர். இரா. மோகன், இலக்கிய அலசல், ப. 28

101. முனைவர். க.த. திருநாவுக்கரசு, தமிழ்ப் பண்பாடு, ப. 68

102. டாக்டர். அ. கிருட்டிணன், தமிழர் பண்பாட்டியல், ப. 123

103. முனைவர். சி. மணவாளன், இலக்கியச் சாரல், ப. 93

104. நற். 168

105. மேலது. 355

106. குறள். 580

107. புறம். 18

108. மணிமேகலை. 11

109. அகம். 311

110. நற். 260

111. அகம். 382

112. மேலது. 108

113. நற். 116

114. குறுந். 252

115. நற். 160

116. கலித். 47

117. குறுந். 206

118. V. Kanakasabhai, The Tamils Eighteen Hundred Years Ago, P. 120

119. ஐங். 182

120. நற். 165

121. மேலது. 247

122. மேலது. 32

123. குறுந். 143

124. நற். 336

125. குறுந். 265

126. நற். 115

127. குறுந். 288

128. குறுந். 27, 28

129. கலித். 46

130. அகம். 188

131. நற். 146

132. கு. இராசரெத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள், ப. 147

133. Dr. S. Ramakrishnan, East and West, P. 17

134. மு. சண்முகம் பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 163

135. நற். 165

136. கலித். 52

137. மேலது. 54

138. அகம். 198

139. நற். 34

140. அகம். 98

141. மேலது. 22

142. குறுந். 87

143. நற். 255

144. ஐங். 257

145. குறுந். 366

146. மேலது. 170

147. குறுந். 90

148. குறுந். 378

149. அகம். 88

150. ஐங். 218

151. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 192

152. முனைவர். க.த. திருநாவுக்கரசு, தமிழ்ப்பண்பாடு, ப. 63

153. R.M. Maciner and Charles, Society, P. 176

154. அ.மு. பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், ப. 231

155. இலக்குபரதன் பாரதி, நமது சமூகம், ப. 71

156. Encyclopedio Britanica, Vol. 3, P. 430
157. அகம். 282
158. ஐங். 259
159. அகம். 272
160. குறுந். 105
161. மேலது. 109
162. நற். 288
163. அகம். 98
164. ஐங். 248
165. நற். 268
166. அகம். 118
167. கலித். 40, 42
168. நற். 353
169. மேலது. 328
170. அகம். 368
171. குறந். 261
172. S.P. Annamalai, A Study of the Development of Arts and Sciences in Ancient Tamilnaud, P. 214
173. Somasundara Bharathi, The Papers of Dr. Navalar Somasundara Bharathier, P. 25
174. ஐங். 202
175. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, மு. நூ. ப. 506
176. குறுந். 156
177. தொல். 1570
178. கலித். 48
179. நற். 128

180. மேலது. 327

181. கலித். 1-7

182. மேலது, 52

183. மேலது, 5

184. கலித். 44

185. குறுந். 83

186. புறம். 134

187. கலித். 60, நச். உரை

188. மேலது, 12-14

# இயல் – 4

## குறிஞ்சித் திணைப் பாடல்களில் அகப் பொருள் மரபுகள்

எல்லாவற்றிலும் புதுமையை விரும்புவது மனித இயல்பு. இருப்பினும் பழைமைய சுலபமாக விட்டு விட இயலுவதில்லை. அத்தகைய பழமை பாராட்டுவதே மரபின் அடிப்படைக் கலை. இலக்கியங்கள் மரபைப் பின்பற்றியதால் தான்இன்னும் நிலைத்து நிற்கின்றன. மரபை ஒட்டி நிலைத்திருப்பதால் இலக்கியச் சுவைப்பிற்கும் இலக்கிய அனுபவத்திற்கும் வழி ஏற்படுகின்றது. அகத்திணைப் பாடல்கள் அனைத்தும் மரபின் அடிப்படையிலேயே எழுதப் பெற்றுள்ளன. இவ்வகைத் திணைப் பாடல்கள் மிக பழமையானவாக இருப்பினும், இன்றும் அவை நடைமுறையில் ஆளுமைத்தன்மை மிக்கு விளங்குவதைக் காணலாம். அவ்வகையில் சங்கக் குறிஞ்சிப் பாடல்களில் விரவிக் கிடக்கும் பல்வேறு அகப்பொருள் மரபுகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### அகமும் புறமும்

சங்கப் பாடல்களை அகம், புறம் என்ற இருபெரும் பிரிவுகளுள் அடக்கி விடலாம். காதல் தழுவிய பாடல்கள் அகமெனவும், வீரம் தழுவியன புறமெனவும் கருதப்பெற்றன. ஆகவுணர்வுகளின் அடிப்படை இவ்விரு எல்லைகளுக்குள் அடங்கி இருப்பதைக் காணலாம்.

“அனைத்து அகவுணர்வுகளையும் அரிஸ்டாட்டில் இன்பம் துன்பம் என்ற இரு எல்லைக்குள் அடக்குகிறார். பிளேட்டோ விருப்பு வெருப்பு என்ற இரண்டு எல்லைக்குள்ளும், வைல்ஸ் என்பவர் நல்லது கெட்டது என்ற இரண்டினுள்ளும் அடக்குகின்றனர்”[1]

இரு உணர்வுகள் மையமாக இருப்பினும் அவற்றுள் காதல் உணர்வே தலையாயதாகப் போற்றப்படுகிறது. அகத்துணர்வுகளும் செயல்பாடுகளும் அக நாட்டத்தை அடிப்படையாகக் கொண்டவையாகும்.

சமுதாயம் ஆண், பெண் என் இருபாலரைப் பெற்றிருப்பினும் ஆண்பாலரைச் சிறப்பிப்பது போல, அகம் புறம் என்ற அமைப்பில் அகத்திற்கே முதலிடம் தந்திருப்பது அதன் சிறப்பை உணர்த்துவதாகும். தொல்காப்பியர் ஒன்பது இயல்களில் புறத்திணைக்கு ஒரு இயலையும், அகத்திணைக்கு அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல் எனப் பல இயல்களில் பேசுவது அகத்தின் சிறப்பை எடுத்துரைக்கும் அவ்வகையில் உயிரிக்கத்திற்கு அடிப்படையான இன்ப உணர்வை அடிநாதமாகப் பெற்று ஒலிக்கிறது.

“புலவனுக்கு மதம் எனப்படுவது ஆண் - பெண் காதலே. அக்காதல் இலக்கியத்தின் வற்றா ஊற்றிடங்களுள் ஒன்று. கவிதை எண்ணத்தை உருவாக்கும் சார்புகளுள் ஒன்று”[2] என கவிஞனுக்கும் காதலுக்கும் உள்ள நட்பினை எடுத்துக் கூறுவர்.

எனவே புலவர்கள் தம் உள்ளம் கவர்ந்த அகப்பொருள்களையே தமது பாடுபொருளாகக் கொண்டனர் என்பது புலப்படுகின்றது. இத்தகைய அகப்பாடல்கள் ஒரு சில மரபுகளை அடியொற்றியே இயற்றப்பட்டுள்ளன. இலக்கியத்தில் மட்டுமல்லாமல் வாழ்வின் ஒவ்வொரு வினாடியிலும் மரபைப் பின்பற்றி வருகிறோம்.

மரபு – சொற்பொருள் விளக்கம்

கட்டுப்பாட்டை வேறொரு வகையில் குறிக்குமிடத்து மரபு என்று கூறப்படுகிறது என்பார் அ.ச. ஞானசம்பந்தன்.

பழங்காலந்தொட்டு பெரியோர்கள் எவ்வெவ் பொருட்களை எவ்வெவ்வாறு குறித்தனரோ, அவ்வப்பொருட்களை அப்பெயர்களிலேயே குறிப்பது மரபு என்று தொல்காப்பியமும் குறிப்பார்.

“மரபு என்பது உயர்ந்தோர், முன்னோர் குறித்த வழக்கு என்று நன்னூலார் குறிப்பிடுகின்றார்”[3]

எனவே, மரபு என்பது மக்களால் மேற்கொள்ளப்படும் ஒரு வகை நெறி எனலாம். மரபு எனும் சொல்லின் பொருளை நோக்கும்போது விதி, முறைமை, நெறி முதலிய விளக்கக் காணலாம்.

“மானுட வினை நிகழ்ச்சியாயினும், பொருண்மையின் இருப்பாயினும் காலம், இடம் என்னும் இருவகைப் பரிமாணங்களை உடையதாக நிகழக் காண்கிறோம். ஒரு குறிப்பிட்ட காலத்தே, குறிப்பிட்ட இடத்தே நிகழ்ந்த வினை, நிகழ்ச்சி கால இயக்கதின்போது மாறாது தொடர்ந்து செல்லுதலும் உண்டு. குறிப்பிட்ட காலமும் இடமும் அல்லது இரண்டில் ஏதேனும் ஒன்றேனும் பற்றி வேறுபாடமைந்து தொடர்தல் உண்டு. பெரும்பான்மை மாறாது தொடர்தலை மரபு என்கிறோம்”[4]

மரபு முற்காலத்தின் வாழ்க்கை அனுபவம் என்று அறிஞர் பாலா விளக்கம் தருகிறார்.

“மரபு என்பது இலக்கணம் மட்டுமல்ல. மரபு என்பது இலக்கியத்திற்கு மட்டுமல்ல. மரபு என்பது முந்தைய தலைமுறை சேர்த்து வைத்திருக்கும் அனுபவம், அறிவு, முடிவு ஆகிய அனைத்தும் சேர்ந்தது. கால நீட்டியில் மானுட வர்க்கம் தன் அறிவுத் தோட்டத்தில் அனுபவத் திளைப்பில் உணர்ந்து தெளிந்து உருவாக்கிய முடிவுகள் அவை. வருங்காலத்திற்கென்று இலக்கியமாக, சமயமாக, அறநெறியாக, பிற அறிவுத் துறைகளாக முந்தைய தலைமுறை விட்டுச் சென்ற அனுபவச் திரட்டுத்தான் மரபு. அறிவுத் தோட்டத்தில் கிடைத்த செல்வம்தான் மரபு”[5]

மேற்கண்ட கருத்துக்களால் காலத்தில் விளைந்த முறைமையே மரபு என்பது புலனாகிறது. இம்மரபு மாற்றமடையும் தன்மையுடையது. ஒரு காலச் சமுதாயத்தார் மேற்கொண்ட முறைமைகளை, வழிவருவோர் அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டாயம் இல்லை. ஆயின்

முன்னதை முற்றிலும் புறக்கணிக்கவும் இயலாது. முன்னையவற்றில் காலத்திற்கு தேவையான மாற்றங்களைச் செய்து பின்பற்றுவர். அப்போது முன்னைய மரபில் ஒரு மாற்றம் / வளர்ச்சி ஏற்படுகின்றது. வாழ்க்கை முறையில் நிகழும் இம்மரபு மாற்றம் இலக்கியங்களிலும் நிகழ்கின்றது.

காலத்திற்கேற்ற கருத்து வளர்ச்சியே மரபு மாற்றத்திற்குக் காரணம் என்று தெளிவாகிறது. இம்மாற்றம் விரும்பத்தக்க வளர்ச்சியாகவும் அமையலாம். நெறி பிறழ்ந்து விரும்பத்தகாததாகவும் அமையலாம்.

அகப்பாடல்களைச் செய்யும் போது புலவர்களும் சில மரபுகளைப் பின்பற்றினர். திணைப் பிரிவுகள், துறைக்குறிப்புகள், சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாமை போன்றன இதற்கு நல்ல சான்றுகளாகக் காட்டலாம். இவ்வாறு தனக்கெனச் சில உயர்ந்த மரபுகளை – விதிமுறைகளைக் கொண்டதால்தான் சங்க இலக்கியங்கள் குறிக்கோள் இலக்கியங்களாகப் போற்றப்பட்டன.

## அகப்பொருள் மரபுகள்

அகம் என்னும் சொல் அடங்கியது, இடம், உள்ளிடம், மனம் போன்ற பல பொருள்களைக் குறிக்கும். உள்ளமாகிய மன உணர்வினால் நுகர்ந்து இன்பமுறும் காம இன்பத்தையும் ஆகுபெயராக இச்சொல் உணர்த்தும். ஓர் ஆணும் பெண்ணும் தனிமையில் கூடி இன்பம் நுகர்ந்தும், பின் ஊரறியத் திருமணம் புரிந்தும் வாழும் நிகழ்ச்சிகளை உள்ளடக்கிக் காண்பது அகப்பொருள் ஆகும். இவை பற்றிய பாடல்கள் அகப்பொருட் பாடல்கள் என்று அழைக்கப்படும்.

அகப்பொருள் பாடல் இயற்றுவோர் தம் மனத்துள் காதலர் கூடுதல், பிரிதல் என்ற இருபிரிவுகளையே கருத்தாகக் கொண்டு பாடுதல் மரபாகும். அவை பாடும் புலவரது மனவுணர்வுகளுக்கேற்ப அமையும். திணை, துறை அமைப்பும் சங்க அகப்பாடல்களின் உருவாக்கத்தில் துணை புரிகின்றன.

## திணையும் துறைக்குறிப்பும்

மரபு பற்றிப் பேசும் போது முதலாவதாக நம் நினைவிற்கு வருவது திணைப் பிரிவாகும். நில அடிப்படையில் நான்கு பிரிவாகப் பிரித்து ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு வாழ்க்கை முறையை பண்டைத் தமிழ்ச் சான்றோர் அமைத்தனர். நிலங்களையும் அவற்றில் வாழ்கின்ற அஃறிணைப் பொருள்களையும் மரபு ரீதியாகப் படைத்தனர். சான்றோர்களால் படைக்கப்பட்ட மரபை அவர்கள் மாற்றினாலும் தவறில்லை.

ஒரு பாடலுக்கு இரண்டு மூன்று துறைக் குறிப்புகள் கொடுத்திருப்பதால் துறை வரையறையில் சிக்கல் ஏற்படுகின்றது. சான்றாக குறுந்தொகை 100வது பாடலில் தலைமகன் பாங்கற்கு உரைத்ததாகவும், அதில் குறிப்பிட்ட தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதாகவும் இரண்டு குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. பாடல்களின் துறைக் குறிப்புகளில் 1. கூறுவோன், 2. கேட்போன், 3. களன், 4. பொருட்கூறு, 5. செய்தி, 6. பயன் என்பன அமைந்துள்ளன.

எனவே பாடலின் கவிதை நயத்தை முழுமையாக உணர்ந்து கொள்ளத் துணை செய்வதே அதன் துறைதான். இனி சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்களில் அகப்பொருள் மரபுகளைக் குறித்து ஆராய்வோம்.

## களவு நெறி

கைகோள்களாகிய களவு, கற்பு ஆகியவற்றிற்குரிய தனித்தனி மரபுகளையும் இரண்டிற்கும் பொதுவான சில மரபுகளையும் தொல்காப்பியர் சுட்டுகின்றார்.

“கைகோளில் முதலாவது களவாகும். இதில் தலைமக்கள் கண்டு காதல் கொண்ட திருமணத்திற்கு முந்தைய அகப்பொருள் செய்திகளான

இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியற் கூட்டம் ஆகியனவும் இவை சார்ந்த கிளவிகளும் பாடப்படும்”[6]

“பாலதாணையால் கண்டு காதல் கொள்ளும் தலை மக்களின் ஒப்புமைகளாகப் பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உறு, காம வாயில், நிலை, அருள், உணர்வு, திரு ஆகியவற்றை தொல்காப்பியர் குறிக்கின்றார். இப்வொப்புமைகளில் தலைவியைவிடத் தலைவன் மிக்கோனாக இருந்தாலும், அது குற்றமாகாது”[7] என்பர்.

**இயற்கைப் புணர்ச்சி**

ஒத்த தலைவன் தலைவி எதிர்ப்பட்ட வழி தம்முள் வேறு எந்த நினைப்பும் இல்லாது தம் நிலை மறந்து இயைவதைப் பண்டைத் தமிழர் இயற்கைப் புணர்ச்சி என்றனர். அதாவது தலைவி மேல் வைக்கும் அன்பு முறையானதா, இவள் நமக்குத் தகுதியானவளா என்றெல்லாம் ஆராயாமல் கூடுவதே இயற்கைப் புணர்ச்சி என்ற பகுப்பில் அடங்காது எனவும் குறிப்பிட்டனர்.

இது களவு நிலையில் உரைக்கப் பெற்றாலும் கற்பும் இதன் வழிபட்டதே ஆகும். இயற்கையில் அல்லாமல் பெற்றோர் தாமே தேடி சேர்த்து வைக்கும் உறவினை அக்கால சமுதாயம் வெறுத்தது.

**“பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
**ஏதில் பிணந்தழீஇ யற்று”**[8]

என்று குறள் கூறுகிறது. அதாவது அன்பில்லாதவரைத் தழுவியவர் பிணத்தைத் தழுவியர், கற்பிழந்தவர் என்ற பொருளில் வள்ளுவர் கூறுவது இக்கருத்துக்கு வலிமைச் சேர்க்கும்.

“இயற்கைப் புணர்ச்சியைக் ‘காமக் கூட்டம் என்றும் ‘காமப் புணர்ச்சி’ என்றும் தொல்காப்பியர் குறிப்பிடுவார்”[9]

இயற்கைப் புணர்ச்சி, தெய்வப் புணர்ச்சி, முன்னூறு புணர்ச்சி என்பன ஒரே பொருளை உணர்த்தும் சொற்களாகும். இவ்வியற்கைப் புணர்ச்சியை,

**"அதுவே**

**தானே அவளே தமியர் காணக்**

**காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்"**[10]

என்று இறையனார் அகப்பொருள் விளக்குகிறது.

"தலைமகன் தலைமகளைக் கண்ணுற்ற அந்த நேரத்திலேயே அதனை அடுத்து எண்ணும் ஏதொரு சிறு நினைப்பும் இல்லாதவனாய்த் தன்னிலை இழந்து அவளொடு இசைவு பட்டமையும், அங்ஙனமே தலைமகளும் அதனை அடுத்து எண்ணும் சிறு நினைப்பும் இல்லாதவளாய்த் தன்னிலையிழந்து அவனொடு இசைவுபட்டமையுமே இயற்கைப் புணர்ச்சியெனப் படுஞ்சிறப்புத்தாம் என்று அறிதல் வேண்டும்"[11]

இயற்கைப் புணர்ச்சி காட்சி, ஐயம், தெளிவு போன்ற படிநிலைகளை உடையது.

தோழியரோடு இருந்த தலைவியை கண்ணுற்ற தலைவன் வாழ்த்துகிறான்.

**"திருமணி புரையும் மேனி மடவோள்**

**யார் மகள் கொள் இவள்? தந்தை வாழியர்"**[12]

என்னும் இப்பாடல் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் தலைமகளை ஆயத்தார் போற்றியமை கண்டு தலைமகன் இவளை பெற்றா வாழ்கவென வாழ்த்துவதாக துறைக்குறிப்பு அமையப் பெற்றுள்ளது.

குறுந்தொகையில் ஒரு பாடல் தலைவியை ஊழின் வசத்தால் காணப் பெற்று அளவளாவி நீங்கும் தலைவன் தன் உள்ளம் இன்னம்

தலைவியிடத்துதான் உள்ளது எனவும், இதைத் தலைவி அறிந்தாளோ? இல்லையோ? என மயங்கிய வழி தலைவன் நெஞ்சிற்குச் சொல்லியதாகத் துறைக் குறிப்புக் காணப்படுகிறது.

**“பள்ளி யானையின் உயிர்த்தென்**

**உள்ளம் பின்னும் தன்னுழை யதுவே”**[13]

என்பதால் உள்ளத்துக்கு உயிர்த்தல் இல்லை எனினும், உறுப்புடையது போல் உணர்வுடையது போல் மறுத்துரைப்பது போலவும், நெஞ்சொடு புணர்ந்து உரைக்கும் மரபு பற்றி இவ்வாறு உரைத்தார்.

**“பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் வேளையும்**

**அஞ்சில் ஓதி அசைநடை கொடிச்சி”**[14]

என்ற பாடலில் தலைவியின் சாயலைப் போல் மயில் இருப்பது அரிது என்கிறான் தலைவன். இயற்கைப் புணர்ச்சிக்கண் புணர்ந்து நீங்கிய நிலையில், தலைமகள் ஆய வெள்ளத்தோடு கூடி நிற்கக் கண்ட என்றும் துறையில் இப்பாடல் அமைந்துள்ளது.

அகநானூற்றில் உள்ள 32, 48, 82, 388வது போன்ற பாடல்கள் இயற்கைப் புணர்ச்சிக்கண் அமைந்துள்ளன.

குறிஞ்சிக் கலியில் உள்ள 37, 54வது பாடல்களும் இயற்கைப் புணர்ச்சி துறையில் அமைந்துள்ளனவாகும்.

## இடந்தலைப்பாடு

“இயற்கைப் புணர்ச்சியெய்திய தலைமக்கள், தாங்கள் மீண்டும் கூடக் குறியிடம் குறிப்பர். இக்குறியிடம் பகற்குறி, இரவுக் குறி என இருவகைப்படும்”[15]

இரவு நேரத்தில் மனைக்கும் எயிற்கும் நடுவான ஓர் இடத்தில் தலைவன் - தலைவி கூடும் இடத்தின் பெயர் இரவுக்குறி என்பர். அதாவது தினைப்புனம், அருவி போன்ற இடங்களாகும். இதனை,

**“இரவுக்குறியே இல்லகத் துள்ளும்**

**மனையோர் கிளவி கேட்குவழி யதுவே**

**மனையகம் புகாஅக் காலை யான”**[16]

என்று தொல்காப்பியர் கூறுவர். அதாவது, இரவுக்குறி நிகழும் இடம் தலைவியின் வீட்டெல்லைக்கு உட்பட்டே நிகழும் என்கிறார்.

தலைவன் இரவு நேரத்தில் வருகிறான். அவனுக்காக தலைவி – தோழி காத்திருக்கிறார்கள். அப்போது கூகை கடுமையான குரலால் குளறி எல்லோரையும் வருத்துகிறது இதை தோழி கண்டிக்கிறாள்.

**“தேயா வளைவாய், தெண்கண் கூர்உகிர்**

**வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை”**[17]

என்ற பாடல் இரவுக்குறி வந்த தலைவன் சிறைப்புறமாக நிற்கத் தோழி கூகைக்கு கூறுவதாக துறைக்குறிப்பு அமைந்துள்ளது.

தலைவி தலைவன் மேல் மிகுந்த காதல் உடையவள். அவள் மனம் தமக்குள் விரைந்து மணம் முடிக்க விரும்புகிறது. இரவுக்குறியில் தலைவனை சந்தித்த தலைவி தலைவனின் உள்ளத்தைத் திருமண ஏற்பாட்டில் திருப்ப முயலுகின்றாள்.

**“சிறுபுறம் புதைய வாரி குரல் பிழியூஉ**

**நெறிகெட விலக்கிய நீயிர் இச்சுரம்**

**அறிதலும் அறிதிரோ? என்னுநர்ப் பெறினே”**[18]

என்ற பாடல் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாயத் தலைவி சொல்லியது எனும் துறைக்குறிப்பில் அமைந்து உள்ளது.

“இரவுக்குறிக்கண் தலைமகன் வந்து குறியிடத்து நின்றமை அறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது”[20]

“இரவுக் குறிக்கண் வந்த தலைவனிடம், இரவு நேரத்தில் நீ வருவதால், அணங்கு என்றும், களிறு என்றும், புலி என்றும் கருதி

மலையில் உள்ளோர் உன்னை கண்டு விட்டால் அதனால் வரும் துன்பம் பெரிது, தலைவியும் தாங்க மாட்டாள். அவள் இறந்து விடுவாள் என்றாள் தோழி”[21]

**பகற்குறி**

எயிற்புறத்தில் ஓர் குறிப்பிட்ட இடத்தில் தலைவன் தலைவி சந்திப்பது பகற்குறி எனப்படும். தினைப்புனம், அருவி போன்ற இடங்களாகும்.

தலைவி பெரிய காட்டில் முன்பு ஒரு நாள் தலைவனோடு களவொழுக்கத்தில் ஈடுபட்டாள். தற்போது தலைவனை பிரிந்த நிலையில் அவ்விடம் நினைவூட்டுகிறது. இதனால் அவள் கண்கள் கலக்கமடைகின்றன.

**“அகல் இருங்க கானத்து அல்குஅணி நோக்கி**

**தாங்கவும், தகைவரை நில்லா நீர்சுழல்பு”**[22]

என்ற பாடல் முன்னிலைப் புறமொழியாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது என்ற துறையில் அமைந்துள்ளது.

“பகற்குறி மறுத்து, இரவுக்குறி நேர்ந்து, அதுவும் மறுத்தமைபடத் தலைமகட்குத் தோழி சொல்லியது”[23]

“இரவுக்குறி நயந்த தலைமகள், பகற்குறிக்கண் வந்து நீங்குந் தலைமகன் சிறைப்புறத் தானாகத் தோழிக்குச் சொல்லியது”[24]

“பகற்குறிக் கண் செறிப்பு அறிவுறீஇத் தோழி வரைவு கடாயது”[25]

போன்ற துறைக்குறிப்புகள் பகற்குறியை புலப்படுத்துகின்றன.

“குறியிடம் சுட்டுபவள் தலைவி. இவ்உரிமை தலைவனுக்கு இல்லை”[26] என்று தொல்காப்பியர் குறிப்பிடுவார்.

### அல்லற்குறிப்படுதல்

தலைவன் செய்த குறி இயற்கையாக நிகழ்ந்து தலைவி அல்லகுறிப்படும் நிலையும் உண்டு. இதே நிலை தலைவனுக்கும் உண்டு.

முதல்நாள் தலைவன் தலைவியோடு கூடி இன்புற்றான். மறுநாள் குறியிடத்திற்கு வந்தும் அவளை காணாமல் மனம் வருத்தப்படுகிறது. அவள் நேற்று என்னைத் தழுவினாள். என் மார்பினை விடாது பொருந்தியும் கிடந்தனள் என்று நெஞ்சோடு கூறுகிறான்.

**“நடுங்கு அஞர் தீர முயங்கி நெருநல்**

**ஆகம் அடைத்ந் தோளோ”**[27]

என்ற பாடல் அல்லகுறிப்பட்டுழித் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது என்ற துறைக்குறிப்பில் அமைந்துள்ளது.

“அல்லற்குறிப்பட்டு மீளும் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது”[28]

“அல்ல குறிப்பிட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக் கொண்டு, அவன் பின்பு வந்துழி, அதற்குத் தோழி சொல்லியது”[29] என்பன அல்லற்குறி நிகழும் இடங்களாகும். இவை களவொழுக்கத்தில் மட்டுமே நிகழும்.

### பாங்கற் கூட்டம்

பாங்கற் கூட்டத்தில் தலைவன் பாங்கனிடம் தலைவியின் இயல்பும், அவளைக் கண்ட இடமும் கூறுவதாகப் பாடல் படைத்தல் அகப்பொருள் மரபாகும்.

“தலைவியோடு தனக்கு ஏற்பட்ட உறவினைத் தலைவன் தன் உயிர்த்தோழனாகிய பாங்கனுக்கு எடுத்துக்கூறி, நீ எனக்குத் துணையாக வேண்டுமென வேண்டுவான். அத்தோழன் குறிவழிச் சென்று தலைவி

நின்ற நிலையை உணர்ந்து வந்து உணர்த்திய பின் சென்று கூடுதல் பாங்கற் கூட்டமாகும்"[30]

**"சிறுகுடி குறவன் பெருந்தோட் குறுமகள்**

**நீரோ ரன்ன சாயல்**

**தீயோ ரன்னவென் னுரனவித் தன்றே"[31]**

எனும் இப்பாடல் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கிய தலைமகன் தன் தலைவியைப் பிரிந்த பிறகு, தன் வேறுபாடுகள் கண்டு வினவிய பாங்கனுக்கு, குறுமகள்பால் தான் கொண்ட காதலே அதற்குக் காரணம் என்பான்.

இவ்வாறு ஒவ்வொரு கூட்டத்திலும் தலைவியைப் பெற்று மகிழ்வான். பிரிந்ததும் அதை எண்ணிக் கலக்கமடைவான் தலைவன். இப்பாங்கற்கூட்டம் சங்க இலக்கியங்களில் தோழியிற்கூட்டம் கூறப்பட்ட அளவுக்குக் கூறப்படவில்லை.

**பாங்கியற் கூட்டம்**

தோழி வாயிலாகத் தலைவன் தலைவியை அடைந்து புணர்ந்தல் தோழியற் கூட்டம் எனப்படும்.

தன் தலைவியை அடிக்கடி காண்பதற்கு உதவி புரியுமாறு தலைவன் தோழியிடம் சென்று குறையிரந்து அவன் மதியை தன் மதியுடன், அதாவது தன் கருத்துக்கு இசையும்படி அவள் மதியை உடன்படுத்துவது 'மதியுடம் படுத்தல்' அல்லது பாங்கியற் கூட்டம் எனப்படுகின்றது.

தலைவன் தோழியை முன்னிட்டுக் கூடியதாக,

**"பைதல் ஒருகன்ல சேக்கும் நாடன்**

**நோய்தந் தனனே தோழி**

**பசலை ஆர்ந்த, நம் குவளைஅம் கண்ணே"[32]**

என்ற பாடலில் தலைவன் தோழியிற் கூட்டம் கூடி, ஆற்றும் வகையான் ஆற்றுவித்துப் பிரிய வேறுபட்ட கிழத்தி தோழிக்கு உரைத்ததாகத் துறைக்குறிப்பு காணப்படுகின்றது.

குறுந்தொகை 142வது பாடல் தோழியிடம் குறையிரந்ததாக பாடலின் இரண்டாவது துறையாகக் குறிக்கப்படுகின்றது.

**“பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது”**[33]

**“மதிஉடன்படுக்கும் தலைமகன் சொல்லியது”**[34]

இவ்வாறு தோழியை மதியுடம் படுத்தலை எண்ணிய தலைமகன் அவளைச் சேர்தல் ‘பாங்கியிடைச் சேரல்’ எனும் துறையாகவும், தலைவியும் தோழியும் தனித்து இருக்கும்போது இது நல்ல சமயம் எனத் தன் குறையைக் கூறுதல் ‘குறையுறத் துணிதல்’ எனும் துறையாகவும் கருதுவர். தலைவியும் தோழியும் தணித்து இருத்தல் அரிதேயாயினும் விதி இவர்களைக் கூட்டுவிக்க இணைந்து நிற்றலால் இவர்களுக்கு ஏற்பட்ட முட்டுகளெல்லாம் விலகிப்போக பாங்கிற்கூட்டம் இனிது நடைபெறும்.

## அறத்தொடு நிற்றல்

“கற்பென்னும் பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோர்க்கு வெளிப்படுத்தல் என்பது இத்துறையின் பொருளாகும். தலைவி ஏற்கனவே கற்பு நெறிப் பட்டுவிட்டாள் என்பதனை முதன்மையாக வலியுறுத்துவதே இத்துறையின் நோக்கமாகும்”[35]

எனவே களவைக் கற்பாக மாற்றும் இல்லறமாகிய அறத்தின் முக்கியக் கூட்டத்தை நிலைநிறுத்த உதவுவதால் இத்துறையை அறத்தொடு நிற்றல் என்பர்.

“இற்செறிப்பு, வெறியாட்டு, நொதுமலர் வரைவு முதலான வழியெல்லாம் பயனற்ற காலத்தில், ‘அறத்தொடு நிற்றல்’ என்றும், கற்பின் நிலை நிற்றல் என்றும் பொருள்படும். அறன் என்பது பல பொருள்களையும் தழுவிய பொதுச் சொல்லாயினும், ஈண்டு பெண்டிர்க்கே

உரிய முதற் பண்பான கற்பனையே குறிக்கும். இதனை, "அறன் என்பது தக்கது, தக்கதனைச் சொல்லி நிற்றல் தோழிக்கும் உரித்தென்றவாறு, அல்லதூஉம் பெண்டிர்க்கு அறம் என்பது கற்பு, களவின் தலைநிற்றல் என்பதூஉம்"37 என்று இறையனார் களவியலுரை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்ச் சொல்லகராதியில், "களவை முறையே வெளிப்படுத்தி நிற்றல் என்று பொருள் கூறியுள்ளார் கதிரைவேற்பிள்ளையவர்கள்"[38]

"தலைவியின் காதல் உண்மையைப் பெற்றோர்க்கு அறிவித்து, ஒப்புக் கொள்ள வைத்து மனத்தால் ஏற்றுக்கொள்ள வாழ்வியல் அறத்தின் நிற்றலுக்கு வழி செய்வதால்தான் இதற்கு 'அறத்தொடு நிற்றல்' என்று பெயர் வந்தது எனத் தமிழண்ணல் விளக்குவார்"[39]

"தலைவி ஒரு தலைவனிடம் காதல் உடையவள் என்ற உண்மையை வெளிப்படுத்துவதால் உண்மை என்னும் அறமும், கற்பு என்னும் அறமும் பாதுகாக்கப் பெறுதலின் இதனை அறத்தொடு நிற்றல் என்பார் கி.வா. ஜகந்நாதன்"[40]

இவ்வாறு பல அறிஞர்கள் பல காரணங்கள் கூறினாலும், களவைக் கற்பாக மாற்றும் இல்லறமாகிய அறத்தின் கூட்டத்தை இது நிலை நிறுத்த உதவுவதால் இத்துறையை அறத்தொடு நிற்றல் எனக் கருதலாம்.

அறத்தொரு நிற்கும் முறை ஒருவித ஒழுங்கு அமைப்பிலேயே நடைபெறுகின்றது. "தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை – தன்னையர்க்கும் களவொழுக்கச் செய்தி வெளிப்படுத்தப்பெறும்"[41] என்பார்.

தலைவி அறத்தொடு நின்ற பின்தான் தோழி பெற்றோர்க்கு அறத்தொடு நிற்பாள். இதை,

**“அறத்தொடு நிற்கம் காலத்தன்றி**

**அறத்தியல் மரபிலன் தோழி என்ப”**[42]

என்ற நூற்பா மூலம் விளக்குகிறார் தொல்காப்பியர்.

தோழி அறத்தொடு நிற்கும் முறைமையை,

**“எளித்தல் ஏத்தல் வேட்கையுரைத்தல்**

**கூறுதல் உசாஅதல் பாதீடு தலைப்பாடு**

**உண்மை செப்புங் கிளவியோடு தொகைஇ**

**அவ்ஏழுவகைய என்மனார் புலவர்”**[43]

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் அறத்தொடு நிற்றலை ஏழுபிரிவாகக் கூறுகிறார்.

தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக் கூறி, அதனைத் தமரறியக் கூறல் வேண்டுமென்றும் தலைவனுக்கு நம் வருத்தம் அறியக் கூறல் வேண்டும் என்றும் தலைவி கூறுகிறாள்.

**“நெஞ்சுஅமர் வியன்மார்பு உடைத்துஎன அன்னைக்கு**

**அறிவிப் பேம்கொல்? அயிலெம் கொல்? என”**[44]

எனும் பாடல் தலைமகள் வேறுபட்டமையறிந்த செவிலித்தாய்க்குத் தோழி அறத்தொரு நிற்குமெனத் தலைமகள் சொல்லியது என்ற துறைக்குறிப்பில் காணப்படுகின்றது.

“தோழி தலைவிக்கு உரைப்பாளாய் சிறைப்புறமாகச் சொல்லியது. வெறி அச்சுறீஇத் தோழி அறத்தொடு நிலை பயப்பித்ததூஉம் ஆம்”[45]

“நொதுமலர் வரைவின்கண் செவிலி கேட்குமாற்றால் தலைமகள், தோழிக்கு அறத்தொடு நிலை குறித்து உரைத்தது”[47]

“தமர் வரைவு மறுத்துழித் தோழி தாயார்க்கு அறத்தொடு நிற்ப, அவன் நற்றாய்க்கு அறத்தொடு நிற்ப, அவள் தன்னையர் முதலியோர்க்கு அறத்தொடு நிற்ப, அவரும் ஒருவாற்றான் உடன்பட்டமை பின் தலைவியின் குடும்பத்தால் இருவர் மீதும் குற்றமில்லை என்று கூறி

மணநாள் குறிக்கின்றனர்”[48] என்பன போன்ற மேற்கண்ட துறைக்குறிப்புகள் அறத்தொடு நிற்றலை தெளிவுறுத்துகின்றன. மேலும் இத்துறையின்கண் வரும் பாத்திரங்களுள் பெண்களே அதிகம் பங்கு வகிக்கின்றனர். பெரும்பாலும் தலைமக்களின் உணர்ச்சி வெளிப்பாடுகளுக்கே முதன்மையிடம் தந்திருக்கிறது.

**வெறியாடல்**

**“வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்”[49]**

எனும் நூற்பாவின் மூலம் தலைவிக்கு அவரின் உடல் வேறுபாடு கண்ட தாயார் அதனைப் போக்க எண்ணி வெறியாட்டு எடுக்கும் நிலை உருவாகிறது.

“தலைவி இற்செறிந்து அவளின் மேனிவேறுபாட்டிற்கான காரணத்தை வெறியயர்ந்து அன்னையர் காணமுற்படுவர். அச்சமயத்தில் தலைவி அச்சப்படுவாள்”[50]

**“.................................. அன்னை**

**பிறிதொன்று கடுத்தனள் ஆகி வேம்பின்**

**வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி”[51]**

என்ற பாடலில் தலைவியின் வருத்தம் தெய்வத்தால் நேர்ந்ததென்று கருதி வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்த்துவள் என் அன்னை இது நன்றோ? என தோழியிடம் கூறுகிறாள் தலைவி.

வெறியாட்டு நிகழும் களத்தின் கண் தலைவி நிற்க, தன்னை நாடி வந்த தலைவன் அவ்விடத்தே வருதலால் அவள் அஞ்சுகிறாள். இதனால் மறைந்து நின்று தலைவன் கேட்குமாறு, தோழிக்கு கூறுவாள் போல் தலைவி கூறியதை நற்றிணையில் காண முடிகின்றது.

**“யாங்குச் செய்வோம்கொல் தோழி ஓங்குகழைக்**

**காம்புடை விடரகம் சிலம்பப் பாம்பு உடன்று”[52]**

இப்பாடலில் ‘இனித் தலைவனோடு களவில் கூடி இன்புறுதல் வாயாது போலும்’ என்று தலைவின் கருத்தாக அமைந்துள்ளதை அறியலாம்.

“வரைவு நீட்டித்தவழித் தலைமகள் வேறுபாடு கண்டு வெறியெடுப்பக் கருதிய தாயது நிலைமை தலைமகட்குச் சொல்லுவாளாய், தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூறியது”[53]

“காப்பு மிகுதிக்கண் தலைமகள் மெலிவு கண்டு ‘தெய்வத்தினானாயிற்று’ என்று வெறி எடுப்புழித் தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றது”[54] போன்ற துறைகுறிப்புகள் வெறியாடுதல் பற்றியதாகக் சங்க குறிஞ்சிப் பாடல்களில் காணப்படுகின்றன.

**அலர்**

களவில், இருவர் தம்முள் ஏற்பட்ட காதல் பிறருக்குத் தெரியும் போதும், கற்பில் பிரிவின்போதும் அலர், ஆம்பலும் தோன்றும்.

**“அலரின் தோன்றும் காமத்து மிகுதி**

**களவும் கற்பும் அலர் வரைவு இன்றே”**[55]

என்ற தொல்காப்பிய நூற்பாவில் அலர் காமம் மிகுதியை உண்டாக்கும் என்பதும், அது களவுக்கும், கற்புக்கும் பொதுவாகுமென்றும் அறியலாம்.

தோழி, முருகனை ஒப்பவனாகின்ற நீ பகற்பொழுதில் வந்தால், அதனால் எழும் ஊரலர்க்கு யாம் அஞ்சுவோம் என்று தலைவனிடம் கூறுகிறாள்.

**“இயல்முருகு ஒப்பினை, வயநாய் பிற்படப்**

**பகல்வரின் கவ்வை அஞ்சுதும் இகல்கொள”**[56]

என்ற பாடல் செறிப்பறிவுறீஇ இரவு பகலும் வாரலென்று வரைவு கடாஅயது என்ற துறைக்குறிப்பில் அமைந்துள்ளதை காணலாம்.

**“கௌவை அஞ்சின் காமம் எய்க்கும்”**[57] என்றும்,

**“தொடிபழி மறைத்தலின் தோள்உய்ந் தனவே”**[58] என்றும்,

**"அன்னையும் அறிந்தனள் அலம் ஆயின்று"**[59] என்றும்,

**"வேய்புரை மென்தோள் பசலையும் ஆம்பலும்"**[60] என்றும்

சங்கக் குறிஞ்சிப் பாடல்கள் விளக்குகின்றன.

## இற்செறிப்பு

தலைவியின் அலரினை அன்னை அறிந்தபின் இல்லத்தை விட்டுப் போகாதபடி காவல் வைப்பர். தலைவி இதனை இற்செறிப்பு என்பர்.

**"தமர் தன் காத்த காரண மருங்கினும்"**[61]

என்று தொல்காப்பியர் குறிப்பிடுவர்.

தலைவனும், தலைவியும் களவொழுக்கத்தில் ஈடுபட, ஐயுற்ற தாய் தலைவியை இற்செறிக்கின்றாள். தலைவி முன்னேற்பாட்டின்படி இரவுக்குறியில் தலைவனுக்காக காத்திருக்கின்றாள்.

**"..................................நெடும்பெருங் குன்றத்து**

**பாடின் அருவி சூடி**

**வான்தோய் சிமையம் தோன்ற லானே"**[62]

என்ற அகநானூற்றுப் பாடல்களில் காணலாம். இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது என்ற துறைக்குறிப்பில் இப்பாடல் அமைந்துள்ளது.

"இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகனைத் தாம் காவல் மிகுதியால் புறப்பட்டு எதிர்கொள்ளப்பெறாதவழி, பிள்ளை ஞான்று தோழி, வரைந்து கொள்ளின் அல்லது இவ்வொழுகலாற்றின் இனிக்கூடல் அரிது என வரைவு கடாயது"[63]

**"அன்னை காக்கும் தொல்நலஞ் சினதயக்"**[64]

“காப்பு மிகுதிக்கண் தலைமகள் மெலிவு கண்டு, தெய்வத்தினாயாயிற்று என்று வெறி எடுப்புழித் தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றது”[65]

**“தாழ்செறி கடுங்காப்பின் தாய்முன்னர் நின்சாரல்”**[66]

மேற்கண்ட சான்றுகளால் தலைவி இல்லத்தாரால் இற்செறிக்கப்பட்டமை அறியலாகிறது.

ஊரார் தம் மகளைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் கூறித் திரிகின்றனர். மேலும் இவள் வெளியில் சென்றால் தன் குடும்ப மானம் கெட்டுவிடும் என்ற நோக்கத்தில் தலைவி இற்செறிக்கப்படுகின்றாள் என்பது அறிய முடிகின்றது.

தலைவன் பிரிவால் தலைவிக்குப் பசலை நோய் ஏற்படுகிறது. தொல்காப்பியர் இதனை ‘பசலை பாய்தல்’[67] என்ற மெய்ப்பாடாக விளக்குவார்.

தலைவியின் வேறுபாடு கண்ட செவிலித்தாய்க்கு தோழி கூறுகிறாள்.

**“பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு**
**நனிபசந் தனள் எனவினவுதி”**[68]

என்ற பாடலில் தலைவி பால் உண்ணாமல் இருந்தாள். உடல் பசந்து விட்டது. செவிலிக்கு ஐயம் அறவே தோழி விளக்குவதாக அமைந்துள்ளது.

**“பசலை ஆர்ந்த் நம் வேளைஅம் கண்ணே”**[69]

என்ற பாடல் வரிகளிலும்,

**“சிறுநுதல் பசத்தல் அஞ்சித்**
**சிறுமை உறுபவோ செம்புஅறி யலரே”**[70]

என்ற பாடல் வரிகளிலும்,

**“மேனி பசப்பது எவன்கொல்? அன்னாய்”**[71]

என்ற வரியிலும்,

**“வேய்புரை மென்தோள் பசலையும் ஆம்பலும்”[72]**

என்ற பாடல் வரியிலும் பசலை பாய்தல் பற்றி அறிய முடிகிறது. இது தலைவியின் பிரிவுத் துன்பத்தை வெளிக்காட்டும் முகமாக அமைகிறது.

**உடன்போக்கு**

பகல்குறி இரவுக்குறி நிகழ்ச்சிக்குப்பின் அலர் வெளிப்பட்டு, தலைவன் கூட்டம் பெறாது தவித்தான் அதன் பின்பு தலைவன் திருமணம் செய்து கொள்ளலே பெரிதும் விரும்பினான். அது செய்யாமல் போனால் ஒரு வழித்தணப்பான் அல்லது உடன்போக்கிற்கு இயல்வான். அலரால் அஞ்சிய தோழியால் வற்புறுத்தப்பட்டு தன்னூர்க்கு அழைத்துச் செல்வான். இவ்வுடன்போக்கை ஒரு திருமண நிகழ்ச்சியாகக் கருதுவது உண்டு.

அலரும் ஆம்பலும் களவினை வெளிப்படுத்தும் எனத் தலைவி அஞ்சிய நிலையில் தலைவி இற்செறிக்கப்படுகிறாள். இற்செறிப்பிலிருந்து அவளை விடுவிக்கும் தோழியோடு பேசி முடிவு செய்து ஒரு நாள் தேர்ந்தெடுத்து அந்நாளில் யாரும் அறியாவண்ணம் தலைவியைத் தன்னுடன் அழைத்துச் செல்வது ‘உடன்போக்கு’ எனப்படும்.

“இவ்வுடன்போக்கு பாலைத்திணையின் ஒரு பிரிவு”[73] எனப் பேராசிரியர் இரா.நா.கு. சுட்டுகின்றார்.

“உடன்போக்கு களவின் இறுதியாகவும் கற்பின் தொடக்கமாகவும் அமையும்”[74] என்பர்.

உடன்போக்கு கற்புக்கும், களவுக்கும் இடைப்பட்ட நிலையில் உள்ளதை, உடன்போக்கோடு களவொழுக்கம் முடிவுறுவதென்றும் மேல்வருஞ்செய்திகள் கற்பென்னும் கைகோளின் இலக்கணம்

கூறப்புக்கவிடத்தே, ‘மறை வெளிப்படுதலும்’ என உடன்போக்கிற்குப் பின் நிகழும் மறை வெளிப்பாட்டைக் கற்புமுறையின் தொடக்கமாக ஆசிரியர் ‘எம்மனை முந்துறுத்தகுமோ, தம்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே’ எனத் தலைவி உடன்போய காலத்து வருந்திக் கூறிய நற்றாய் கூற்றை அம்மறை வெளிப்பாட்டுக்கு உதாரணங்காட்டுவார். திருவள்ளுவரும் அலறிவுறுத்தலொரு களவியலை முடித்துப்பின் கற்பியல் கூறத் தொடங்குதலும் நோக்கத்தக்கது”[75]

“நொதுமலர் வரைவு போன்ற இன்னாச் சூழ்நிலைகளைக் கடத்தற்கு இருவழிகள் உள்ளன. ஒன்று அறத்தொடு நிற்றல், மற்றொன்று உடன்போக்கு. இவற்றுள் ஒன்று நிகழின் பிறதொன்று நிகழாது. அறத்தொடு நின்றபின் உடன்போகார். உடன்போயபின் அறத்தொடு நிற்றல் நிகழ வாய்ப்பில்லை. இவ்விரண்டில் ஒன்றே களவு நாடகத்தின் இறுதிக் காட்சியாகும்”[76]

பொதுவாக, “சங்க காலத் தமிழர்களிடம் நான்கு வகையான திருமண முறைகள் இருந்தன. முதலாவது பெற்றோர் பார்த்து முடித்து வைக்கும் திருமணம். இதற்கு சங்க இலக்கிய அகநானூற்றுப் பாடல்கள் சான்று. இரண்டாவது பெண் வீட்டாருக்குப் பொருள் கொடுத்துச் செய்து கொள்ளும் திருமணம். இதற்குச் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்கள் சான்று. மூன்றாவது பெண் வீட்டார் மீது போர் தொடுத்து அதன்வழி முடிக்கும் திருமணம். இதற்குப் புறநானூற்றுப் பாடல்கள் சான்று. நான்காவது தலைவனும் தலைவியும் உடன்போக்குச் சென்று முடித்துக் கொள்ளும் திருமணம். இதற்கு சங்க இலக்கியப் பாலைத் திணைப் பாடல்களே சான்று ஆகும்”[77] என்பர்.

உடன்போக்கு செல்லுதல் என்பது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலத்தமிழர்களிடமும் இருந்த வழக்காறுகளாகும்.

பொதுவாக, பெற்றோர் தலைவன் தலைவி காதலை ஏற்றுக் கொள்ளாததால் அவர்கள் உடன் போக்குச் சென்றனர் என்று சிலர் கருத்துரைப்பதுண்டு. ஆனால் வ.சுப. மாணிக்கம் அவர்கள் இதனை மறுத்துரைப்பார்.

“இற்செறிப்பு, ஊரலர், வெறியாட்டு, நொதுமலர் வரைவு என்பன போன்ற சூழ்நிலைகளைக் கடதற்குரிய வழிகளில் ஒன்றுதான் உடன்போக்கு என்பார் அவர்”78

**உடன்போக்கின் வகைகள்**

உடன்போக்கின் வகைகளை எட்டாகப் பிரிப்பர். அவை,

**“போக்குஅறி வுறுத்தல் போக்குடன் படாமை**
**போக்குஉடம் படுத்தல் போக்குஉடன் படுதல்**
**போக்கல் விலக்கல் புகழ்தல் தேற்றல் என்று**
**யாப்புஅமை உடன்போக்கு இருநான்கு வகைத்தே”**[79]

என்று நம்பியகப் பொருள் விளக்குகிறது.

எனவே உடன்போக்கு என்பது களவு வாழ்க்கையில் ஈடுபட்ட தலைவனும் தலைவியும் வரைந்து கொள்ளும் பொருட்டுத் தமரைப் பிரிந்து செல்லுதல் ஆகும்.

உடன்போக்கு ஒருபடுத்து மீளும் தோழி தலைமகற்குக் கூறியதாக துறை குறிப்பில் அமைந்த பாடல்.

**“பெருநன்று ஆற்றின் பேணாரும் உளரே**
**ஒருநன்று உடையவள் ஆயினும் புரிமாண்டு**
**புலவி தீர அளிமதி இலைகவர்பு”**[80]

இது தலைவிக்குத் தலைவன்பால் உள்ள அன்பை வெளிப்படுத்திய தோழி கூற்றாக வருகின்றது.

**“குன்றகுறவன் ஆர மறுத்துஎன**

**நறும்புகை சூழ்ந்து காந்தள் நாறும்**

**வண்டிமிர் சுடர்றுதல் குறுமகள்**

**கொண்டனர் செல்வர்தம் குன்றுகெழு நாடே”[81]**

என்ற பாடல் தோழி தலைவிக்கு உடன்போக்கைப் பற்றி உணர்த்துவதாக அமைந்துள்ளது.

**பிரிவு**

ஐந்து உரிப்பொருள்களுள் பாலைக்குரிய பிரிவு பற்றிச் சில மரபுகளைத் தொல்காப்பியர் சுட்டுகின்றார். மற்ற உரிப்பொருள்களுக்கு இவ்வாறான சிறப்பு வரையறை சுட்டப்படவில்லை. பிரிவின் சிறப்புப் பற்றி இங்குக் கூறப்படுகிறது.

பிரிவு ஐந்து வகையாகத் தொல்காப்பியத்துள் சுட்டப்பட்டுள்ளது.

**“ஓதல் பகையே தூது இவை பிரிவே”[82]**

**“பொருள்வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே”[83]**

**“பரத்தை வாயில் நால்வர்க்குமுரித்தே”[84]**

என்ற நூற்பாக்களால் ஓதற்பிரிவு, பகை காரணமாகப் பிரியும் பிரிவு, தூது காரணமாகப் பிரியும் பிரிவு, பொருள்தேடப் பிரியும் பிரிவு, பரத்தையிற் பிரிவு என்ற ஐந்து வகைப் பிரிவு தொல்காப்பியர் சுட்டுகின்றார்.

இந்த ஐந்து வகைப் பிரிவுகளின் காலவரையைச் சுட்டும்போது,

**“கல்விப்பிரிவு – மூன்றாண்டு**

**மற்றைய நான்கும் – ஓராண்டுக்குள்”[85]**

என்று தொல்காப்பியர் வரையறுக்கின்றார். இவை பிரிவுப் பற்றித் தொல்காப்பியர் குறிக்கும் சிறப்பு வரையறைகள் ஆகும்.

தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை எழுதிய இளம்பூரணர், பொருள் காரணமாகப் பிரியும் பிரிவு வணிகர்களுக்கும், வேளாளர்க்கும் உரியதாகச் சுட்டியுள்ளார்.

அகநானூற்றில் 41 பாடல்களும், நற்றிணையில் 19 பாடல்களும், குறுந்தொகையில் 11 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 7 பாடல்களும், பாலைக்கலியில் 16 பாடல்களும் என 94 பாடல்கள் தலைவனின் பொருள் பிரிவைப் பற்றி வெளிப்படையாகவே சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

இவ்வாறான பொருள் பிரிவுப் பாடல்களை இருவகைப்படுத்தி கூறலாம். முதலாவது திருமணத்திற்கு முந்தையது. இரண்டாவது திருமணத்திற்கு பிந்தையது ஆகும். (வரைவிடை வைத்து பிரிதல்), இரண்டாவது இல்லறத்திற்கான பொருள் தேடலாகவும் இருந்துள்ளது.

### களவுப் பிரிவு

களவின்கண் கூடிய தலைவன் தலைவியைப் பிரிவான். இச்செயல் களவு காலத்தில் தலைவன் பிரிகின்ற பிரிவெனக் கூறுவர். களவுப் பிரிவின் வகைகளாக,

**"ஒருவழித்தணத்தல் வரைவிடை வைத்துப்**
**பொருள்வயிற் பிரிதல் என்று இருவகைத்து ஆகும்**
**நிறைதரு காஆல் மறையினில் பிரிவே"**[86]

என்று நம்பியகப்பொருள் கூறுகிறது.

### ஒருவழித்தணத்தல் பிரிவு

ஒரு ஊருக்குள்ளோ ஒரு நாட்டிற்குள்ளோ தலைவன் பிரிதல் ஆகும். அதாவது, காதல் பற்றி ஊரார் பேசும் அலரைக் (பழிச் சொல்லைக்) குறைப்பதற்காகத் தலைவி தலைவியைக் காண வராதிருத்தல் ஆகும். இதனை,

**“ஆம்பலும் அலம் களவுவெளிப் படுதலின்**

**அங்கதன் முதல்வன் கிழவ னாகும்”[87]**

என்று தொல்காப்பியர் விளக்குவார். சில நாட்கள் அவனது ஊரிலேயே தங்கி விடுவான். இத்தகைய குறுங்காலம் பிரிவே ஒருவழித்தணத்தல் ஆகும். இதனையே ‘வேண்டாப் பிரிவு’ என்று தொல்காப்பியர் தோழி கூற்றில் கூறுவார்.

**“புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்”[88]**

என்ற நூற்பாவால் அறியலாம்.

“ஒருவழித்தணத்தலை நாற்கவிராச நம்பி எழு வகைகளாகப் பிரிப்பர். இதன் விரியாகப் பன்னிரு கிளவிகளையும் கூறுவார்”[89]

சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் இவ்வகைப் பிரிவைக் காணலாம்.

தலைவன் பிரிந்து சென்ற பின் தலைவி வருந்துகிறாள். நம் காதலர் விரும்பாராயினும் அவரைப் பன்முறை கண்களால் கண்டாலே மனத்திற்கு இனிமையைத் தரும் என்கிறாள்.

**“............................. காதலர்**

**நல்கார் நயவார் ஆயினும்**

**பல்கால் காண்டலும் உள்ளத்துக்கு இனிதே”[90]**

என்ற பாடல் பிரிவிடை ஆற்றாமையான் தலைமகள் தோழிக்கு உரைத்தாக துறைக்குறிப்பு அமைந்துள்ளது.

**“பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது”[91]**

“தலைமகன் ‘ஒருவழித்தணப்பல்’ என்று கூறிய அதனை அவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது”[92]

“ஒருவழித்தணத்து வந்த தலைவற்குத் தோழி, தலைவியாற்றாமையும் ஆற்றுவித்தலது அருமையுஞ்சொல்லி வரைவு கடாயது”[93]

“தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது”[94] போன்ற துறைக்குறிப்புகள் வழி ஒருவழித்தணத்தல் பற்றிய செய்தியை அறியலாம்.

**வரைவிடை வைத்துப் பிரிதல்**

ஐவகைப் பிரிவினுள் பொருள் வயிற் பிரிவே பரந்தது ஆகும். எல்லோர்க்கும் உரியது. களவிற்கும் கற்பிற்கும் பொதுவாய் நிற்பது. எனவே தான் இத்துறை சங்கப் புலவர்களின் நெஞ்சை விட்டு அகலாது நின்றது எனலாம்.

தலைவியை விட்டுத் தலைவன் பொருள்வயிற் பிரிதலை தலைவிக்குப் பிரிவு அறிவுறுத்தல், தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்கல் என இருவகையாகப் பகுத்து தொல்காப்பியர் கூறுவர்.

“பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது”[95] என்ற துறைக்குறிப்பில் பிரிவு அறிவுறுத்தல் பற்றி கூறப்பட்டு உள்ளது.

பொருள் காரணமாகப் பிரிகின்ற தலைவன், தன் பிரிவினால் தலைவிக்கு ஆகும் மன அழிவும், உடல் அழிவும் கருதிப் பார்த்துத் தன் பிரிவாகிய செலவினைத் தவிர்க்க முயல்வான். தலைவன் நெஞ்சுக்குக் கூறியதாக அமைந்த பாடல்கள் இவ்வகைப்பட்டதே ஆகும். தலைவன் தன் பிரிவை தானே தவிர்ப்பதாக அமைவது ‘செலவழுங்குதல்’ எனப்படும்.

சில காலம் தலைவன் தவிர்க்கவியலாது பிரியக் கருதும் காலத்தில் பிரிகின்ற காலத்தில் தலைவியின் தோழி தலைவனின் பிரிவினைத் தவிர்க்க செய்வாள். இது ‘செலவழுங்கல்’எனும் அகத்துறையினுள்

அடங்கும். இவ்விரு துறைகளில் செலவழுங்கல் பாடல்களாகச் சங்க இலக்கியத்தில் நூற்றைம்பதுக்கும் மேற்பட்ட காணக் கிடக்கின்றன.

பொருள் காரணமாகத் தலைவன் தலைவியை பிரியவிருக்கும் சூழலில் தலைவியின் துன்பநிலையைக் கூறி அவனது செலவினைத் தவிர்க்கும் தோழியின் செயலாக செலவழுங்குவித்தல் துறை அமைகின்றது.

**"விரித்திரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்**
**அரிதுபெறு சிறப்பின் புத்தேள் நாடும்**
**இரண்டும் காக்கின் சீர்சா லாவே"**[96]

என்ற பாடல் வரிகள் தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது (பொருள்) வலித்த நெஞ்சிற்குச் சொல்லி செலவு அழுங்கியதூஉம்ஆம் என்ற துறையில் அமைந்துள்ளது.

தலைவன் பொருளுக்காகத் தலைவியைச் விட்டுப்பிரிந்து சென்றான். அப்போது தலைவி வருத்தப்படுகிறாள். தோழி ஆறுதல் கூறுகிறாள்.

**"தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை**
**வாழ்தும என்ப"**[97]

என்ற பாடலில் தலைவன் வினை முடித்து வரும் வரை காத்திருப்போம் என்று தோழிக் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. பிரிவு உணர்த்தப்பட்ட தோழி, தலைமகளை முகம் புக்கது என்று இதன் துறையாகும்.

"வரைவிடை வைத்து பிரிவின்கண் அவனை நினைவு விடாது ஆற்றாளாகிய வழி சிறிது மறந்து ஆற்ற வேண்டும் என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது"[98]

“வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்துத் தலைமகள் ஆற்றாளாகத் தோழி தலைமகளை இயற்பழிப்பத் தலைமகன் இயற்பட மொழிந்தது”[99] போன்ற துறைகளின் வாயிலாக வரைவிடை வைத்து பிரிதல் நிலையை அறிய முடிகின்றது.

தலைமகன் தலைவியை விட்டு பரத்தையிடம் சென்று வருகிறான். இதனைப் பரத்தையர் பிரிவு என்பர்.

**“திருமனைப் பல்கடம் பூண்ட**
**பெதுமுது பெண்டிரேம் ஆகிய எமக்கே”**[100]

என்ற பாடலில் தலைவன் பரத்தையிடம் சென்றதை ஊர் மக்கள் அறிவர். அவர்களின் பழிச்சொல்லை நாம் ஏன் கேட்க வேண்டும்? என்று தலைவி தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளது. தலைமகன் பரத்தையிற் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள் ஆற்றல் வேண்டி தோழி சொல்ல, தலைவி இயற்பட மொழிந்ததாக துறை அமைந்துள்ளது.

## ஆற்றுவித்தல்

தலைவனின் பிரிவால் ஆற்றாது வருந்தும் தலைவியைத் தோழி ஆற்றுவிப்பது அகத்துறைகளில் ஒன்றாகும். பொருளீட்டுவதற்காகத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், குறித்தப் பருவத்தில் வாராமல் காலம் தாழ்த்தியிருந்தான். பிறிவாற்றாமையால் பெரிதும் வருந்துகின்ற தலைவியைத் தோழி நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என்று கூறி தலைவியை ஆற்றுவிக்கின்றான்.

**“யாங்குஉணர்ந்து உய்குவன் கொல்என மடுத்த**
**சாந்த ஞெகிழி காட்டி**
**ஈங்கு ஆயினவால் என்றிசின் யானே”**[101]

என்ற பாடல் வரைவிடை மெலிவு ஆற்றுவிக்கும் தோழி, தலைமகனுக்கு சொல்லியது என்ற துறைக்குறிப்பில் அமைந்துள்ளது. தலைவியது

ஆற்றாமையைத் தலைவனிடம் எடுத்துக்கூறி வரைவுக்கு வற்புறுத்துவதை இங்குக் காண முடிகிறது.

"வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாள் எனக் கவன்று வேறுபட்ட தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தது"[102]

அகத்துறைகளில் தலைமகள் தோழியை ஆற்றுவிப்பதாக சில பாடல்களில் கூறப்பட்டுள்ளது. இல்லறம் நடத்துவதற்குமுன் திருமணம் இனிதே நடக்கப் பொருள் அவசியம் என்பதைக் காரணம் கூறிப் பிரிகின்றான் தலைவன் என்றால் திருமணத்திற்குப் பிறகு இல்லறம் இனிதே நடைபெறுவதற்கும் பொருள் அவசியம் என்பதை உணர்த்துவதாக இத்துறைகள் அமைந்துள்ளது என்பது அறிய முடிகின்றது.

பொருள் வயின் பிரிதல் நிலையிலும், போர்வயின் புரிதல் நிலையிலும் பிரிவாற்றாதிருக்கின்ற தலைவியரைத் தோழியர் ஆற்றுவிக்கும் செய்தி கூறும் பாடல்களாகக் குறுந்தொகையில் 17 பாடல்களும், நற்றிணையில் 14 பாடல்களும், அகநானூற்றில் 28 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 12 பாடல்களும் கலித்தொகையில் 9 பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

**வரைவு**

வரைபொருளுக்காகப் பிரிந்து சென்ற தலைவன், நல்ல முறையில் பொருளீட்டிக் கொண்டு வந்தான். முதியோர்கள் வாயிலாக அமைய வரைவினை மேற்கொள்வான். வரைதலைப்பற்றி,

**"வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று**
**ஆயிரண்டென்ப வரைதல் ஆறே"**[103]

என்று தொல்காப்பியர் சுட்டுவார். அதாவது புறத்தார்க்குத் தெரிந்த மன்பு மணந்து கொள்ளுதல், புறத்தார்க்குத் தெரியாது மணத்தல் என மணத்திற்குரிய வழிகள் இருவகைப்படும் என்கிறார்.

வரைவு என்பது தலைமகன் தலைமகளை அவளுடைய பெற்றோர் முதலானோர் கொடுப்பவும் கொடாது இருக்கவும் வதுவைச் சடங்கொடு பொருந்த மணம் செய்து கொள்ளுதல் ஆகும் என்று நம்பியகப் பொருள் இலக்கணம் கூறுகிறது.

**"வரைவுஎனப் படுவது உரவோன் கிழத்தியைக்**
**குரவர் முதலோர் கொடுப்பவும் கொடாமையும்**
**கரணமொடு புணரக் கடிஅயர்ந்து கொளலே"**[104]

என்ற நூற்பாவின் வழி அறியலாம்.

வரைவிற்குரிய நிகழ்ச்சிகள் நடந்துகொண்டிருக்க, இதுகாறும் தலைவன் பிரிவை ஆற்றியிருந்தற்காக தோழி பாராட்டுகின்றாள். அப்பொழுது தலைவி தோழியை நோக்கி, தலைவன் நாட்டிலிருந்து வந்த காந்தளை நட்டு வளர்த்துப் பிரிவை ஆற்றியிருந்தாகக் கூறுகிறாள்.

**"............................................ அவர்மலை**
**மாலை பெய்த மணங்கமழ் உந்தியொடு**
**காலை வந்த முழுமுதல் காந்தள்**
**மெல்இலை குழைய முயங்கலும்**
**இல்உய்த்து நடுதலும் கடியா தோளே"**[105]

என்று கபிலர் பாடல் குறிப்பிடுகிறது. அன்னையும் தன் காதலுக்கு உடன்பட்டாள் என்பதை காந்தள் கிழங்கை நடுவதை விலக்காமலிருந்ததைக் கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

"செலிவிக்கு அறத்தொடு நின்ற தோழி, அவளால் வரைவு மாட்சியமைப்பெற்ற பின்பு, இவள் இவ்வாறு பெற்ற வருத்தமெல்லாம் நின்னிற் றீர்ந்தது என்பது குறிப்பிற்றோன்ற அவட்குச் சொல்லியது"[106] என்ற துறைக்குறிப்பு அமைந்துள்ளது.

## நொதுமலர் வரைவு

தொல்காப்பியர் 'வேற்று வரைவு' என்று சுட்டும் இத்துறையை நச்சினார்க்கினியர், 'நொதுமலர் வரைவு' என்று குறிப்பிடுகின்றார். களவு நெறியில் மரபு வழிப் போராட்டங்கள் தொடர்ந்து தலைவியிடத்து நிகழ்ந்து வந்தாலும், அவை பொருட்படுத்தப்படுவதில்லை. ஆனால், நொதுமலர் வரைவுக்கு அஞ்சுகிறாள். அயவலர் வரைவுடன் வந்தபோது, தோழி அறத்தொடு நின்றும் தலைவி அறத்தொடு நிற்குமாறு செவிலிக்குக் குறிப்பால் உணர்த்துவர். தலைவனுடைய பெற்றோர்களே மணம் பேச வந்தபோதும் உடன்படுவரோ என்ற ஐயம் தலைவிக்கு ஏற்படுவதுண்டு. நொதுமலர் வரைவினை முறியடிக்கத் தலைவி உண்ணா நோன்பும் இருந்திருக்கிறாள்.

"வெறியாட்டுக்கு அஞ்சாத தலைவி, நொதுமலர் வரைவிற்கு அஞ்சுகின்றாள். வெறியாட்டு நடந்த பின்னரும் களவொழுக்கம் நீடித்தலும் உண்டு"[107]

காதலர் களவு நீடிப்பால் பெரிதும் பாதிக்கப்படுவது தலைவியே ஆவாள். அத்தலைவியின் உணர்வும் நெஞ்சக் குமுறலும் புலவர்கள் தம்முடைய பாடல்கள் வழி வெளிப்படுத்துகின்றனர். அவை சங்க இலக்கியத்திற்கே உயிர்ப்பாக அமைகின்றன. நொதுமலர் வரைவுப் பாடல்கள் சங்க இலக்கியங்களுள் விரவிக் காணப்படுகின்றன.

தலைவியை மணமுடிக்க அயலவர் வரைவு வேண்டி வந்தபோது, தலைவியின் உடன்பாட்டோடு செவிலித்தாய் கேட்பத் தோழி,

**"அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி**
**எம்மின் வருகுவை நீயெனப்**
**பொம்மல் ஓதி நீவி யோளே"**[108]

என்று கூறுகிறாள். அதாவது செறிந்த வளையலை உடைய தலைவியே உன்னுடைய முதிர்ந்த அறிவுடனே எம்முடைய இல்லத்திற்கு வரக்கடவை என்று கூறி, உனது நீண்ட கூந்தலை தடவிய தலைவன் இன்று எங்கு உள்ளானோ? என்று கூறித் தலைவி வேற்று வரைவுக்கு உடன்படாமையை எடுத்துக்கூறிகின்றாள். வேற்று வரைவைத் தோழி மட்டுந்தான் தடுத்து நிறுத்துவாள் என்பதில்லை. தலைவியும் மரபோடு தடுப்பாள்.

“தன்மனத்தைக் கொள்ளைக் கொண்ட தலைவனுடைய பெற்றோர்களே மனம்பேசவரின் தலைவியின் மகிழ்ச்சிக்கு எல்லையேது?”[109]

அந்த மகிழ்ச்சியிலும் அவளுக்கு ஓர் இடர்ப்பாடு இருக்கத்தான் செய்கிறது. “தம் பெற்றோர் வரைவுக்கு உடன்படுவரோ? அன்றி மறுப்பரோ? என்று நினைந்து வருந்துகின்றாள். முந்திச் சென்ற தன் காதலை வெளிப்படுத்தவும் நாணம் இடம் கொடுக்காமல் தடுமாறுகின்றாள். இதனைக் கண்ட தோழி தமர் வரைவு பேசுமிடத்துச் சென்று சான்றோர் முகக்குறிப்பையும் அவர் தம் கூற்றையும் அறிந்து வருகின்றாள். நன்று நன்று எனத் தம்தமர் உம்முடைய வருகையால் பெருமையுடையது என்று கூறி மகிழ்கின்றனர்”[110]

எனவே நொதுமலர் வரைவு சங்கக் குறிஞ்சிப் பாடல்களில் பரவலாகக் காணப்படினும், வேலன் வெறியாட்டைப் போன்றோ, அறத்தொடு நிற்றலைப் போன்றோ மிகுந்த சிறப்புப் பெற்ற துறையாக இடம்பெறவில்லை. இத்துறை களவு வாழ்க்கையைக் கற்பு வாழ்க்கைக்குச் சமுதாய மரபோடு அழைத்துச் செல்கின்றது.

## வரைவு மலிதல்

தலைவியை அவளின் தமர் கொடுக்க மறுத்த நிலையில் அவளை உடன்போக்கில் அழைத்துப்போய்த் தன் ஊரறியக் கரணத்தொடு கூடிய வதுயை நடத்தி கூடி மகிழ்தலும் வரைவு மலிதல் எனப்படும்.

"வரைவு மலிதல் என்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலியவற்றான் மகிழ்தல்"[111] எனப் பேராசிரியர் விளக்கம் தருகிறார்.

"தலைமகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகளுக்குச் சொல்லியது"[112] என்ற துறை அகநானூற்றில் அமைந்துள்ளது. அதாவது தலைமகன் தான் விரைந்து வந்து தலைமகளை மணந்து கொள்வதாகத் தோழியிடம் உறுதி கூறினான். இற்செறிப்பிலே இருந்த தலைவியிடம் தோழி வந்து அந்த நல்ல செய்தியை மகிழ்ச்சியோடு கூறுகின்றாள்.

"வரைவு மலிவு கேட்ட தலைமகட்குத் தோழி, முன்னாளில் தான் அறத்தொடு நின்றமை காரணத்தால் இது விளைந்தது என்பதுபடக்கூறியது"[113] போன்ற துறைக்குறிப்புகள் வழி வரைவு மலிதல் பற்றிய செய்திகளை அறிய முடிகிறது.

## வரைவு கடாதல்

வரைவு கடாதல் அல்லது குறைநயப்பித்தல் தோழி செயல் ஆகும். தலைவன் இடைவிடாமல் தலைவியைப் பகற்குறியும் இரவுக்குறியும் காணத் தொடர்ந்து வருவதால் ஊர் அலர் தோன்றுகின்றது. இவ்வலரே இவர்களது களவை வெளிப்படுத்தி நிற்கின்றது. ஆம்பல், அலர் தோன்றுவதற்கு தலைவனே காரணமாகிறான். களவு வெளிப்படுவதால் தலைவிக்கு இற்செறிப்பு, வெறியாட்டு முதலிய கொடுமைகள் நேர்கின்றன. இவற்றைக் கண்ட தோழி, தலைவனிடம் சென்று தலைவியை வரைதல் வேண்டுமென எவ்வெவ் சூழல்களில் கூற

இயலுமோ, அச்சூழல்களில் எல்லாம் தலைவனைக் கனிந்து கூறியும் கடிந்து பேசியும் வேண்டுவாள். இவ்வாறு தலைவியைத் திருமணம் செய்து கொள் என வேண்டுதல் வரைவு கடாதல் எனப்படும்.

“பகல் வருவானை இரவு வருக என்றது”[114] என்னும் துறையில் தலைவனை களவு நுகர்ச்சியிலே நிலைத்துவிடாமல் வரைந்து கோடல் முயற்சியிலே ஈடுபட வேண்டும் என தோழி விரும்புகிறாள். அவனைப் பகலில் வருவதை நிறுத்தி இரவு வருக என்று சொல்பவளே போல், இரவுக்குறியின் ஏதத்தையும் உரைத்து, வரைந்து கோடலை மேற்கொள்ளுமாறு வற்புறுத்துகின்றாள்.

தலைவியின் உயிர் மிகச் சிறியது. காமமோ மிகப்பெரியது. அதனால் விரைந்து தலைவியை மணந்து கொள் என்று தோழி கூறுகிறாள்.

**“சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு இவள்**
**உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே”**[15]

என்ற குறுந்தொகைப் பாடல் தெளிவுபடுத்துகிறது. ‘இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு, வரைவு கடாயது’ இதன் துறையாகும்.

“களவொழுக்கம் வெளிப்பட்டமையும், தம் மெலிவும் உணர்த்தித் தோழி உடன்போக்கு நயந்தாள் போன்று வரைவு கடாவியது”[116]

“தலைவி துயர் ஆற்றாமை உணர்ந்த தோழி வரைவு கடாயது”[117]

“ஒருவழித் தணந்து வந்த தலைவற்குத் தோழி, தலைவியாற்றாமையும் ஆற்றுவித்தலது அருமையுஞ் சொல்லி, வரைவு கடாயது”[118] போன்ற சங்க குறிஞ்சிப் பாடல் துறைகளின் மூலம் வரைவு கடாதல் குறிப்புகளை அறிந்து கொள்ள முடிகிறது.

**வரைவு நீட்டித்தல்**

வரைவு நீட்டித்தலில் தலைவன் பெரும்பங்கு கொள்கிறான். இச்செயலில் தலைவி பெரிதும் துன்புறுவாள். பலவற்றையும் எண்ணிக் கலக்கமடைவாள். தோழி தலைவியை மணம் செய்ய வற்புறுத்துவாள். தலைவன் அவளிடம் வரைவோடு வருவேன் என்று உடன்பட்டுக் கூறிவிட்டு, மேலும் வரைவு நீட்டிப்பான். அப்பொழுது தோழி அவனை இடித்துக் கூறி மணம் செய்ய மீண்டும் விரைப்படுத்துவாள். இத்துறை சங்கக் குறிஞ்சிப் பாடல்களில் சில இடங்களில் காணலாம்.

தலைவன் வரைவு நீட்டித்தவிடத்துத் தலைவி தோழிக்குச் சொல்லியதாய் வரும் துறையில், தனக்கும் தலைவனுக்கும் ஏற்படட களவு மணத்தை அறிவார் யாருமில்லாதபோது அவனாகவே அருள் செய்து வரைந்து கொள்ள வேண்டியது போல வருகின்றது. இதனை,

**“யாருமில்லைத் தானே கள்வன்**
**தானது பொய்ப்பின் யானெவன் செய்கே”**[119]

என்ற குறுந்தொகைப் பாடல் வரிகள் உணர்த்துகிறது.

“வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைவி, தோழிக்கு வன்புறை எதிரழிந்து சொல்லியது”[120] போன்ற துறைக்குறிப்புகள் தலைவன் வரைவை நீட்டித்து களவின்பத்தில் ஈடுபட்ட செய்திகளையும், வரைவிடை வைத்து பொருள் காரணமாக பிரிந்த செய்திகளையும் அறியலாகிறது.

**கையுறை ஏற்றல்**

தன் அன்பை வெளிகாட்ட வேண்டித் தலைவன் தலைவிக்கு தழையாடை, மலர் முதலியவற்றைக் கையுறையாகத் தருவான். அவற்றை ஏற்பதும், மறுப்பதும் தலைவி செயல் ஆகும்.

தலைவன் தழையாடையை தலைவியிடம் கொடுக்குமாறு தோழியிடம் கொடுத்தான். மலைநாடனாகிய தலைவன் எனக்கு இன்று உடுத்தும் தழையாடையைத் தந்தான். அதனை உடுத்தினால் தாய் சினம் கொள்வாள். தலைவனிடம் திருப்பிக் கொடுத்தால் அவன் வருந்துவானோ? என்று அச்சமாக இருக்கிறது என்று புலம்புகிறாள்.

**"உடுக்கும் தழைதந் தனனே யாம் அஃது**
**உடுப்பின் யாய் அஞ்சுதுமே கொடுப்பின்**
**கேளுடைக் கேடுஅஞ் சுதுமே"**[121]

என்ற பாடலில் அறியலாம். இப்பாடல் தோழி, தழை ஆடையேற்றுக் கொண்டு நின்று தலைமகன் குறிப்பின் ஓடியது என்ற துறையில் அமைந்துள்ளது.

தலைவன் கையுறையை தோழியிடம் கொடுக்கிறான். அதைத் தோழி மறுக்கிறாள். "குறிஞ்சி நிலத் தலைவனே! வீரக்கழல் அணிந்த முருகனின் குன்றத்தில் இரத்தம் போன்று சிவப்பாய்ப் பூக்கும் செங்காந்தள் மலர்கள் அதிகமாகும். எம்மிடம் செங்காந்தள், தழையுடை உள்ளது"[122] என்று கூறி மறுத்ததாகக் குறிந்தொகைப் பகர்கிறது.

"தலைமகன் ஆற்றாமைக்கண்டு கையுறை ஏற்ற தோழி, தலைமகள் தழை ஏற்க வேண்டிக் கூறியது"[123]

கற்பிற்குரிய பரத்தமையால், கையுறையை அளிப்பதாகவும் கூறப்பட்டுள்ளது.

**மடலேறுதல்**

பெண்ணின் தந்தை அவளது காதலனுக்குப் பெண்ணைத் தரவில்லையெனில் மடலூர்ந்து பெறுதல் மரபு.

மடலேறுதல் என்பது தலைமகன் பூளைப்பூவையும், ஆவிரம் பூவையும், எருக்கம்பூவையும் ஒரு சேரத் கொடுத்துத் தலையில் சூடிக் கொள்வான். பனைமடல் கருக்காற் செய்யப்பட்ட பொய்க்குதிரையின் மேல் கால் சதைகளை அறுத்துக் குருதி கசியும்படி ஏறித் தன் பெயரையும், தலைவியின் பெயரையும், தலைவியின் உருவத்தையும் எழுதி, தெரு முனையில் தனது கருத்தினைச் சொல்வான். இது கண்டு அவளது தந்தை தம் குடிக்குப் பழி உண்டாகி விடுமோ என்று எண்ணி தனது பெண்ணை அவனுக்கே மண முடித்து வைப்பான்.

“மடலேறுதலை அக்காலத்தவர் நாணமற்ற செயல் என்று வெறுத்தனர். சிலர் அவனது அழகைப் பாராட்டினர்”[124] இவ்வாறு மடலூர்ந்து மணம் முடிக்கும் மரபும் இருந்தமை புலப்படுகிறது.

பாங்கியின் கூட்டத்தில் தலைவன் தோழியிடம் மடல் ஏறுவதாகக் கூறுவதுமுண்டு என நம்பியகப் பொருள் கூறுகிறது. தலைவன் தோழியிடம் இரந்து குறையுறும் பொழுதும், இரவுக்குறி (புணர்ச்சி) மறுக்கப்படும் பொழுதும் மடலேறுவதாக அச்சுறுத்துவதுண்டு இதை,

**“மடன்மா கூறும் இடனுமா ருண்டு”**

**“பொய்தலையடுத்த மடலின் கண்ணும்”** எனவும் தலைவனின் இவ்வச்சுறுத்தலைத் தொல்காப்பியர் சுட்டிக் காட்டுவர்”[125]

நாணம் மிக்கவர்கள் பெண்களாதலால் அவர்கள் மடலேறுவதில்லை. இதனை,

**“எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்**
**பொற்புடை நெறிமை இன்மையான”**[126]

என்ற நூற்பா மூலம் விளக்குகின்றார். மேலும், தொல்காப்பியர் சுட்டும் அகப்பொருள் மரபுகளுள் ஒன்று பெண்கள் மடலேற மாட்டார்கள் என்பது. இது பக்தி இலக்கியங்களில் மீறப்படுகிறது. சான்றாக,

**“அன்ன நடையாரலரேச ஆடவர்மேல்**

**மன்று மடலூ ராரென்பதோர் வாசகமும்**

**தென்னுரையிற் கேட்டறிவதுண்டு அதனையாந் தெளியோம்**

**மன்னும் வடநெறியே வேண்டினோம்”**[127]

என்று வடநெறிப்படி தான் மடலேறப் போவதாகக் கூறுகின்றாள் பெரிய திருமல் தலைவி. இது பக்தி இலக்கியங்களில் காணப்படும். அகப்பொருள் மரபு மாற்றமாகும்.

தோழியை இரந்து குறை பெறாது வருந்திய தலைவன் மடலே பொருளென மதிப்பதாகக் கூறுகின்றான். சித்திரம் தீட்டுவதில் வல்ல ஓவியன் எழுதினால் போன்ற அழகினையுடைய மெல்லியளான தலைவியால் தலைவன் வருத்தம் அடைந்தான். அதனால் விலைக்கு விற்றல் இயலாத பூளைப் பூவையும், உழிஞை பூவையும், எருக்கம் பூவையும், ஆவிரம் பூவோடு கலந்து கட்டிய மாலை சூடி, பனை மடல் கட்டிய குதிரையேறி பல ஊர்களிலும் சென்று வர தலைவியின் மனம் எண்ணியது. அதனைத் தோழி கேட்கும்படி கூறுகின்றான். இதனை,

**“வில்லாப் பூவின் கண்ணி சூடி**

**நல்லே முறுவலெனப் பல்லூர் திரிதரும்**

**நெடுமாப் பெண்ணை மடல்மா னோயே”**[128]

என்ற நற்றிணைப் பாடல் வாயிலாக கந்தரத்தனார் உணர்த்துகின்றார்.

“கூரிய பற்களையுடைய தலைவியை நான் பெறுவேனாக, நான் அவ்வாறு பெற்றதை இவ்வூர் அறியட்டும். நாற்சந்தியில் இந்த நல்ல பெண்ணின் கணவன் இவன் என்று பலரும் கூறக்கேட்டு நான் வெட்கப்படுவேன்”[129] என்று குறுந்தொகைப் பாடல் கூறுகிறது.

“இந்த அன்பு நோய் மிகுதியாகி என்னால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை என்றால் இவ்வூர் மன்றத்தில் மடல் ஏறி, உனக்குப் பழி

உண்டாக்குவேன். இதுவே என் எண்ணமாகும்”[30] என்று கலித்தொகை பகர்கிறது.

மடலேறுதல் நோக்கம் தலைவியை அவமானப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தில் அன்று. தலைவனுக்கும் தலைவிக்கும் இருக்கின்ற உறவை ஊராருக்கும் உற்றாருக்கும் தெரிவித்து அதன் மூலம் அவளையே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று தலைவனின் உளப்பாங்கு வெளிப்படுவதை அறிய முடிகின்றது.

## நலச்சிறப்புரைத்தல்

சங்க அகப்பாடல்களில் காட்டப்படும் தலைவர் தலைவியரின் சிறப்பு நலமாகக் கூறப்படுகிற செய்திகளெல்லாம் பெரிதும் செயற்கையாக, மிகைப்பட, புனைவாக அமைவனவல்ல. இயல்பாய் அமைந்த சிறப்பு நலன்களே பெரிதும் கூறப்பட்டுள்ளன. சங்கப் பாடல்களில் தலைவர் தலைவியரின் சிறப்புப் பற்றிய புனைவெல்லாம் விளங்கச் சொல்ல வேண்டும் என்ற நோக்கில் ஒப்புமைப் பொருள்களை உவமைப்படுத்திச் சொல்லுகிற நிலையில் தான் அமைகின்றன எனக் கூறலாம். திருக்குறளின் காமத்துப்பாலில் அமைந்த ‘நலம் புனைந்துரைத்தல்’ அதிகாரத்தில் அமைந்த செய்திகளும் இவ்வாறே அமைவனவாகும்.

தலைவன் தன் தலையில் பூவும் மாலையும் சூடியிருந்ததை ஒரு பாடலில் குறிக்கப்படுகின்றது. அவை,

**“கண்ணியன் கழலன் தாரன்”**[131] என்பனவாகும்.

தலைவன் தன் மார்பில் மலர் மாலையை சூடியிருந்ததை சில பாடல்களில் கூறப்பெற்றுள்ளது.

**“ஊதுவண்டு இமிருங் கோதை மார்பன்”**[132]

தலைவனின் நட்பின் பெருமை, அன்பின் ஆழம், அகலம், உணர்ச்சி ஆகியன குறுந்தொகைப் பாடல் ஒன்றில் கூறப்பட்டிருத்தலைக் காணலாம்.

**“நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரள வின்றே சாரல்**
**கருங்கோள் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொரு நட்பே”**[133]

இப்பாடலில் அமைந்துள்ள செய்தியானது தலைவனின் காதலின் பெருமையைப் பேசுவதாக அமைந்துள்ளது.

சங்க அகப் பாடல்களில் தலைவர் தம் பருவத்திற்கேற்ப இன்பம் பெறுவதற்கும் தருதற்குமுரிய இளைய நங்கையர்களான தலைவியரே காட்டப்படுகின்றனர். அவ்வகையில் மடந்தை, அரிவை ஆகிய இரு பருவத்தினரே பெரும்பான்மையும் குறித்துக் காட்டப்பட்டுள்ளனர்.

தலைவன் கூற்றிலும், தலைவி தன் கூற்றிலும் தோழி, செவிலி போன்றோர் கூற்றிலும், தலைவியின் சிறப்பு நலன்கள் சங்கப் பாடல்களில் கூறப்படுகின்றன. எனினும், தலைவியின் நலன்களை தலைவன் கூறுதலே சிறப்புக்குரியது. தலைவன் தலைவியின் சிறப்புகளை சிறப்பு நலன்களைத் தலைவியிடம் நேரே கூறுவது சங்கப் பாடல்களில் பெரிதும் காணப்படாததாகும். தலைவன் தனக்கும் தன் நெஞ்சுக்கும், தன் பாங்கனுககும், தன் தேர்ப்பாகனுக்கும் கூறும் நிலையில் தலைவியின் நலச்சிறப்பைக் கூறுவதாகவே பாடல்கள் அமைந்துள்ளன. களவுப் பிரிவிலும், கற்புப் பிரிவிலும் இக்கூற்று நிகழ்வுகள் நிகழும். கேட்கவும் பேசவும் இயலாத உயிர்களிடத்தும் இச்சிறப்பு நலன் கூறுதலும் உண்டு.

**“கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி**

**...........................................................................**

**...........................................................................**

**நறியவும் உளவோ நீயறியும் பூவே”**[134]

இறையனார் என்ற சிவனார் தருமி என்னும் புலவர் பொருட்டு, பாண்டியன் மன்னன் ஒருவன் தன் தலைவியின் கூந்தல் மணத்தின் ஐயத்தைக் தீர்க்கும் வகையில் பாடித் தந்ததாகப் புராணத்தில் உள்ளது.

**“மிழலையந் தீங்குரல்”**[135]

என்ற பாடல் தலைவியின் அமிழ்தினும் இனிமையாகப் பேசும் மொழி உடையவர் என்பதைக் கூறுகிறது.

இவ்வாறு சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் தலைவியின் சிறப்பு நலன்களே மிகுதியாக காட்டப்பட்டுள்ளது.

## நெஞ்சுக்குச் சொல்லுதல்

தொல்காப்பியர் களவு, கற்பு என்னும் இருபாற்பட்ட அகவாழ்க்கை நிலைகளிலும் கூற்றுக் கூறுதற்குரியாரைக் குறிப்பிடுகிறார். “அவர்கள் பார்ப்பார், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி, என்போரும், பாணன், கூத்தர், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் என்போரும் ஆவர்”[136]

“சங்க அகப்பாடல்களைக் கூற்று அடிப்படையில் தலைவன் கூற்று 344, தலைவி கூற்று 550, தோழி கூற்று 785, தாயார் கூற்று 72, பரத்தையர் கூற்று 51, ஏனையோர் கூற்று 57 எனப் பகுத்துக் காட்டுவார்”[137] அறிஞர் இராம. பெரியகருப்பன் (தமிழண்ணல்) திணை அடிப்படையிலும் இக்கூற்றுப் பாடல்களை காட்டுவார் அவர்.

மேற்கூறிய அக மாந்தர்கள் தமக்குத்தாமே கூறுவதும், ஒருவர் மற்றொருவருக்குக் கூறுவதும், மேலே குறிக்கப்படாத தூதுப் பொருட்கள் சில கண்டு கூறுவதும் சங்கப் பாடல்களில் காணப்படும். இவற்றுள் நெஞ்சுக்குக் கூறுவதாக அமைவதும் ஒன்றாகும். உயர்திணை, அஃறிணைப் பொருட்களையும் கூறுவர்.

நெஞ்சும் கூற்றினைக் கேட்கும் பொருளாக அமையுமேயன்றிக் கூற்றினை மொழியும் பொருளாக அமைவதில்லை. இருப்பினும் இதுவும் கூற்றினை உடைய பொருளாகக் கற்பித்துக் கொண்டு பாடப்படுதலும் உண்டு.

சங்க இலக்கியத்தில் நெஞ்சொடு கிளத்தல், நெஞ்சுக்குச் சொல்லியது எனப் பாடப்பெற்ற பல பாடல்கள் காணப்படுகின்றன.

**“அல்லகுறிப்பட்டுழித் தலைமகன் தன் நெஞ்சுக்குச்**
**சொல்லியது”**[138]

**“தலைமகன் இடந்தலைப்பாட்டின் கண் கூடலுறும் நெஞ்சிற்கு**
**சொல்லியது”**[139]

“கிளிகள் புனத்தின் கண் படியாநின்றன வென்று தலைவியைக் காக்க ஏவிய வழி, அதனை அறிந்த தலைமகன் உவந்து, தன்னெஞ்சிற்குச் சொல்லியது”[140] போன்ற துறைக்குறிப்புகள் குறிஞ்சித் திணைப் பாடல்களில் விரவிக் காணப்படுகின்றன.

## குறிப்புணர்த்தல்

தலைவி தன் மீது கொண்ட வேட்கையைத் தலைவன் குறிப்பினால் அறிதலே குறிப்புணர்த்தல் அல்லது குறிப்பறிதல் ஆகும்.

**“அரிவை நாட்டம் அகத்துநிகழ் வேட்கை**
**தெரிய உணர்த்தும் குரிசிற்கு என்ப”**[141]

என்று நம்பியகப் பொருள் விளம்புகிறது. அதாவது தலைமகளின் உள்ளத்தில் தோன்றும் வேட்கையினைத் தலைவனுக்கு அவளுடைய கண்கள் தெளிவுபட உணர்த்தலே குறிப்புணர்த்தல் ஆகும். சான்றாக,

**"இருநோக்கு இவள்உண்கண் உள்ள ஒருநோக்கு**
**நோய்நோக்ஒன் அந்நோய் மருந்து"**[142]

இக்குறிப்பறிதலைத் தொல்காப்பியர்,

**"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்கும்**
**கூட்டி உரைக்கும் குறிப்புரை ஆகும்"**[143]

என்னும் நூற்பா வழி எடுத்துரைக்கிறார்.

தலைவன் பரத்தையருடன் கூடி விட்டு தலைவியை நாடி வருகிறான். அப்போது தோழி, "வண்டுகளின் இனம் உன் காதலியின் மணம் பொருந்திய கூந்தலை மொய்க்கும். உன் காதலியின் கூந்தல் மணம் உன் மார்பில் மணக்கும்"[144] என்று குறிப்பால் உணர்த்துகின்றாள்.

## கழற்றெதிர் மறை

பாங்கன் தலைவனை பார்த்து ஒரு மங்கையால் பண்பு இழந்தாய் எனக் கழறிய போது தலைவன் அதற்கு உண்மை நிலை கூறியது. பாங்கன் தலைவனை, 'ஒரு மடமகளாலே நீ கொண்டிருந்த நீதியும், நட்பும், இழி செயல் விலக்கலாகிய நாணும், பயனும், பண்பும், பிறர் தன்மை அறிந்து ஒழுகும் பாடும் ஆகிய ஆறு பண்புகளையும் இழந்தாய்' என்றதற்கு தலைவன் பதிலுரைக்கின்றான்.

தலைவி ஐம்பகுதியாக வகுத்து முடிக்கப்பெற்ற கூந்தலை உடையவள். அழகிய நெற்றியைக் கொண்டவள். செவ்வரிபடர்ந்த கண்களையுடையவள். இத்தன்மையை உடையவளின் கண்களைப் பார்ப்பதற்கு முன் தலைவன் எல்லாம் பண்புகளையும் உடையவனாக

இருந்தான். அவளைக் கண்ட பின்னர் அனைத்தும் இழந்து விட்டான் என்பதை தலைவன் பாங்கனிடம் கூறுவதை அறிய முடிகின்றது.

**“நயனும் நண்பும் நாணும் நன்கு உடைமையும்**
**பயனும் பண்பும் பாடறிந்த தொழுகலும்**
**நும்மினும் உடையேன்”**[145]

என்ற நற்றிணைப் பாடல் வரிகள் உணர்த்துகின்றது.

**“இடிக்கும் கேளிர்! நும்குறை ஆக**
**நிறுக்கல் ஆற்றினோ நன்றுமன் தில்ல”**[146]

எனும் குறுந்தொகைப் பாடல் வழி அறியலாம்.

## செறிப்பு அறிவுறீஇத்

களவொழுக்கத்தில் தோழி தலைவன், தலைவிக்கு வாழ்வியல் உண்மைகளைக் கூறி, அவர்களை நெறிப்படுத்துபவளாக இடம் பெறுகிறாள். தலைவன் தலைவி நலனில் அக்கறை செலுத்தி, களவிலிருந்து கற்பிற்குச் செல்லும் தன்மையை வழிமுறைகளை எடுத்துக்கூறுகிறாள். இவ்வாறே சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களும் நவில்கின்றது.

தலைவி தலைவன் மீதுள்ள அன்பு வேட்கையை எடுத்துக்கூறி, அவளை மணம் செய்ய விரைந்து செயல்படுவாயாக என்று தோழி கூறுவதாக அகநானூற்றுப் பாடல் ஒன்று அமைந்துள்ளது.

**“நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு**
**இவளும் இணையள் ஆயின் தந்தை**
**அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றி**
**கங்குல் வருதலும் உரியவை”**[147]

என்ற பாடல் இதற்குச் சான்றாகும். பகற்குறிக்கண் செறிப்பு அறிவுறீஇத் தோழி வரைவு கடாயது என்ற துறைக்குறிப்பில் இப்பாடல் அமைந்துள்ளது.

**“தலைமகன் சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறுத்தியது”**[148]

**“செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது”**[149]

என்பன போன்ற துறைகள் குறிஞ்சிப் பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

**தூது**

தலைவி தனது பிரிவாற்றாமையைத் தலைவனுக்கு உணர்த்த, உயர்திணை, அஃறிணைப் பொருட்களைத் தூதுவிடல் அகப்பொருள் மரபாகும்.

“பிரிவிடைத் தலைவியது அருமை கண்டு தூதுவிடக் கருதிய தோழிக்குத் தலைவி சொல்லியது”[150] என்ற துறைக் குறிப்பு அமைந்த பாடலில் தலைவன் ஒருவழித் தணத்தல் காரணமாக சிறிது காலம் தன் ஊரில் தங்கியிருக்கிறார். இதனால் வருத்தமடைந்த தலைவியை நோக்கி தோழி தூது விட எண்ணுகிறாள். ஆனால் தலைவியோ மறுக்கிறாள்.

**வன்புறை**

இயற்கைப் புணர்ச்சியில் மகிழ்ந்த தலைவி பிரியும் தலைவன் மீண்டும் வருவானோ என ஐயப்படுகிறாள். அவளின் ஐயத்தைப் போக்கத் தலைவன் மீண்டும் வருவேன் என வற்புறுத்திக் கூறுதல் வன்புறையாகும்.

தலைவன் தலைவியை விட்டு பிரிந்து சென்றான். தலைவி வருந்துகிறாள். அவள் பிரிந்து சென்றாலும் கூட ஊர் பெண்டிர் அலர் தூற்றி என்னைத் துன்புறுத்துவதைக் கைவிடவில்லை. இதனால் என் உள்ளம்

வருந்துகிறது. இதனை எவ்வாறு நான் ஆற்றுவேன் என தலைவி புலம்புகிறார்.

**“குறிஞ்சி நம்ஊர்ப் பெண்டிர்**

**இன்னும் வோர் என்திறத்து அலரே”**[151]

என்ற கந்தரத்தனார் பாடல் இதை உணர்த்துகிறது. இப்பாடல் ‘வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைவி, தோழிக்கு வன்புறை எதிரழிந்து சொல்லியது’ என்ற துறைக்குறிப்பில் அமைந்துள்ளது.

## வாயில் மறுத்தல்

தலைவியின் ஊடலை நீக்கி ஆற்றுப்படுத்துகின்ற தூதர்கள் வாயில்கள் ஆவார்.

“தொல்காப்பியர் கற்பியலில் பன்னிருவரை அகப்பொருள் வாயில்களாகக் குறிக்கின்றார்”[152]

தலைமகன் தலைமகளை விட்டு பிரியும் பிரிவுகளுள் பரத்தையில் பிரிதலும் உண்டு. இப்பிரிவு தலைவன் தலைவியை மணந்து இல்வாழ்க்கையின் போது நிகழும். இதனையே கற்பொழுக்கம் என்பர். கற்பில் தலைவன் பிரியும் பிரிவுகளை,

**“பரத்தையிற் பிரிதல் ஓதற்குப் படர்தல்**

**அருள்தரு காவலொடு தூதிற்கு அகல்தல்**

**உதவிக்கு ஏகல் நிதியிற்கு இகத்தல் என்று**

**உரைபெறு கற்பின் பிரிவு ஆறு வகைத்தே”**

எனும் நூற்பா வழி கற்பின் கண் நிகழும் பிரிவுகள் ஆறு வகைப்படும் என்றும் அவற்றுள் பரத்தையின் பால் தலைவன் பிரியும் பிரிவு ஒன்று என்பதையும் அறிய முடிகிறது. இதனால் தலைவி ஊடல் கொள்வாள்.

ஊடலைத் தணிக்கும் வாயிலாக தோழி, பாங்கன் திகழ்கிறார்கள் என்பதையும் அறியலாம்.

பரத்தமை பிரிவில் பிரிந்திருந்த தலைவன் மீண்டும் தன் வீட்டிற்கு வருகின்றான். தலைவியின் ஊடல் சினத்தைக் கண்டு, அவள் சினத்தைத் தணிவிக்குமாறு தோழியை விடுக்கின்றான். தோழியும் தலைவிபால் சென்று தலைவனை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகின்றாள். அவளுக்கு தலைவி தனக்குரிய மனைவிக்கு இன்பம் தராமல் பரத்தையின் அழகில் மயங்கி அவளொடு இன்புற்று வாழ்தலை நாடி மனைவியை வருத்தமுறச் செய்து விட்டான் என்கிறாள். அதனாலே அவன் இரந்து நின்றும் உறுதியான சொற்களைக் கூறியும் அவள் பால் வேண்டி நிற்பதைக் கண்டு மனம் மகிழ்வாள் என்பதனை,

**“பெருஞ்சினம் தணியும் குன்ற நாடன்**
**நனிபெரிது இனியன் ஆயினும் துனிபடர்ந்து**
**ஊடல் உறுவேன் தோழி”**[153]

எனும் பாடல் கருத்தாகக் கொண்டு கபிலர் பாடியுள்ளார் என்பதை அறிய முடிகிறது. ஊடல் கொள்ளுதல் பற்றி,

**“ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்”**[154]

என்ற குறள்பா வழி அறியலாம்.

“தோழி வாயில் மறுக்கவும், தலைமகன் ஆற்றாமை கண்டு தலைமகள் வாயில் நேர, அவன் பள்ளியிடத்தானாய் இருந்துழிப் புக்க தோழி கூறியது”[155] என்ற துறைக்குறிப்பு அமைந்த பாடல் ஐங்குறுநூற்றில் அமைந்துள்ளது.

**காமம் மிக்க மிக்க கழிபடர் கிளவி**

அகமாந்தர்களின் உணர்வுகள் எல்லை கடந்து மிகும்போது அவர்களின் உணர்வு நிலை வெளிப்பாட்டிற்கு அகப்புலவர்கள் அஃறிணைப் பொருள்களை விளித்துப் பேசுவதை மரபாகக் கொண்டுள்ளார்.

தலைவியே அஃறிணையிடம் மிகுதியாகப் பேசுகின்றாள். வரைவிற்காக பொருள் வயின் பிரிந்த தலைவனின் வரவு குறித்த எல்லையைக் கடந்து நீட்டித்தலால், தலைவியின் காமநோய் பெருகியது. அதன் காரணமாக நலிந்தாள். அவள், நினக்கு வேண்டிய உணவைத் தேடிக் கொண்டு அம்மலையில் உள்ள தலைவனிடம் சென்று இம்மலைக் குறவர் மடமகள் காவல் ஆயினள் எனக் கூறி வருமாறு பைங்கிளியிடம் வேண்டுகின்றாள் தலைவி. இதனை,

**"அம்மலைக் கிழவோற்கு உரைமதி இம்மலைக்**
**கானக் குறவர மடமகள்**
**ஏனல் காவல் ஆயினள் எனவே"**[156]

என்னும் நற்றிணையில் அமைந்த குறிஞ்சித் திணைப் பாடலில் செம்பியனார் என்ற புலவர் பாடியுள்ளமை கொண்டு அறிய முடிகின்றது. இப்பாடல் வழி அஃறிணை உயிர் பொருளை விளித்துத் தலைவி பேசும் பாடல்கள் தலைவியின் காமமிக்க மனநிலையில் எழுந்த மொழிகளாகவே உள்ளன என்பதை அறிய முடிகின்றது.

**முன்னம்**

தொல்காப்பியர் மொழிந்த செய்யுள் உறுப்புகள் மொத்தம் முப்பத்து நான்கு. அவற்றுள் ஒன்று முன்னம். இம்முன்னம் கூற்று கேட்போர், களன் ஆகிய மூன்று செய்யுள் உறுப்புகளையும் உள்ளடக்கியதாகக் காணப்படுகிறது.

**“இவ்விடத் இம்மொழி இவரிவுர்க்கு உரியரென்று**

**அவ்விடத் அவரவர்க்கு உரைப்பது முன்னம்”**[157]

என்று குறிப்பிட்டுள்ளார். இறையனார் களவியல் உரையில்,

**“தந்தை தன்னையர் ஆயிரு வீற்றும்**

**முன்னம் அல்லது கூற்றவன் இல்லை”**[158]

என்று நூற்பாவின்கண் வரும் ‘முன்மை’ என்பதைக் குறிப்பு என்னும் பொருளில் நக்கீரர் கையாண்டுள்ளார். தொல்காப்பியரும்,

**“முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே”**[159]

என்னும் நூற்பாவின் கண் வரும், முன்னம் என்பதைக் குறிப்பு என்னும் பொருளிலேயே கையாண்டுள்ளார்.

சங்க இலக்கிய அகப்பாடல் ஒவ்வொன்றிற்கும் அமைந்துள்ள துறைக்குறிப்பு அப்பாடலை யார்? யாருக்கு? எச்சூழலில்? கூறினார் என்ற மூன்றையும் கூறுவதாக அமைந்துள்ளது. சான்றாக,

**“யாரும் இல்லைத் தானே களவன்**

**தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ**

**தினைத்தாள் அன்ன சிறுபசுங்கால**

**ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்**

**குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே”**[160]

என்னும் குறுந்தொகைப் பாடலின் துறைக்குறிப்பினைக் கொண்டு, இப்பாடலைக் கூறுவோர் - தலைவி, இப்பாடலைக் கேட்போர் - தோழி. இப்பாடலின் சூழல் (களன்) தலைவன் வரைவு நீட்டித்தவழித் தலைவி வருந்திக் கூறுதல்.

மேற்சொன்ன மூன்று உறுப்புகளும் ஒருங்கே அமைந்து முன்னம் விளங்கியதைக் காண முடிந்தது. இவ்வாறே அனைத்து சங்க குறிஞ்சித் திணைப் பாடல்களும் அமைந்து விளங்குவதைக் காணலாம்.

## தொகுப்புரை

சங்கப் பாடல்கள் அகமும் புறமும் என்ற இருபெரும் பிரிவுகளாக கொண்டு விளங்குகின்றன.

சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் கூறும் செய்திக்கேற்பத் துறைகளையும் கூற்றுகளையும் அமைந்துள்ளனர்.

திணை, துறை அமைப்பு சங்கக் குறிஞ்சிப் பாடல்களில் இன்றியமையாததாக விளங்குகிறது.

இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற் கூட்டம் என்பன களவொழுக்கத்தின் முதன்படி நிலைகளாக அமைந்துள்ள முறையை அறிய முடிகின்றது.

வரைவுக் கடாதல் துறையிலமைந்த பாடல்கள் தன் நெஞ்சுக்குத் தலைவன் தானே திருமணம் செய்யக் கருதும் கருத்துக் கொண்ட குறிப்பு கிடைக்கின்றது.

பிரிவு பற்றிய துறையிலும் குறிஞ்சி நிலமே பின்னணியாக உள்ளது. அறத்தொடு நின்று வேற்று வரைவை மாற்றுதல் அகப்பொருள் மரபு என்பதைவிட தமிழர்தம் பண்பாடு எனலாம்.

வெறியாடல், அலர் கூற்றுதல், இற்செறிப்பு, பசலை பாய்தல், உடன்போக்கு, கையுறை, மடலேறுதல், குறிப்பறிதல், கழற்றெதிர்மறை போன்ற அகப்பொருள் மரபுகள் பழந்தமிழ் மக்கள் மரபாகப் பின்பற்றி வந்தமை இவ்வியலின் மூலம் அறிய முடிகிறது. தலைவி ஒரு முறை ஒருவனை நினைத்துவிட்டால் வேறு எதற்காகவும் எந்தச் சூழலிலும் அவளைத் தவிர வேறுயாரையும் நினைக்காத திண்மை உடையவர்களாக ஒருத்திக்கு ஒருவன் என்ற நிலையிலிருந்து மாறாத தன்மை உடையவர்களாகக் சங்க கால குறிஞ்சி நிலப் பெண்கள் விளங்கியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

## சான்றெண் விளக்கம்

1. க. சிவராசு, சங்க இலக்கியக் கட்டுரைகள், ப. 133
2. வ.சு.ப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 14
3. பவணந்தி முனிவர், நன்னூல், 388
4. அ.அ. மணவாளன், திருக்குறள் காமத்துப்பால் அகப்பொருள் இலக்கியமா? ஆய்வுக்கோவை தொகுதி-1, ப. 405
5. பாலா, புதுக்கவிதை ஒ ருபார்வை, ப. 23
6. தொல். செய்யுளியல், நூ. 178
7. தொல். மெய்ப்பாட்டியல், நூ. 25
8. குறள், 913
9. தொல். களவியல், நூ. 1
10. இறையனார் அகப்பொருள், நூ. 2
11. சு. பாலசுந்தரம்பிள்ளை, பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை, ப. 4
12. நற். 8.3, 128, 344, 356, 389
13. குறுந். 142, 40, 70, 119, 120, 300
14. ஐங். நூ. 299
15. தொல். களவியல், நூ. 40
16. மேலது, நூ. 41
17. நற். 83.98, 122, 144, 151, 156, 168, 182, 192, 232, 257, 261
18. அகம், 8.12, 18, 22, 58, 68, 72, 88
19. குறுந். 18.29, 42, 47
20. ஐங். 206, 279, 282, 293
21. கலித். 46, 49, 52, 68
22. நற். 17.44, 55. 57
23. குறுந். 73

24. ஐங். 215, 260, 264

25. அகம். 62

26. குறுந். 120.100

27. ஐங். 237, 361, 372

28. தொல்.கள. 11

29. ஐங். 237, 361, 372

30. தொல். கள. 11

31. குறுந். 95

32. குறுந். 13, 17, 81

33. அகம். 358

34. நற். 213

35. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 79

36. தொல்.கள. 21

37. இறையனார் களவியல், 29 உரை

38. கதிரைவேற்பிள்ளை, தமிழ்ச் சொல்லகராதி, ப. 312

39. தமிழண்ணல், குறிஞ்சிப்பாட்டு, ப. 45

40. கி.வா. ஜகந்நாதன், களிறும் பிடியும், ப. 37

41. நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள், நூ. 48

42. தொல். பொருளியல், 11

43. மேலது, 12

44. அகம். 52, 48, 82

45. நற். 173, 244

46. குறுந். 23, 26, 52, 214

47. ஐங். 201, 205, 208, 210

48. கலி. 39, 54

49. தொல். களவு. 909

50. மேலது, 20
51. அகம். 138.388, 18, 232, 242
52. நற். 51, 43, 47, 173, 273
53. குறுந். 111, 214, 263, 360, 362
54. ஐங். 210, 241, 243, 244
55. தொல். கற்பு. 21
56. அகம். 118, 282, 312, 368
57. குறுந். 112, 217, 284
58. நற். 23, 36, 85, 116
59. ஐங். 236
60. கலி. 39, 53
61. தொல்.களவு, 20
62. அகம். 378.12, 288, 372
63. குறுந். 244, 292, 342, 366
64. நற். 23, 33, 134, 194
65. ஐங். 10, 24, 36.41
66. கலி. 48
67. தொல். மெய்ப்பாட்டியல், 22
68. அகம். 48, 52, 102, 162
69. குறுந். 13, 143, 264, 339
70. நற். 1, 34, 47, 51
71. ஐங். 217, 221, 222, 225
72. கலி. 39, 42, 48, 53
73. Nagu.R.K. Palaittinai in Sangam Literature, P. 15
74. மேலது, ப. 15

75. இராகவையங்கார். மு, தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, ப. 69
76. மாணிக்கம்.வ.சுப, தமிழ்க்காதல், பக். 82-83
77. அ. செல்வராசு, சங்க இலக்கியத்தின் பாழ்நிலப்பயணம், பக். 57-58
78. மாணிக்கம்.வ.சுப, தமிழ்க்காதல், ப. 71
79. நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், ப. 112
80. குறுந். 115
81. ஐங். 254.35, 36, 54, 80, 86
82. தொல்.அகத். 27
83. மேலது, 35
84. தொல்.பொருளியல், 28
85. தொல்.கற்பு. 47-49
86. நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், 39
87. தொல்.களவு. 49
88. மேலது, 24
89. நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள், 147
90. குறுந். 60, 68
91. நற். 1.5
92. ஐங். 14.21
93. கலி. 53
94. அகம். 34
95. நற். 1
96. குறுந். 101
97. நற். 128
98. ஐங். 209

99. அகம். 22

100. ஐங். 181

101. நற். 55, 309, 328

102. குறுந். 36, 134, 264

103. தொல்.களவு. 49

104. நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம். 171

105. குறுந். 361.83, 146, 247

106. ஐங். 2, 13,18,28

107. அகம். 22

108. குறுந். 379

109. ஐங். 230

110. குறுந். 146

111. தொல். செய்யுளியல். 187, பேரா. உரை

112. அகம். 42, 178, 352

113. குறுந். 52, 297, 389

114. அகம். 148

115. குறுந். 18, 179, 244, 342

116. ஐங். 236, 238, 260, 266

117. நற். 23, 36, 53, 55

118. கலி. 53

119. குறுந். 25, 38, 54

120. நற். 116.125, 233, 309

121. நற். 359

122. குறுந். 1

123. ஐங். 211

124. குறுந். 182

125. கா. காளிமுத்து, தொல்காப்பியம் அதன் இலக்கியக் கொள்கைகளும் குறுந்தொகையும், ப. 94

126. தொல். அகத். 38

127. திருமங்கையாழ்வார், பெரிய திருமடல், கண்ணிகள், 38-40

128. நற். 146

129. குறுந். 14, 17, 173

130. கலி. 58

131. நற். 128

132. மேலது. 187

133. குறுந். 3

134. மேலது. 2

135. நற். 209

136. தொல். பொருள். 189, 191

137. R.M. Periakaruppan, Tradition and Talent in Cankam Poetry, P. 280

138. அகம். 62, 142, 152, 162

139. குறுந். 62, 29, 70, 100, 120

140. ஐங். 288

141. நம்பியப்பொருள். 122

142. குறள். 1091

143. தொல். களவு. 5

144. ஐங். 240

145. நற். 160

146. குறுந். 58, 132, 280

147. அகம். 8, 118, 192

148. குறுந். 159, 199, 335

149. நற். 57, 68, 119, 194

150. நற். 64

151. நற். 116, 225, 304

152. தொல். கற்பியல். 52

153. நற். 217

154. குறள். 1330

155. ஐங். 283

156. நற். 102

157. தொல். செய்யுளியல். 207

158. இறையனார் அகப்பொருள். 28

159. தொல். எச்சவியல். 63

160. குறுந். 25

# இயல் – 5

## குறிஞ்சித் திணைப் பாடல்களில் இலக்கிய நயம்

ஒரு இலக்கியம் கற்பவர் நெஞ்சங்களில் நிலை பெறுவதற்கும், சுவையூட்டுவதற்கும், சிந்ததிக்க வைப்பதற்கும், செயலாக்கத்திற்கும் அவ்விலக்கியங்களில் பதியப்பெற்றுள்ள இலக்கிய நயங்களே விதைகளாகின்றன. அவ்வகையில் சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் பண்டைத் தமிழர் நாகரீகத்தின் சாயலை, பண்பாட்டின் சிறப்பினை, வரலாற்று உண்மைகளை, வாழ்வியல் அர்த்தங்களை, அகமன உணர்வுகளைப் படம் பிடித்துக் காட்டுவதற்காகப் சங்கப் புலவர்கள் கையாண்டுள்ள இலக்கிய நயங்களை எடுத்துரைப்பதும், அவற்றின் வழியாக புலவர்களின் பண்பட்ட இலக்கியப் புலமையைப் புலப்படுத்திக் காட்டுவதும் இவ்வியலில் நோக்கப்படுகிறது. கவிதைக்கு நயம் பயப்பன உவமை, உருவகம், உள்ளுறை, இறைச்சி, கற்பனை, உணர்ச்சி, சொல்லாட்சி, வருணனை, அணிநயம் போன்றனவாகும்.

### உவமை நயம்

இலக்கியத்தை அழகுபடுத்தும் முதல் அணி உவமையே. உவமம் என்பது ஒரு பொருளோடு ஒரு பொருளை ஒப்புமை கூறும் முகமாக அப்பொருளுடைய வண்ணம், வடிவம், தொழில், பயன் முதலிய இயல்புகளை நன்கு புலப்படும்படி செய்வதாகிய பொருட்புலப்பாட்டு நெறியாகும். இவ்வுவமையணி காலத்தால் முற்பட்டது. உவமைகளை வகை செய்வதில் பல நிலைகளைக் கொள்ளலாம். உவமைக்கும் பொருளுக்கும் உள்ள ஒப்புமைப் பண்பு அடிப்படையாக எழுந்தது என்பர் தொல்காப்பியர்,

**“வினை பயன்மெய் உரு நான்கே**

**வகைபெற வந்த உவமத் தோற்றம்”**[1]

என்ற நூற்பாவின் மூலம் அறியலாம். வினை, பயன், வடிவம், நிறம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் சான்றாக,

| | | |
|---|---|---|
| புலிபோல் பாய்ந்தான் | - | வினை |
| மழை விழை தடக்கை | - | பயன் |
| வேய் மருள் பணைத்தோள் | - | வடிவம் |
| தாமரைச் சேவடி | - | நிறம் |

என்பனவாகும்.

நான்கும் தனித்தனியாக வருவதோடு சேர்ந்தும் வரும். செவ்வான் அன்ன மேனி, அவ்வான் இலங்கு பிறை அன்ன விலங்கு, வால்வை எயிறு போன்ற சான்றுகளைக் கூறலாம்.

**“உயந்ததன் மேற்றே உள்ளுங் காலை”**[2]

உவமைப் பொருள் உயர்ந்ததாக இருத்தல் வேண்டும்.

**உவமையின் நிலைக்களன்**

**“சிறப்பே நலனே காதல் வலியொடு**

**அந்நால் பண்பும் நிலைக்களன் என்ப”**[3]

ஒரு பொருளின் சிறப்பு, அதன் நலன், அதன் மேல் கொண்டுள்ள பேரன்பு, அதன் வலிமை, இவைகள் உவமை தோன்றும் நிலைக்களன்களாக அமைவனவாகும்.

**உவமையின் வகை**

உவமையானது இரண்டு வகைப்படும். அவை,

1. உள்ளுறை உவமம், ஏனை உவமம் என்பனவாகும்.

**“உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலனெனக்**

**கொள்ளும் என்ப குறியறிந் தோரே”[4]**

உள்ளுறை உவமம் தெய்வம் ஒழிந்த கருப்பொருளை மையமாகக் கொண்டு வரும் முதல், கரு, உரி என்ற மூன்று அகப்பொருள் உறுப்புகளை அடிப்படையாகக் கொண்டது ஏனை உவமமாகும்.

“கவிதை கன்னிக்கு மணமும் மலர்ச்சியும் அளிக்கும் வாசனைத் திரவியம் உவமையே. உவமையற்ற கவிதை உப்பற்ற கறிக்கு சமம். கவிஞன் கையாளும் உவமையே அவன் கற்பனை வளத்துக்குச் சாட்சி கூறும். கவிதைக்கு வலக்கை போலப் பணி புரிவது உவமையே”[5] உவமையே செய்யுளுக்கு இனிமையையும் அழகையும் ஏற்படுத்துகிறது எனலாம்.

**உவமையின் சிறப்பு**

உவமை என்னும் சொல் ஒப்புமை என்னும் பொருளைத் தருகிறது. ஒரு பொருளைப் பற்றிக் கூறும் போது, அதனை விளக்க, அதைப் போன்ற இன்னொரு பொருளுடன் ஒப்புமைப்படுத்தி விளக்குவது உவமையாகும். இதனை,

“ஒரு பொருளினை உணர்த்தும் புலவர் அதனை விளக்க முற்படும்போது இயற்கையாகத் தோன்றுவது உவமையும் உவமையின் மறுவடிவமாகிய உருவகமுமேயாகும்”[6] என்னும் வரிகளின் மூலம் அறியலாம்.

கவிதை நன்கு சிறப்புற்று விளங்க உதவுவன உவமையும் உருவகமும் என்கிறார் கு. ஞானசம்பந்தன்.

“உவமை என்னும் சிறந்த நாட்டியக்காரி பல வகையான வேடங்களை அணிந்து, இலக்கியம் என்னும் அரங்கில் தோன்றி, பலவகைக் கலைகளால் நாட்டியங்களாடிப் புலவர் உள்ளத்தை

மகிழ்விப்பாள் என்பதை மொழி அறிஞர் சூரிய நாராயண சாஸ்திரியார் எடுத்துக் காட்டுகிறார்” இதனை,

**“உவமை என்னும் தவலருங் கூத்தி**
**பல்வகைக் கோலம் பாங்குறல் புனைந்து**
**காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி**
**யாப்பறி புலவர் இதயம்**
**நீர்ப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே”[7]**

என்னும் வரிகள் மூலம் நன்கு விளங்கிக் கொள்ளலாம்.

**உவமையின் பயன்**

ஒரு பொருளின் உண்மைத் தன்மையை அறிவதற்கும் அதன் உயர்வை அறிவதற்கும் உவமை பெரிதும் உதவுகிறது. பொருளாவது அல்லது கருத்தாவது எவ்வளவு சிறியதாயினும் உவமை அதனைப் பெரிதும் மிகைப்படுத்தி நன்கு விளக்கம் அளிக்கிறது. இதனை,

**“காண்டல் கருதல் உவமம் ஆகமம்**
**ஆண்டைய அருத்தா பத்தியோடியல்பு**
**ஐதிகம் அபாவம் மீட்சி ஒழிவறிவு**
**எய்திண்டாம் நெறி யென்றிவை தம்மால்**
**பொருளின் உண்மை புலங்கொள வேண்டும்”[8]**

என்னும் மணிமேகலை அடிகள் உவமையின் பயனை எடுத்துரைக்கிறது.

உவமையின் பயன்குறித்து இளம்பூரணர் தெளிவானதொரு விளக்கத்தைத் தருகிறார். “கண்களால் காண முடியாதவாறு காணப்படுதலும், அதனால் கேட்போருக்கு இன்பம் உண்டாகுமாறு அமைதலும் உவமையின் பயன்”[9] என்கிறார்.

உவமைகள் பெரும்பாலும் ஐந்து திணைகளில் நிகழும் ஒழுக்கத்திற்குச் சான்றாகவும், பெருமைக்காகவும், வீரத்திற்காகவும்

கூறப்படுவன ஆகும். அவ்வகையில் சங்க குறிஞ்சித் திணைப் பாடல்களில் அதிகமாக உவமைகள் பயின்று வந்துள்ளன. ஓர் பாடலில் ஒரு உவமையும், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட உவமைகளும் வந்துள்ளன. ஒரு சில பாடல்களில் உவமைகளே இல்லாமல் அழகுணர்வும், எளிமையும், உணர்ச்சியும், சொற்சுவை மட்டுமே அமைந்து அழகு செய்வனவாக இருக்கின்றன.

## குறிஞ்சித் திணைப்பாடல்களில் உவமைகள்

சிறப்பு வாய்ந்த கடலை பல்வேறு பொருளுக்கும் உவமையாக புலவர்கள் கூறியுள்ளனர். இதனை,

**“நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்**
**கடலும் கானலும் தோன்றும்”**[10]

என்ற பாடலில் அலையின் பிறழ்ச்சியால் கடல் அலைகள் வெண்ணிறத்துடன் நிலவு போல தோன்றும் என கடலலையின் வெண்மையை நிலவுக்கு உவமையாகக் கூறியுள்ளனர்.

நீல நிறமுடைய திருமாலைப் போன்ற மலையிலிருந்து அவன் தமையனான வெள்ளை நிறமுடைய பலராமனை போன்று வெள்ளிய அருவி திகழ்கின்றதென்பதை,

**“மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்**
**வாலியோன் அன்ன வயங்கு வெள்ளருவி”**[11]

என கபிலர் பாடுகிறார். இது புராணத் தொடர்பான உவமையாகும்.

கொடிச்சியர்கள் மலையினைத் தொழும் போது அமைந்த கைகளைப் போன்று, காந்தட் குலைகள் விளங்குகின்றது என்பதை,

**“கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல்**
**எடுத்த நறவின் குலையலங் காந்தள்”**[12]

என்னும் அடிகளில் அறியலாம்.

அசோக மரத்தில் வயலைக் கொடிகள் நெற் பெய்து வைத்த உழுத்த மாவினைப் போன்று படர்ந்துள்ளன என்பதனை,

**“நெய்யொடு மயங்கிய உழுந்து நூற்றன்ன**
**வயலை அம் சிலம்பின் தலையது”**[13]

என்ற பாடலின் வழி அறியலாம்.

வண்டின் பொன்னிறத்திற்கும் பொன்னை உரைத்துப் பார்க்கும் கட்டளைக் கல் உவமையாக கூறப்பட்டது.

**“கட்டளை யன்ன மணிநி றத்தும்பி”**[14] என்றும்,

**“இளம்பிறை யன்ன கோட்ட கேழல்”**[15] என்றும்

உவமைகள் ஐங்குறுநூற்றில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

கொல்லிப்பாவையானது நீர்க்கரையிலே வளரும் பைஞ்சாய்க் கோரையின் குருத்தினைப் போன்று விளங்கும் பற்கள் பொருந்திய சிவந்த வாயினை உடையது என்று புலவர் உவமைக் கூறுகிறார். இதனை,

**“அயத்துவளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன”**[16]

என்ற பாடல் வரி உணர்த்துகிறது.

**உள்ளுறை**

சங்க அகப்பாடல்களில் பெயர் சூட்டப்படாத தலைவன், தலைவியரின் வாழ்க்கைச் செய்திகளைக் கூறுவனவாகப் பெரும் பகுதியும் அமைந்துள்ளன. அவர்தம் காதல் வழிப்பட்ட செய்திகள் பல நிலைகளில் வெளிப்படையாகவும், சில நிலைகளில் குறிப்பாகவும் குறிப்பிடப்படும். குறிப்பாக உணர்த்தும் பொருள் நிலைகளில் ‘உள்ளுறை’யும் ஒன்றாகும். இவ்வுள்ளுறை காதல் செய்தியாகிய உரிப்பொருளுக்கு விளக்கமாக

அமையும். இது முதற்பொருள், கருப்பொருள் ஆகியவற்றின் பின்னணியில் வைத்து உரைக்கப்படும்.

'உள்ளுறை' என்பது அகப்பாடல்களில் அமைந்து வரும் சிறப்பிற்குரியது என்பதைத் தொல்காப்பியர்,

**"உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனக்**

**தள்ளாது ஆகுந் திணையுணர் வகையே"**[17]

என்னும் நூற்பாவினால் குறிப்பிடுகிறார். இவ்வுள்ளுறை பாடலில் கருப்பொருளில் வைத்து உரிப்பொருளுக்கு ஒப்புமைப் பொருளாக குறிப்புப் பொருள் நிலையில் உரைக்கப்படும் என்பதை,

**"உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென**

**உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்"**[18]

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

"இளம்பூரணர் உள்ளுறுத்துக் கருதிய பொருள் இதனொடு ஒத்து முடிக என உள்ளுறுத்துக் கூறுவதே உள்ளுறை உவமம் என இந்நூற்பாவை விளக்கியுள்ளார். மேலும் இவர் உள்ளுறையாவது பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்பதொன்று. அது கருப்பொருள் பற்றி வருமென்பது அகத்திணையிலுள் கூறப்பட்டது என உள்ளுறை பற்றிய பொதுக் கோட்பாட்டை விளக்கி உள்ளார்".

"பேராசிரியர் உவமைக்குப் பிறிதொரு பொருள் கூறுகிறார். இதனொடு ஒத்து முடிக என உள்ளுறுத்துக் கூறுவதே உள்ளுறை உவமம் என இந்நூற்பாவை விளக்கியுள்ளார். மேலும் இவர் உவமைக்குப் பிறிதொரு பொருள் எதிர்ந்து உவமம் செய்யாது ஆண்டுப் பிறந்தனவற்றோடு நோக்கிக் கருத்தினாற் கொள்ள வைத்தலின் இற்றது உள்ளுறை உவமமாயிற்று" என விளக்கியுள்ளார்.

“நச்சினார்க்கினியர், மான்புலப்படக் கூறுகின்ற இம்வுமத்தோடே புலப்படக்கூறாது உவமிக்கப்படும் பொருள் ஒத்து முடிவதாக வென்று புலவன் தன் உள்ளத்தே கருதி, தாம் அங்ஙனம் கருதும் மாத்திரையோயன்றியுங் கேட்டால் மனத்தின் கண்ணும் அவ்வாறே நிகழ்வித்து அங்ஙனம் உணர்த்துவதற்கு உறுப்பாகிய சொல்லெல்லாம் நிறையக் கொண்டு முடிவது உள்ளுறை உவமம் எனப் புலவர், கற்போர் ஆகிய இருவரையும் மனதிற் கொண்டு கோட்பாட்டை விளக்கியுள்ளார்”.

“நாவலர் பாரதியார், வெளிப்படக்கூறும் பொருளொடு உள்ளும் பொருளும் ஒத்து முடியுமாறு உள்ளத்து ஊன்றி நுணுகி உணர அமைந்து முடிவது உள்ளுறை உவமம் ஆகும்” என விளக்கியுள்ளார்.

நம்பியப்பொருள் ஆசிரியரும் பொருளாவது உய்த்துணரும்படி புள், விலங்கு முதலிய கருப்பொருட்கள் அடிப்படையில் வரும் என்பார்.

**“உள்ளுறை உவமம் உய்த்துணர் வகைத்தாய்ப்**

**புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்”**[19]

என்ற நூற்பாவின் மூலம் அறியலாம். சுருங்கக் கூறின் உள்ளுறை என்பது உரிப்பொருள் செய்தியை விளக்க உவமம் போல அமையும். உள்ளுறையின் அடிப்படையில் பாடலில் கவிஞன் சொல்ல நினைத்த செய்தியை உணர்ந்து கொள்ள இயலும். இதனடிப்படையில் சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் உள்ளுறைகள் அமைந்துக் காணப்படுவதை ஈண்டு விளக்கப்படுகிறது.

பொருள் தேடிப் பிரிந்து சென்ற தலைவனை எண்ணி வருந்துகின்ற தலைவிக்குத் தோழி ஆறுதல் கூற, தலைவி தன் மனநிலையை உள்ளுறைப் பொருளில் கூறுகிறாள்.

**“யானவர் மறத்தல் வேண்டுதி ஆயின்**

**கொண்டல் அவரைப் பூவின் அன்ன**

**வெண்டலை மாமழை சூழத்**

**தோன்றல் ஆனாதவர் மணி நெடுங்குன்றே”[20]**

இப்பாடலில் தலைவனை மறக்க வேண்டும் என்று கூறிய தோழியிடம், கீழ்க்காற்று வீசுவதால் அவரைப் பூ மலரும். அத்தகைய (அதைப்போன்று) நிறம் கொண்ட பெரிய மேகம் தவழும் உச்சியை உடைய மணி நெடுங்குன்றம் அவர் நினைவு தோன்றுவிக்கின்றது. ஆதலால் நான் அவரை மறப்பது எப்படி என்று தலைவி கேட்கின்றாள்.

வரைவு நீட்டித்த வழி தலைமகள் தனது ஆற்றாமை தோன்றத் தோழிக்குக் கூறிய துறையில் அமையும் இயற்கைக் காட்சியில் விலங்கு விளையாடி மகிழ்தலும் ஒரு வகையாகும்.

**“கான மஞ்ஞை அறை ஈன் முட்டை**

**வெயில் ஆடம் முசுவின் குருளை உருட்டும்**

**குன்ற நாடன் கேண்மை என்றும்**

**நன்றுமன்! வாழி! தோழி! உன்கண்**

**நீரொடு ஓராங்குத் தணப்ப**

**உள்ளாது ஆற்றல் வல்லு வோர்க்கே”**

தலைவனைப் பிரிந்த தலைவி வருத்தத்தில் ஆழ்ந்தாள். அந்த நேரத்தில் குரங்குக் குட்டியானது பாறையிலே மயில் ஈன்ற முட்டையை உருட்டி விளையாடிக் கொண்டிருந்தது. அதற்கு முட்டையின் மென்மைத் தன்மையை அறியவில்லை. அதுபேல் தன் நிலைமை இருப்பதாக தலைமகள் தோழியிடம் கூறுகிறாள்.

உயர்ந்த வேங்கை மரத்தில் ஏறி மலர்களைப் பறிக்க முயன்ற குறமகள் புலி, புலி என்று கூச்சலிடுகிறாள்.

**“கிளர்ந்த வேங்கைச் சேண்நெடும் பொங்கர்ப்**

**பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள்**

**இன்னா இசைய பூசல் பயிற்றலின்**

**ஏகல் அடுக்கத்து இருள் அளைச்சிலம்பின்**

**ஆகொள் வயப்புலி ஆகும்அஃது எனத்”**[22]

வேங்கை மரத்தில் பூவைப் பறிக்கும் குறமகள் ‘புலி, புலி’ என்று ஆரவாரம் செய்வதால் ஊராரும் அறிய அது காரணமாயிற்று. அதுபோல், அவரை நாம் இச்சிக்கத் தொடங்கிய அளவிலேயே ஊரில் அலர் உண்டானது என்றும் உள்ளுறையில் இப்பாடல் அமைந்துள்ளது.

குறித்த காலத்தில் தலைவன் வரைய வராமையால் வாட்டமுற்றிருந்த தலைவியிடம் தோழி தலைவனது வரவைக் கூறுகிறாள்.

**“முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி**

**கல்லாக் கடுவனொடு நல்வரை ஏறி**

**அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டு தன்**

**திரை அணற் கொடுங்வுள் நிறைய முக்கி”**[23]

தினைக்கதிரைப் பறித்த மந்தி கடுவனோடு மலையேறி நிறைய தின்று மழையில் நனைவது போல நீ தலைவனை மணந்து அவன் மனையில் மகிழ்ந்து வாழ்க என்று தோழி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**“கல்லாக் கடுவன் கணம்மலி சுற்றத்து**

**மெல்விரல் மந்தி கறைகூறும் செம்மற்றே”**[24]

என்ற குறிஞ்சிக் கலிப் பாடல் உள்ளுறையாகப் பாடப்பட்டது.

இவ்வாறு உள்ளுறைகள் குறிஞ்சித் திணைப் பாடல்களில் பரவிக் கிடக்கின்றன என்பதை மேற்கண்ட பாடல்களில் அறிய முடிகிறது. உள்ளுறைகள் தலைவன், தலைவி, தோழி ஆகியோர் கூற்றில் அமைந்துள்ளன. இவ்வுள்ளுறைகளில் தலைவனது இயல்பு, பண்பு, ஒழுக்கம், சுட்டப்படுவதோடு தலைவியது மன நிலையையும் சுட்டிக்

காட்டப்பட்டுள்ளது. கருப் பொருள்களின் அடிப்படையில் காதல் வாழ்க்கையின் உரிப்பொருளை விளக்குகின்ற இவ்வுள்ளுறைப் பொருள் காதல் தலைமை மாந்தரின் அன்பினையும், பிற மாந்தரின் அன்பினையும் எடுத்துக்காட்டுவனவாக அமைந்துள்ளன.

## இறைச்சி

இறைச்சி என்பது குறிப்புப் பொருள் தருவதாகும். இறைச்சிப் பொருள் பற்றி பெரும்பான்மை இடம்பெறும் நூல் தொல்காப்பியமே ஆகும். தொல்காப்பியர் ஆறு இடங்களில் இறைச்சிப் பொருள் பற்றி கூறுகிறார்.

**“இறைச்சி தானே பொருட்புறத் ததுவே”**[25]

**“இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே**
**திறத்தியன் மருங்கில் தெரியு மோர்க்கே”**[26]

என்று தொல்காப்பியர் பொருளியலில் இயம்புகிறார். இவற்றில் முதலில் கூறிய நூற்பாவினை,

**“இறைச்சி தானே உரிப்புறத் ததுவே”**[27]

என்று இளம்பூரணர் கூறுவர். எனினும் பொருள் வேறுபாடு ஏதுமில்லை.

**“அன்புறு நகுந இறைச்சியுற் சுட்டலும்**
**வன்புறை யாகும் வருந்திய பொழுதே”**[28]

என்று அன்புறத்தக்கனவற்றை இறைச்சியால் கூறி வற்புறுத்தலும் உண்டு. அவ்வாறு அன்புறத்தக்கனவற்றை இறைச்சியால் கூறும்போது அது வன்புறையாகிறது என்ற பொருளிலும் இடம் பெறுகிறது.

நம்பியகப்பொருள் இறைச்சியைப் பற்றி, “கருப்பொருள் பிறக்கும் இறைச்சிப் பொருளே”[29] என்று கூறுகிறது. மாறனலங்காரம்,

**“கருப்பொருள் களனாங் கட்டுரை பயின்ற**

**பொருட்புறத் தனவாம் இறைச்சிப் பொருளணி”**[30]

என்றும் இறைச்சியைப் பற்றிக் குறிப்பிடுகிறது. எனினும், முழுமையான தெளிவான விளக்கம் பெற இயலவில்லை. தொல்காப்பிய உரையாசிரியர் இறைச்சியை உள்ளுறை உவமம் போலக் கருதியுள்ளார்.

புத்தமித்திரர் இயற்றிய பிற்கால இலக்கண நூலான வீரசோழியம்,

**“ஒட்டியகேள்வி மொழிவகை கோள் உட்பெறும் பொருளென்று**

**இட்டிகச் சொற்பொருள் எச்சம் இறைச்சி பயன்குறிப்பு”**[31]

என்று கூறுகிறது. இறைச்சி என்பதைக் கருப்பொருளாக மட்டும் கொண்டு அங்கியற்பொருள், திணை நிலைப் பொருள், வன்புலப் பொதுப்பொருள், மென்புலப்பொதுப்பொருள், பெருமை பொதுப் பொருள், விருந்துப் பொதுப் பொருள் என அதனை ஆறு வகையாகக் கூறுகிறார்.

**“தொல்காப்பியர் கூறும் குறிப்புப் பொருளே இறைச்சி”**[32]

**“காட்சிகளில் எதிரொலியாக வருவதே இறைச்சி”**[33]

**“உடனுறையும் உள்ளுறையும் ஒன்றே”**[34]

**“உவம ஆற்றலின்றிக் குறிப்புப் பொருளை உணர்த்துவது இறைச்சி”**[35]

**“உள்ளுறை தவிர இறைச்சி என்பதொரு குறிப்புப் பொருள் இல்லை”**[36]

என்று பல அறிஞர்கள் இறைச்சிப் பற்றி பல்வேறு கருத்துக்களைக் கூறினாலும் உள்ளுறை உவமத்தோடு தொடர்புப்படுத்தி பேசப்பட்டிருந்தாலும் உள்ளுறை உவமத்தினின்று இறைச்சி வேறுபட்ட ஒன்று என்பதைத் தெளிவாக உணர முடிகின்றது.

## இறைச்சிப் பொருள் பற்றிய பொதுவான கருத்துக்கள்

பல்வேறு அறிஞர்கள், திறனாய்வாளர்கள், கட்டுரையாளர்கள் இறைச்சிப்பொருள் பற்றி பல்வேறு வரையறைகளையும், திட்ப நுட்பத்தினையும் கூறியுள்ளனர். இக்கருத்துகள் அனைத்தும் ஆய்வுத் தெளிவுக்குச் சற்றேனும் உதவும் என்ற நோக்கில் இவை இங்கு தொகுத்துக் கூறப்படுகிறது.

1. இறைச்சிப் பொருளாவது பொதுவாகக் கருப்பொருளையும் சிறப்பாக அகப்பொருள் சார்ந்த உயிரினங்களையும் குறிக்கும்.
2. மக்கள் முதலிய அகம் ஐந்திணையில் இவ்வுயிரினங்களின் வாழ்வு முறை பற்றிச் சுட்டுமிடங்கள் பலவுண்டு. உரிப்பொருள் என்பன மக்கள் ஒழுகலாறே. இவ்வுயிரின் வாழ்வும் உரிப்பொருள் போலச் சுட்டடப்படினும் அவை உரியின் பகுதியாகா அவை உரிப்புறத்தனவாகும்.
3. உரிப்புறமாகிய இவ்வுயிரிகளின் செயலைக் குறிக்குமிடத்து அவற்றில் பிறிது பொருள் தருவனவும் உண்டு. தராதனவும் உண்டு. தெளிவுடன் தெரிந்து கொள்ள வல்லவர்க்கு இவ்விறைச்சியில் பிறக்கும் பிறிதுபொருள் புலனாகும்.
4. இறைச்சி என்பது உள்ளுறைப் போல அகப்பொருள் இலக்கியங்களில் எடுத்தாளப்படும் பொருள் நய உத்தியாகும்.
5. கருத்துப் பொருளோடு குறிப்புப் பொருளும் உணர்த்தப்படும் வகையில் அமைவது இறைச்சியாகும்.
6. பிரிவுக்காலத்தில் அன்புறுவனவாம் உயிரினங்களை தலைவன் வழியிடைக் காண நேரின் தலைவியின் நினைவு வந்து விரைவில் திரும்புவான் என்று தலைவியைத் தோழி வற்புறுத்தி

ஆற்றுவதுண்டு. இவ்வாறு உயிரினங்களின் செயலைக் கொண்டு தன் கருத்தினை நிலையாக்கம் செய்வதே இறைச்சிப் பொருளாகும்.

7. சங்க இலக்கியத்தில் உள்ளுறையும் இறைச்சியும் சங்க பாடல்களுக்கு உரையெழுதிய உரையாசிரியர்களின் உரைவழி நின்று கொள்ளப்படும் செய்தியையே விளக்குகிறது.

8. உள்ளுறையும் இறைச்சியும் அமைய இடனாக நிற்கும் கருப்பொருள்கள், பொழுதும் இடமும் ஆகிய முதற்பொருளுக்கு அடையாக நின்று சிறப்பிக்கின்றன.

இனி சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் இறைச்சி பயின்று வரும் விதத்தைக் காணலாம்.

தலைவனுக்கு ஏற்படும் துன்பத்தினை நினைத்து தோழி, இரவுக்குறி மறுப்பதாக அமைந்த கடுந்தோள் கரவீரனாரின் பாடல்,

**“கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றெனக்**
**கைம்மை உய்யா காமர் மந்தி**
**கல்லா வன்பறழ் கிளைமுதல் சேர்த்தி**
**ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்**
**சாரல் நாட நடுநாள்**
**வாரல் வாழியோ வருந்துதும் யாமே”**

என்ற பாடல் இருளிலும் தாவுகின்ற வல்லமையுடைய ஆண் குரங்கு இறந்துபடுகிறது. அதனை நினைத்து கைம்மையை மேற்கொள்ளாது தன் குட்டியை உறவுக் கூட்டத்தினிடையே ஒப்படைத்துவிட்டு, தன் இணையான ஆண் குரங்கு இறந்து போன அதே மலைப்பகுதியில் தானும் குதித்து உயிரை விடும் சிறப்புடைய நாட்டினையுடையவனே, நீ நள்ளிரவில் வந்த இடத்து வருகின்ற துன்பங்களை நினைத்து

வருந்துகிறேன் யான் என்று கூறி தோழி இரவுக்குறியை மறுத்ததாக அமைந்துள்ளது.

இரவுக்குறியின் இடர்பாட்டைக் கூறி தலைவனை விரைவில் மணம் செய்ய தோழி கூறுவதாக அமைந்த பாடல்.

**“ஆடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்**
**ஈர்உயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய**
**இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை**
**நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த**
**மேய்மணி விளக்கின் புலர ஈர்க்கும்**
**வாள் நடந்தன்ன வழக்கு அருங்கவலை”**[37]

கருவுற்றிற்கும் பெண்புலியின் பசியைப் போக்க ஆண் புலி பெரிய ஆண் பன்றியைக் கொன்றது. கொன்ற அப்பன்றியை நல்ல பாம்பு மேய்வதற்கு செல்ல ஒளியுண்டாக உமிழ்ந்து வைத்த விளக்கொளியில் இழுத்துச் செல்லும் இப்படிப்பட்ட அரிய வழியில் வருகிறான். அது நமக்கு துன்பத்தையே தருகிறது. இனி இரவில் வராமல் இருந்தால் நன்று என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள். இப்பாடல் இறைச்சி பொருள்பட அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.

பாலை நிலத்தில் உள்ள குமிழ மரத்தில் குமிழம் பழம் கீழே உதிர்ந்து கிடக்கின்றன. அப்பழங்கள் அங்கு துள்ளி விளையாடும் மான்களுக்கு உணவாகின்றன. அதுபோல தலைவன் ‘யான் வந்திருக்கிறேன்’ எனும் வார்த்தையானது தலைவிக்கு உணவாகும். மகிழ்ச்சியைத் தரும் என்ற இறைச்சிப் பொருளில் அமைந்த நற்றிணைப் பாடல்,

**“அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி**
**எறிமட மாற்கு வல்சி ஆகும்”**[38]

என்பனவாகும். இறைச்சிப் பொருள் தோன்றும்படியாகக் குறிஞ்சிக் கலிப்பாடல்,

**“இலங்கும் அருவித்தே இலங்கும் அருவித்தே**
**வானின் இலங்கும் அருவித்தே தானுற்ற**
**சூளிபேணான் பொய்த்தான் மலை”**[39]

தலைவன் சூளுரைப் பொய்த்தான் என்ற பொருள்பட இப்பாடல் வரிகள் அமைந்துள்ளதைக் காணலாம்.

இவ்வாறு இறைச்சிப் பொருள்கள் களவொழுக்க நிகழ்வுகளை ஒட்டியே அமைகின்றன. சங்கப் புலவர்கள் தம் நுண்ணறிவின் வெளிப்பாட்டின் காரணமாக இறைச்சி பொருளைத் தம் பாடல்களில் கையாண்டுள்ளனர்.

**உருவகம்**

உவமை போன்றே உருவகமும் கற்பனையின் வெளிப்பாடு ஆகும். இலக்கியத்திற்கு இன்பமும், நயமும் சேர்க்கக்கூடியதாகும்.

**“உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்து**
**ஒன்றென மாட்டின் அஃதுருவக மாகும்”**[40]

உவமையால் பொருளையும், உவமிக்கப்படும் பொருளையும் வேறுபாடு ஒழிவித்து ஒன்றென்பதோர் உள்ளுணர்வு தோன்ற ஒற்றுமை கொள்ளுதின் அஃது உருவகம் என்னும் அலங்காரமாம் என தண்டியலங்காரம் உருவகத்திற்கு பொது இலக்கணம் கூறுகிறது.

“ஆங்கிலக் கவிதையில் Smile (உவமை) Metaphor (உருவகம்) என்ற இரு அணிகளே இருக்கின்றன. இவை இரண்டும் தொல்காப்பியர் உவமியலில் விளக்கும் உவம மரபுகளுக்கு ஒப்பாக கொள்ளத்தக்கனவாகும் என்பார் இ. சுந்தரமூர்த்தி”[41]

“இரண்டு பொருட்களையும் வேறு வேறாகக் காணாமல், ஒன்றேலேயே மற்றொன்றைக் கண்டால் அது உருவகம்”[42]

“சுருங்கிய உவமையே உருவகம் ஆயிற்று”[43] என்றும் உருவகத்திற்கு அ.ச. ஞானசம்பந்தன் விளக்கம் தருவார்.

குறிஞ்சித் திணைப் பாடல்களில் உவமை, உருவகங்களைப் புலவர்கள் கையாண்டு இருப்பது பாடல்களுக்கு நயத்தை சேர்ப்பதாகும்.

**“நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே”[44]**

**“புலவி தீர அளிமதி இலைகவர்பு”[45]**

**“அலர்வாய்ப் பெண்டிர் அம்பலொடு ஒன்ற”[46]**

**“இழையணி யானை இயல்தோ மிஞ்லியொடு”[47]**

போன்ற உருவகங்கள் பாடல்களை நயப்படுத்துகின்றன.

**வர்ணனை**

வர்ணனை என்பது நிகழ்வுகளை சுவைப்பட கூறுவதே ஆகும். இயற்கை, சமுதாய நிகழ்வுகள், காட்சி போன்றவற்றை உவமை உருவகத்தோடு கற்பனையோடு கூறுவது வருணனை ஆகும். இதை பாடல்களில் மிகுதியாக புலவர்கள் கையாண்டு இருக்கிறார்கள்.

**இயற்கை வருணனை**

சங்கப் புலவர்கள் இயற்கையோடு இயைந்து வாழ்க்கை நடத்தினர். இயற்கையே இறைவன் எனக் கண்டு எழிலில் திளைத்து மகிழ்ந்தனர். மக்கள் வாழ்வில் இடம் பெற்ற இயற்கை, இலக்கியத்திலும் இடம் பெறுகிறது. இயற்கையழகு, இயற்கை நிகழ்ச்சிகள் ஆகியவை சங்க இலக்கியங்களில் கவின்பெற வரையப்பட்டுள்ளன. மனிதனும் இயற்கையும் வேறல்ல என்னும் உணர்வை அளிப்பதுதான் இயற்கையின் நெறியாகும்.

“இயற்கையும் மனிதனும் மணம் செய்து கொள்ளும் காட்சியைக் காணுகின்றனர். பரந்து விழித்தெழும் இயற்கைக்காட்சியையும், நுணித்துணரும் அக்காட்சியையும் பண்டைத் தமிழ்ப்புலவர்கள் ஒருங்கு இணைத்துப் பாடினர்”

இயற்கையோடு இணைந்து விட்ட புலவர்களின் பட்டறிவு உணர்ச்சியானது. கவிதையுடன் இணைந்து பல பாடல்களில் பரந்து கிடப்பதைக் காண முடிகிறது. இயற்கை வருணனைகளை சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல்களில் இடம் பெற்றுள்ளமை இங்கு ஆராயப்படுகிறது.

மலையின் எழிலானத் தோற்றங்கள், வானத்திலிருந்து இடியோசையோடு கூடிய மழை பொழிகின்ற காட்சிகள் வயலின் நெற்கதிர், கூடுகட்டி வாழும் பறவைகள், கிளிகளை ஓட்டும் காட்சிகள், குளங்களில் தாமரை முதலிய பூக்கள், பருவக் காற்றுகள் முதலிய யாவும் தமது உள்ளம் கவர்ந்து விருந்து அளிக்கின்ற காட்சியைப் பிறரும் நுகருமாறு சொல்லோவியங்களாக புலவர்கள் வருணித்துள்ளார்கள்.

“குறிஞ்சி என்று சொல்லியவுடன் சில காட்சிகள் நம் மனத்தில் எழுகின்றன. ஓங்கிப் பரந்திருக்கும் மலைச் சாரல், வளைந்து நெளிந்து பாய்ந்தோடும் ஆறுகள் தலைவியைத் தேடித் தலைவன் எவ்வித துன்பத்தையும் பொருட்படுத்தாது நள்ளிரவில் வேட்கையோடு வரும் பெருமிதத் தோற்றம் ஆகிய இவையெல்லாம் ‘குறிஞ்சி’ என்ற சொல்லைக் கேட்டவுடன் நம் உள்ளத்தில் ஓவியக் காட்சிகளாக விரிகின்றன”[48] என்கிறார் மு.வ.

## இயற்கை நிலை

மனிதனின் தொன்மையானத் தோற்ற வளர்ச்சிக்கு உறுதுணையானது குறிஞ்சி நிலத்தின் இயற்கை என்பதை உறுதியாகக் கொள்ளலாம்.

இயற்கை நிலை மக்களின் இயல்புகளுக்கேற்ப அமைந்துள்ளதென்பதை மூன்று கோட்பாட்டாளர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர். “இயற்கை நிலை என்பது நெடுங்காலமாக இருந்து வந்ததெனினும் அதற்கு முறையாக வடிவமைத்துக் கொடுத்தவர் ஆப்சு ஆவர். இந்திய அரசியல் சிந்தனை என்று சிறப்பித்துக் கூறப்படும் அருந்த சாத்திரத்திலும் இயற்கை நிலை சொல்லப்பட்டுள்ளது”[49] என்பர்.

அவரைப் பூவினைப் போன்ற வெண்மேகத்தை அழகு பெறச் சூடி எழில் மிக்க பெருமலை தோன்றுவதாக கபிலர் வருணித்துள்ளார். இதை,

**“கொண்டலி அவரைப் பூவின் அன்ன**

**வெண்தலை மாமழை சூடி**

**தோன்றல் ஆனாது அவர்மணி நெடுங்குன்றே”**[50]

என்ற பாடல் வரிகளில் அறியலாம். தமிழத்தின் எந்தப் பகுதியிலும் ஏதேனும் ஒரு திசையிலாயினும் மலைக்காட்சி இருப்பதுண்டு. மலை தோன்றாப் பகுதியே பெரும்பாலும் தமிழகத்தில் இல்லை எனலாம். புலவர்கள் ஏனைய காட்சிகளைத் தீட்டுவதை காட்டிலும், குறிஞ்சிக் காட்சிகளைத் தீட்டுவதில் அதிக ஆர்வம் காட்டி வந்தனர் என்பதை இப்பாடலின் வாயிலாக அறியலாம்.

செவ்வேளாகிய முருகன் திருமார்பிலே பொலியும் ஆரம்போலச் செக்கர் வானிலே அந்தி நேரத்தில் வெண்ணிறக் கொக்குகள் பறந்து செல்லும் ஒழுங்குக் காணப்படுகிறது. இதை,

**“நெடுவேள் மார்பின் ஆரம் போலச்**

**செவ்வாய் வானம் தீண்டிமீன் அருந்தும்**

**பைங்காற் கொக்கின் றிறைபறை உகப்ப”**[51]

என்ற பாடல் இதை சுவைப்படக் கூறுகிறது.

நிலத்தில் விழும் அருவியானது பாம்பு போல தோற்றமளிக்கிறது என்பதை,

**"கல்பொருது இரங்கும் கதழ்வீழ் அருவி**

**நிலம்கொள் பாம்பின்"**[52]

என்ற பாடலடிகளின் வழி அறியலாம்.

குழல் ஒலிப்பவும், பல வகை வாத்தியங்கள் ஒலிக்கவும் கழைக்கூத்தி முறுக்குண்ட கயிற்றில் நடந்தாள். அவள் நடந்த கயிற்றில் குரங்குக் குட்டித் தூங்கும். அதனைக் கண்ட குறக்குடி சிறார்கள் மரத்தில் ஏறி தாளம் கொட்டுவார்கள். அப்படிப்பட்ட குன்றில் உள்ளது காவற்காடு சூழ்ந்த ஊர் என்று,

**"குறுக்குறு மாக்கள் தாளம் கொட்டும்அக்**

**குன்றகத் ததுவே கொழுமிளைச் சீறூர்"**[53]

கோட்டம்பலவனார் வருணிக்கின்றார்.

**காட்சி வருணனை**

காட்சி வருணனைகள் சங்கக் குறிஞ்சிப் பாடல்களில் இடம் பெற்றிருந்தது. சிறிய கொம்பினையுடைய காட்டுப்பசு மலையில் மேய்ந்து கொண்டு இருந்தது. அது காந்தள் மலரைத் தீண்டியதால் தாது உதிர்ந்தது. தாதினைத் தன்மேல் உதிர்ந்த தாயை அறியாமல் கன்று மயங்கியது. இப்படிப்பட்ட காட்சி அமைந்த பாடல்,

**"சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா**

**அலங்குகுலைக் காந்தள் தீண்டித் தாதுஉகக்**

**கன்று தாய் மருளும்"**[54]

இவை போன்ற பல காட்சிகள் நெஞ்சில் மறையாதவைகளாகும்.

இவ்வாறு குறிஞ்சித் திணைப் பாடல்களின் தொன்மையை எண்ணும் போது இயற்கையைப் பாடும் பாடல்களின் வளர்ச்சியில் அவை பெறும் தலைமையான பண்பு புலனாகிறது. மனிதன், விலங்கு, தாவர வகைகள் போல்வன வாழ ஏற்ற இடமாக மலை அமைப்புகள் அமைந்துள்ளன.

**கற்பனை நயம்**

கற்பனை என்பது, மனதில் உண்டாகும் படைப்புக்கு வித்தாகும். கலைஞன், தன் மனதில் உருவாகும் எண்ணங்களுக்குக் கொடுக்கும் உருவமே கற்பனையாகும். கற்பனையை, "கற்பனை என்பது ஒரு கனவு, கற்பனையின் வழியாய் வெளிப்படுவதுதான் சிந்தனை, புலன்கள் நேரிடையாக ஒரு பொருளை நினைவுக்குக் கொண்டு வந்து நிறுத்தும் ஒரு வகை ஆற்றலே கற்பனை"[55] என்றும்,

"எந்தப் பாடலும் யாதானும் ஒரு உணர்ச்சியைப் படிப்பவரின் உள்ளத்தில் எழுப்புதல் வேண்டும். இந்தப் பயனை சாதிப்பது எதுவோ அதுவே கற்பனை"[56] என்றும் விளக்கம் தருகிறார் சோ.ந.கந்தசாமி.

"ஓர் இலக்கியத்திற்குக் கருத்து, உணர்ச்சி, கற்பனை, வடிவம் என்ற நான்கும் இன்றியமையாதனவாகும்"[57] என்று முனைவர். மு. வரதராசனார் கூறுகிறார்.

உள்ளத்தில் பல நிலைகளையும் குறிக்கக் கற்பனை என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது என்கிறார் சி.டி.வின்செஸ்டர். மேலும் கற்பனையை மூவகையாகப் பிரிப்பர்.

1. படைப்புக் கற்பனை (Creative Imagination)
2. இயைபுக் கற்பனை (Associative Imagination)
3. கருத்து விளக்கக் கற்பனை (Interpretative Imagination)

என்பனவாகும்.

சங்க குறிஞ்சிப் பாடல்களில் நீங்காத இடத்தைப் பெற்றிருக்கும் கற்பனை நயத்தைக் காண்போம்.

நீட்டிக் கொண்டிருக்கும் பருத்த கல்லின் பக்கத்தில் படரும் மானைக் கொடி தூங்குகின்ற யானை மீது கல் எனத் தவறுதலாகக் கருதிபடருகிறது என்று பரணர் கற்பனை செய்கிறார்.

**“துறுகல் அயலது மானை மாக்கொடி**

**துஞ்சுகளிறு இருவரும் குன்றநாடன்”**[58]

என்ற பாடலில் இந்த இயைபுக் கற்பனையை அறியலாகிறது.

மத்தளத்தைப் போன்ற அடிப்பாகத்தையுடைய வேங்கை மரம் இரண்டு யானைகள் பூக்களோடு கலந்து கலச நீரை தன் மீது சொரிய அது தாமரையின் திருமகள் தனிச் சிறப்புடன் விளங்குவது போல காட்சியளிக்கிறது என்கிறார் கபிலர்.

**“வரிநுதல் எழில்வேழம் பூநீர்மேல் சொரிதர**

**புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறு எய்தி”**[59]

என்ற பாடல் மூலம் படைப்புக் கற்பனையை அறிய முடிகிறது.

காவிரியில் வெள்ளம் விரைந்தோடுகிறது. நெடுஞ்சுழிகளையுடைய வெள்ளப் பகுதியிலே மூழ்கி மூழ்கிக் குளிப்பவளைப் போல அலரால் துயரம் நீங்க அவள் என்னைத் தழுவித் தழுவி மகிழ்ந்தாள் என தலைவன் கூறுகிறான்.

**“கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று**

**நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல”**[60]

என்ற பரணர் பாடல் வழி கருத்து விளக்கக் கற்பனையை அறிய முடிகிறது. இவைப்போன்ற பல பாடல்களில் கற்பனை வளம் பரந்து கிடக்கிறது.

## அணி நயம்

ஒவ்வொரு மொழியிலும் இலக்கியத்தை அழகுறச் செய்வது அணி என்று கருதப்படுகிறது. 'அணியிலாக் கவிதை பணியிலா வனிதை' என்பது நம் நாட்டில் வழங்கி வரும் பழமொழியாகும்.

புலவர் தம் கற்பனைத் திறத்தாலும் மொழிப் புலமையாலும் சொல்லழகும் பொருளழகும் தோன்றப் பாடிய செய்யுள்களில் காணப்படும் அழகினை விளக்குவது கற்பனை ஆகும். செய்யுளுக்கு உயிர் நிலையாக விளங்கும் கற்பனையை படைப்பதற்கு அணிகள் மிகவும் இன்றியமையாதனவாகும்.

**"மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்**
**ஆடமைத்தோ ணல்லார்க்கு கணியும் போல"**[61]

என்று நன்னூல் அணிநலச் சிறப்பைக் கூறுகின்றது.

மொழியின் வளர்ச்சியோடு அணியும் ஒன்றுபட்டு காலப்போக்கில் பல்வேறு வடிவங்களும் வண்ணங்களும் குறிப்புணர்வுகளும் கொண்டு வளம் பெற்றுள்ளது. ஆகவே மொழி வரலாற்றில் அணிகள் பிறந்து வளர்ந்து பல்வேறுக் கிளைகளாகப் பெருகி வந்துள்ளன.

அணி என்ற சொல்லுக்கு பிங்கல நிகண்டு என்னும் நூல் கீழ்க்கண்டவாறு விளக்கம் தருகிறது.

**"படையின துறப்பு மொப்பனையு மழகும்**
**பெருமையுங் கலனு மன்பு மணியெனல்"**[62]

அதாவது 'அணி' என்னும் சொல்லின் பொருள்களாகப் படை, வகுப்ப, அலங்காரம், அழகு, பெருமை, ஆபரணம், அன்பு ஆகியவற்றைப் பிங்கல நிகண்டு கூறுகிறது. இப்படிப்பட்ட இலக்கண அணிகள் மொத்தம் முப்பத்தைந்து உள்ளதாகக் கூறப்படுகிறது.

இவ்வணிகள் சங்க குறிஞ்சித் திணைப் பாடல்களில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

இரவுக்குறி வருகிறான் தலைவன், கடும் மழை கரிய மேகம் அடர்ந்து செறிந்து பொழிவதால் வானம் தெரியவில்லை. நீர் மிகுந்து பரவுவதால் நிலம் தோன்றவில்லை. இந்த நிலை இயல்பானதுதான். இதுவே கபிலர் கூறும் நடையால் உயர்வு நவிற்சி போல தோன்றுகிறது.

**“பெயல்கால் மறைத்தலின் விசும்பு காணலரே**

**நீர்பரந் தொழுகலின் நிலங் காணலரே”**[63]

என்ற குறுந்தொகைப் பாடல் அடிகளில் இப்போக்கைக் காணலாம்.

கான வேடுவன் கவன் எறிகிறான். அந்த சிறுகல் செல்கின்ற நிலையை உயர்வாகப் புலவர் பாடுகிறார்.

**“.................................. வன்கைக் கானவன்**

**கடுவிசைக் கவன் எறிந்த சிறுகல்**

**உடுவுரு கணையிற் போகிச் சாரல்**

**வேங்கை விரியுணர் சிதறித் தேன் சிதையூஉப்**

**பலவின் பழத்துட் தங்கும்”**[64]

என அகநானூற்றில் பாடுவார்.

அடுத்து, நிரல் நிறுத்திப் பாடும்போது அமையும் தொடை அமைப்பில் அமைவது நிரல் நிறையணியாகும்.

தலைவன், தலைவியின் எழில் நலம் பாராட்டுகின்றான். நெற்றி, முகம், தோள், கண், இயல், சொல் போன்றவற்றைப் பாராட்டும் தலைவன்.

**“நுதலும் முகனும் தோளும் கண்ணும்**

**இயலும் சொல்லும் நோக்குபு நினைஇ”**[65]

என்று பாராட்டும்போது முறையே நெற்றிக்குப் பிறையும், முகத்திற்கு மதியும், தோளிற்கு மூங்கிலும், கண்ணிற்குப் பூவும், சாயற்கு மயிலும், சொல்லிற்குக் கிளியும் நிரல்பட அமைந்துள்ள அழகைக் காணலாம்.

குன்றத்தில் அருவி கொட்டுவது இயல்பானது. ஆனால் தலைவன் தலைவிக்கு செய்த கொடுமையால் தான் அக்குன்று தன் வருத்தத்தை அடக்கமுடியாமல் கண்ணீர் அருவியாகப் பெருக அழுதது என்று புலவர் கூறுகிறார்.

**“தம்மோன் கொடுமை நம்வயின் ஏற்றி**
**நயம்பெரிது உடைமையின் தாங்கல் செல்லாது**
**கண்ணீர் அருவியாக அழுமே”**[66]

என்ற நற்றிணைப் பாடல்வழி அறியலாம். இதில் தற்குறிப்பேற்றணி பயின்று வந்துள்ளது. தற்குறிப்பேற்றணி என்பது புலவர் தான் கூற கருதிய செய்தியை இயல்பாக நடக்கும் ஒரு நிகழ்ச்சியின் மீது ஏற்றிக் கூறுவதே ஆகும்.

**நனவோடை**

வெளிநாடுகளில் தான் நனவோடையைப் பயன்படுத்தி திரைப்படங்களை உருவாக்கியுள்ளனர். பின்பு இலக்கியங்களிலும் இது ஒரு உத்தியாகவே இடம் பெற்றுள்ளது. இவ்நனவோடை உத்தி அமையும் முறைக் குறித்து பல்வேறு கருத்துக்கள் கூறப்படுகின்றன.

“முன்பு நடந்த நிகழ்ச்சியைப் பாத்திரங்கள் மீண்டும் எண்ணிப் பார்க்குமாறு கதையை எழுதுவது, பாத்திரங்களின் அனுபவங்களை அவர்களே எண்ணிப் பார்க்குமாறு அமைத்துக் கொள்வதாகும்”[67] என்றும்,

“உள்ளத்தில் ஒன்றிலிருந்து ஒன்றும் அதிலிருந்து மற்றொன்றும் தொடர்ந்து உள் மனதிலிருந்து எழும் எண்ணங்களை அமைக்கும் முறையே நனவோடை முறையாகும்”[68] என்றும் கூறுவர்.

இவ்வாறு நனவோடை உத்தியானது படைப்புகளில் பாத்திரங்களின் மூலம் நனவினை உணர்ச்சிப்பூர்வமாக வெளிப்படுத்த பயன்படுகின்றது. இது பாத்திரங்கள் தங்கள் வாழ்வில் நடந்த நிகழ்வுகளைத் தானே நினைத்துப் பார்ப்பது போன்றும், தன் கடந்த கால நிகழ்வுதனை தன் மனக்கண்முன் கொண்டு வந்து இருத்தி பிறரிடம் கூறும் வண்ணமும் அமையும்.

தலைவன் வரைவு நீட்டிக்கின்றான். அவன் வரும் வரையில் பொறுத்திருப்பதாக தோழியிடம் கூறுவதாக அமைந்த பாடல்,

**“பீலி மஞ்ஞை ஆறும் சோலை**
**ஆங்கண் அறைய அகல்வாய்ப் பைஞ்சுனை**
**உன்கண் ஒப்பின் நீலம் அடைச்சி**
**நீரலைக் கலைஇய கண்ணிச்**
**சாரல் நாடனொடு ஆடிய நாளே”**[69]

என்று குறமள் குறிஎயினி எனும் புலவர் பாடுகிறார்.

அதாவது மலைப்பக்கத்தில் மழை பெய்கிறது. மயில் மழையில் நனைகிறது. நனைந்த அது சோலையில் உலா வருகிறது. சோலை அருகில் சுனை உள்ளது. அச்சுனையில் தலைவனுடன் நீராடினேன். அப்போது நீர் அலைத்தலால் சாரல் நாடனின் மாலை குலைந்தது. அவனோடு சுனையில் நான் ஆடிய நாளினை நினைத்து நான் எப்பொழுதும் துன்படுவது இல்லை என்று தலைவி கூறுகிறாள்.

தலைவி தலைவனை முதலில் சந்தித்து காதலுற்றுக் களவுறவுப் பெற்றாள். பேரூர் விழாவில் அவள் தன் தோழியோடு சென்றிருந்த பொழுதை, தோழிக்கு தலைவி நினைவுப்படுத்துகிறாள்.

**"பேர்ஊர் கொண்ட ஆர்கலி வழவில்**

**செல்வாம் செல்வாம் என்றி அன்றுஇவண்**

**நல்லோர் நல்ல பலவால் தில்ல"**[70]

என்ற பாடலில் வெண்ணாகன் எனப் புலவர் விளக்குகிறார். தோழி! முன்னர் ஒரு நாளிலே பேரூரினர் செய்த விழாவில் நாமும் நல்லோர்கள் வாழ்த்தினர். நம் அன்னை தழையாடை கொடுத்து என் அழகிய பெண்மை நலத்தைக் காத்தாள். இப்போது அவ்வழகையெல்லாம் தலைவன் கொள்ளை கொண்டு போய் விட்டான் என்று கிழத்தி கூறுகிறார். முன்பு நடந்த நிகழ்வை தோழி நினைவுப்படுத்தி வருந்துகிறாள்.

"முன்னொரு நாள் தலைவியும் தோழியும் சேர்ந்து தலைவனின் பெருமைகளைச் சொல்லி வள்ளைப் பாட்டுப் பாடியதை தோழி தலைவிக்கு நினைவுப்படுத்துகிறாள். உடனே தலைவி மலைநாடன் நேரில் வந்து அருள் செய்தது போல அப்போது அவளுக்கு இருந்தது வாடிய தோள்களும் சிறப்புற்றிருந்தது என்று தோழி கூறுகிறாள்"[71]

## இசை நயமும் ஒலி நயமும்

பண்டைத் தமிழர்கள் இசை அறிஞர்கள் பண்களைக் கண்டறிந்ததோடு அமையாமல் அவைகளுக்குரிய காலத்தையும் கணக்கிட்டுள்ளனர். இசை, இன்பக் கலைகளின் முடி என்பதையும், இசை வரலாற்றின் ஊழியில் துளிர்ந்த ஒரு சமுதாயக் கலை என்பதையும், இறைவன் ஏழிசையால் இசைப்பண்ணாய் உணர்ந்திருந்தார்கள். உயிர்களையெல்லாம் உயிர்ப்பித்து, வாழ்வித்து வளம் பெருக்குவது இவையே ஆகும். அவ்வகையில் குறிஞ்சித் திணைப் பாடல்களிலும் இசை நயத்தை இங்கு கண்டு உணரலாம்.

**"அருவி தண்ணென் முழவின் இமிழ்இசை காட்டும்"**[72]

**"நெடுவேள் அருவி முதுவாய்க் கோடியர் முழவின் ததும்பி"**[73]

போன்ற சொற்றொடர்களில் அருவி முழவு இசையைப் போன்று இனிதாக ஒலிக்கின்றது என்று புலவர் கூறுகிறார்.

என் காதலி வாழும் ஊரில் மயில்கள் ஆட அதற்கேற்ப பேராந்தைகள் மாறி மாறி ஒலிக்கிறது என்று தலைவன் தலைவியின் ஊரைச் சிறப்பிக்கின்றான்.

**"மயில்கள் ஆலக் குடிளைு இரட்டும்**
**துறுகல அடுக்கத்து அதுவே பணைத்தோள்"**[74]

என்ற வரிகள் மூலம் கபிலர் தெளிவுப்படுத்துகிறார். அங்கு ஆந்தைகளின் ஒலிக்க மயில்கள் ஆடும் காட்சியை புலவர் நயம்படக் கூறுகிறார்.

## சொல் நயம்

சங்க இலக்கிய அகப் பாடல்கள் யாவும் தலைவியைச் சுற்றியே அமைகின்றன. யாருடைய கூற்றுகளாயினும் தலைவியை முன்னிலைப் படுத்தியே நிகழ்கின்றன. தலைவியால் நேரிடையாகச் சொல் இயலாதவற்றைத் தோழிதான் சொல்ல வேண்டி உள்ளது. எனவே, கூற்றிற்கு உரியோர்களில் தோழி கூற்றே அக இலக்கியப் பாடல்களுள் இன்றியமையாததாக அமைகின்றது.

தோழி, இரவில் வரும் தலைவனை வழியின் தன்மையைக் கூறி பகலில் வருக என கூறுகிறாள்.

"தலைவிபால் காதல் உடையை என்பதோ இனிது, ஆனால் இடி என்றும் மழை என்னும் பாராமல் அஞ்சத்தக்க இரவில் நீ வருதல் இன்னாது. நீ இவள் பால் அன்புடையை என்பதோ இனிது. ஆனால் முகில் கறி படியும் மலைக் கணவாய் வழியாக நீ இரவில் வருதல் இன்னாது. யானை உலாவும் அரிய வழியில் நீ வேலேந்தி வருதல் எமக்க இன்னாது"[75] என்கிறாள். இக்கூற்றில் இன்னாது, இனிது, காதல் போன்ற

சொற்றொடர்களைப் பயன்படுத்தியிருப்பது இலக்கியத்தில் நயம் ஊட்டுவதாக அமைகின்றது.

இவ்வாறு சொல் நயம் பிற அகப்பாடல்களிலும் கையாண்டிருப்பதைக் காணலாம்.

**உரையாடல்**

சங்க குறிஞ்சித் திணைப் பாடல்கள் பல உரையாடல் தன்மையில் அமைந்திருப்பது காணத்தக்கதாகும். தோழியும் தலைவியும், தோழியும் தலைவனும், தலைவனும் தலைவியும் என்று உரையாடும் செய்யுட் பகுதிகள் நிரம்பக் காணலாம்.

தலைவன் விரைவில் மணம் செய்து கொள்ளும் பொருட்டு தலைவி தோழியோடு சென்று வரையுறை தெய்வத்திற்கு குரவையாடுகிறாள். அப்போது இருவரும் உரையாடும் விதமாக குறிஞ்சிக் கலியில் இடம் பெற்றுள்ளது.

**"நல்லாய்!**

**நன்னாள் தலைவரும் எல்லை, நமர்மலைத்**

**தன்நாணிதாம் தாங்குவார் என்றோற்றார் கொல்"**[69]

என்று தலைவி தோழியிடம் கேட்கின்றாள். அதற்குத் தோழி,

**"விண்தோய் கல்நாடனும் நீயும் வதுவையுள்**

**பண்டு அறியாதீர்போல் படர்கிற்பீர் மன்கொலோ"**[76]

என்கிறாள். இவ்வாறு தலைவியும் தோழியும் உரையாடும் விதம் இனிமைப் பயப்பதாக அமைகின்றது.

வரைந்து கொள்ளாமல் களவொழுக்கத்தில் ஈடுபடும் தலைவனை தோழி கண்டு வரைய வற்புறுத்துவதாக அமைந்த பாடல் உரையாடல் நிலையில் அமைந்துள்ளது.

**“பொங்கல் இளமழை புடைக்கும் நாட**

**நயவாய் ஆயினும் வரைந்தனை சென்மோ”**

என்று கூறுகிறாள். அதாவது கல்குகைகளில் மலரும் வேங்கை மலரை உடைய மலைநாடனின் மனைவி என்று பிறர் பாராட்டும் வண்ணம் அவளைக் கொண்டு செல்வாயாக என்று கூறுவதாக அமைந்துள்ளது.

**கதைக் கூறுகள்**

சங்கப் பாடல்களில் குறித்த பொருள் கூறுகளைப் புலவர்கள் புலப்படுத்திய பலமுறைகளில் ஒரு முறை பொருட் கூறுகளைக் கதை போல கதையாக்கிக் கூறுவதாகும். இவ்வாறு கதைபோலச் செய்தியுரைக்கும் பல பாடல்கள் சங்க இலக்கியங்களில் அமைந்துள்ளன. இவற்றுள் சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் அமைந்துள்ள கதைக் கூறுகளை இங்கு ஆராயப்படுகிறது.

சங்கப் பாடல்களில் குறும்பாட்டாகவும், நெடும்பாட்டாகவும் அமைந்த பல பாடல்கள் பின்னர் தோன்றிய, தமிழில் அமைந்த ஒருவன் அல்லது ஒருத்தியின் வாழ்க்கை நிகழ்வுகளை முறைப்படுத்தி, முழுமைப்படுத்தி செய்யுள் வடிவில் கதையாக்கப்பெற்ற காப்பிய இலக்கியங்கள், ஒருவரின் வீரதீரச் செயல்நலம் குறித்த கதைப்பாடல்கள், நாட்டுப்புறக் கதைகள், சிறுகதைகள், புதினங்கள் போன்றவற்றின் அமைவிற்கும் ஆக்கத்திற்கும் முன் உதாரணங்களாய் இருந்திருக்கின்றன என்பதை அறியலாம். அதனால் இக்காலத்தில் அறியப்படும் பலவகைக் கதைகளில் அமைந்த கதைக் கூறுகளாக சங்கப் பாடல்களில் காணலாம்.

தலைவி தன் தோழிக்கு கூறுவதாக அமைந்த பாடல். களவு காலத்தில் தம் இல்லத்தில் ஒரு நாள் தானும் தன் காதல் தலைவனும் தொடர்புபட நிகழ்ந்த நிகழ்வை எடுத்துச் சொல்வதாக பின்வரும் பாடலின் கருத்து அமைந்துள்ளது.

**“சுடர்தொடீஇ கேளாய் தெருவில்நாம் ஆடும்**

**……………………………………………………**

**……………………………………………………**

**நகைக் கூட்டம் செய்தான் அக்கள்வன் மகன்”**[77]

அதாவது தானும் தன் தாயும் தன் இல்லத்தில் இருக்கையில் தலைவன் தன் இல்லம் வந்தது, வந்த அவன் உண்ணும் நீர் கேட்டது, அன்னை (தாய்) அவனுக்குத் தன்னை உண்ணும் நீர் ஊட்டக் கூறியது, நீர் கொடுக்கச் சென்றபோது அத்தலைவன் தன் கையைப் பற்றியது, எதிர்பாராது நிகழ்ந்த இந்நிகழ்வால் தான் அலறியது, அதுகேட்டு அன்னை அவ்விடம் வந்தது, அப்பொழுது தன் கையைப் பற்றியவன் தன் காதலன் என அறிந்து நிகழ்ந்ததை மறைத்து அவன் நீர் அருந்திய பொழுது அவனுக்கு விக்கல் எடுத்ததாகத் தான் கூறியது, அன்னை அவன் முதுகினைத் தடவி விட்டது. அத்தலைவன் கள்வன்போல் தன்னை நோக்கிச் சென்றது போன்ற நிகழ்வுகளை தலைவி தோழி கேட்கக் கூறுகிறாள். கதை என்பது முன் நிகழ்ந்ததைக் கூறுவது. மேற்கண்ட அப்பாடலும் இவ்வாறே அமைந்துள்ளமைக் காண முடிகிறது.

தோழி தலைவனுக்கு கூறுவதாக அமைந்த மற்றொரு பாடல். கதைக் கூறுகளை முழுமையாகக் கொண்டாக அமைந்துள்ளது. தலைவி தன் களவொழுக்கத்தைத் தனக்கு உரைக்கவும் புலப்படுத்தவும் செய்யாம நிலையில், அவளுடைய காதலைத் தான் அறிந்துள்ளதாகத் தோழி கூறும் வகையால் இப்பாடல் அமைந்துள்ளது. மேலும் தலைவிக்கும் ஒரு தலைவனுக்கும் களவு காலத்தில் நிகழ்ந்த காதல் நிகழ்வுகளைத் தோழி தனக்கும் பிறிதொருவனுக்கும் நிகழ்ந்ததாகக் கூறும் உத்தி முறையில் கீழ்க்கண்ட பாடல் அமைந்துள்ளது.

**“கயமலர் உண்கண்ணாய் காணாய் ஒருவன்**

**……………………………………………………**

**……………………………………………………**

**ஒண்குழால் செல்கெனக் கூறி விடும்பண்பின்**

**அங்கண் உடையன் அவன்”**[78]

களவொழுக்கத்தில் ஈடுபடும் தலைவன் பலநாள் தலைவியைக் காணப் பெறாமையால் காதல் நோய்பட்டுத் தலைவியைக் காண விலங்கினங்களை வேட்டையாடுவானாக வந்தது, காதலை வெளிப்படக் கூற முடியாமல் பல நாள் அவன் வந்து சென்றது, தலைவியும் தன் காதலை உரைக்க முடியாமல் இருந்தது. ஒரு நாள் தலைவி ஊஞ்சல் ஆடிக் கொண்டிருக்கையில் அத்தலைவன் அங்கு வந்தது, அவனைத் தான் ஆடும் ஊஞ்சலை ஆட்டிவிடக் கூறியது, அவன் ஊஞ்சல் ஆட்டியது, அவன் ஊஞ்சல் ஆட்டுகையில் தலைவி அவன் மார்பில் விழுந்தது, அவன் தலைவியைத் தழுவிக் கொண்டது, அவள் அவன் மார்பின் மீதிருந்து எழுந்திருக்காமல் பாய்ந்து கிடந்தது போன்ற நிகழ்வுகள் இப்பாடலில் கூறப்பட்டுள்ளன.

இப்பாடலிலும் முற்பாடலில் அமைந்தன போல கேட்போரை விளித்துரைத்தல், நிகழ்வுக்குரியாரை விவரித்தல், நிகழ்ச்சிகளை விவரித்தல் போன்ற கதைக் கூறுகள் அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

செவிலித் தாய்க்குத் தோழி அறத்தொடு நின்றல் நிலையில் பொருள் அமைந்த பாடல். அன்னையாகிய செவிலியைத் தோழி விளித்துரைக்கும் வகையில் அமைந்துள்ளன.

**“அன்னாய் ! வாழி ! வேண்டு அன்னை ! நின்மகள்**

**பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு**

**…………………………………………………**

**........................................ மற்று இவன்**

**மகனே தோழி ! என்றனள்”**[79]

தலைவி ஊனும் பாலும் உண்ணாமை, தலைவியின் உடல் பசந்தமை, இது குறித்துத் தோழியிடம் செவிலி கேட்டமை, தோழி அதற்கு பதில் உரைத்தமை என்று இப்பாடல் செய்து அமைந்துள்ளது.

இவ்வாறு கேட்போரை விளித்துக் கூறுதல், இடை நிறுத்தி அவர் கேட்கும்படியாகக் கூறுதல், நிகழ்வுகளை நிரல்பட அமைத்துக் கூறுதல், செய்திக்குத் தொடர்புடையாரைக் காட்சிப்படுத்திக் கூறுதல் போன்றவை கதை கூறும் அமைப்பில் காணலாகும் கூறுகள் சங்கக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

## தொகுப்புரை

இலக்கியங்கள் கேட்டு உய்த்துணரக் கூடிய வகையில் அமைய வேண்டுமெனில் அவற்றில் சுவை பயக்கக்கூடிய நயங்கள் இருக்க வேண்டும்.

சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாடல் அனைத்திலும் அச்சுவைக் கூறுகள் நிரம்பக் காணப்படுகின்றன.

உவமை, உள்ளுறை, இறைச்சி, உருவகம், வருணனை, கற்பனை, அணிநயம், உருவகம், நனவோடை, இசை நயம், ஒலி நயம், சொல்நயம், உரையாடல், கதைக் கூறுகள் போன்றவைகள் குறிஞ்சித் திணைப் பாடல்களில் இடம் பெற்று, பாடல்களை படித்து இன்புறத்தக்க வகையில் அமைந்துள்ளனன.

இந்நயங்கள் சங்கப் புலவர்களின் புலமைத் திறனுக்கும், புலப்பாட்டுத் தன்மைக்கும் எடுத்துக்காட்டுவனவாக அமைந்துள்ளதை இவ்வியலின் மூலம் அறியமுடிகின்றது.

சங்கப் புலவர்கள் தாம் சொல் வந்த கருத்து, கேட்போரின் மனதில் அப்படியே பதிய வேண்டும், பதிந்த அவை நிலை பெற்றிருக்க வேண்டும் என்பதற்காக கருத்துக் கோவையாக இல்லாமல் அணிகளையும், கற்பனைகளையும், வர்ணனைகளையும் இயைத்து மக்கள் இன்புறுமாறு படைத்துக் காட்டியிருப்பது உணர்ந்து, உய்த்துப் போற்றும் வகையில் அமைத்திருப்பது பாராட்டுக்கும் மேலும் பல ஆய்வுக்கு வழிகாட்டப் பயன்தரத்தக்கதாகவும் அமைந்துள்ளது என்பது புலனாகின்றது. கருத்துப் புலப்பாட்டிற்கு இத்தகைய கவிதை நயம் தேவை என்பதும் அறிய முடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. தொல். 1222
2. மேலது, 1224
3. மேலது, 1225
4. மேலது, 48
5. க. வீரகத்தி, கடலும் படகும், ப. 3
6. சுந்தரமூர்த்தி, திருக்குறள், அணி நலம், ப. 20
7. வி.கோ.சூரியநாராயண சாஸ்திரியார், தமிழ் மொழி வரலாறு, ப. 60
8. மணி.27, பா.எண். 9-13
9. இளம்பூரணர் உரை, தோற்றுவாய்
10. குறுந். பா. 81, 160, 95, 179, 239, 284
11. நற். 32, 225, 13, 267
12. கலி. 40, 42, 43, 59
13. ஐங். 211
14. மேலது. 215
15. மேலது. 264
16. அகம். 62, 88, 148, 168
17. தொல். பொருள். 49
18. மேலது. 51
19. மேலது. 112
20. ஐங். 209, 213, 214, 253
21. குறுந். 38, 13, 90, 208, 241
22. அகம். 52, 68, 72, 78
23. நற். 22, 25, 36, 44
24. கலி. 40, 46, 50, 52

25. தொல். பொருளியல், 35
26. மேலது, 36
27. மேலது, 33
28. தொல். 1177
29. நம்பி. 240
30. மாறனலங்காரம், 176
31. வீரசோழியம், 118
32. வேங்கடராசலு ரெட்டியார்,வெ.இறைச்சிப் பொருள், பக். 188-197
33. மீனாட்சி சுந்தரனார், தெ.பொ.மீ, தமிழ் நூல்களில் குறிப்புப்பொருள், ப. 122
34. விஸ்வநாத சாஸ்திரி, கே.எஸ். உள்ளுறையும் இறைச்சியும், ப. 1-3
35. துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு. ஐங்குறுநூறு உரை, முன்னுரை
36. குறுந். 69, 302
37. அகம். 72
38. நற். 6, 13, 17, 34
39. கலி. 41
40. தண்டி. 34
41. சுந்தரமூர்த்தி.கு, தண்டியலங்காரம், ப. 95
42. மு. வரதராசனார், இலக்கியத் திறன், ப. 229
43. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கிய கலை, ப. 186
44. ஐங். 202
45. குறுந். 115
46. நற். 36
47. அகம். 208
48. வரதராசன். மு.டாக்டர், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 34

49. இராசமாணிக்கனார், வாழ்வியற் களஞ்சியம்
(தொகுதி மூன்று) ப. 835
50. ஐங். 209, 261, 291
51. அகம். 120
52. குறுந். 134
53. நற். 95
54. நற். 359
55. கந்தசாமி.சோ.ந. குறுந்தொகைத் திறனாய்வு, ப. 22
56. மேலது, ப. 24
57. வரதராசனார், முனைவர். மு, இலக்கியத் திறன், ப. 62
58. குறுந். 36
59. கலி. 44
60. அகம். 62
61. ஆறுமுக நாவலர் (ப.ஆ) நன்னூற் காண்டிகையுரை, நூ. 45
62. டாக்டர்.மு. வரதராசனார், திருக்குறள் அணி நலம், நூ. 45
63. குறுந். 355
64. அகம். 292
65. கலி. 55
66. நற். 88, 344
67. அரங்க. சுப்பையா, இலக்கியத் திறனாய்வு கொள்கைகள், ப. 248
68. ஞானமூர்த்தி, தா.ஏ, இலக்கியத் திறனாய்வியல், ப. 232
69. நற். 257
70. குறுந். 223
71. கலி. 42
72. குறுந். 365
73. மேலது. 78

